# ல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள்

டாக்டர். துளசி. இராமசாமி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
டி டி. டி. ஐ. அஞ்சல், தரமணி, சென்னை-600 113.

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | Nellai Maavatta Naattup-purat-teyvangal |
| Author | : | Thulasi. Ramasamy (Ramy) |
| Publisher | : | International Institute of Tamil Studies, Madras-600 113. |
| Publication Number | : | 109 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | March 1985 |
| Paper used | : | 14.2 kg. D, Dy white Printin |
| Size of the book | : | 21 x 18 cms. |
| Printing types used | : | 10 Point |
| Number of copies | : | 1200 |
| Number of Pages | : | i—vi + 174 |
| Price | : | Fifteen Rupees only |
| Printers | : | Meipporul Achagam, Madras-23. |
| Binding | : | Paper back |
| Artist | : | A. Velusamy |
| Subject | : | FolK deities in Tirunelveli District. |

டாக்டர். ச. வே. சுப்பிரமணியன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
டி. ஐ அஞ்சல்,
தரமணி,
சென்னை-600 113.

# அணிந்துரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பலவகையான, பல வேறுபட்ட பொருளில் ஆய்வு செய்துகொண்டு வருகின்றது. தமிழகத்தை, தமிழகத்தின் பண்பாட்டை தெளிவாகத் தெரிந்துகொள்வதற்கு இந்த ஆய்வு தேவைப்படுகிறது. இதுவரை நிறுவனம் நூற்றுக்கு மேற்பட்ட நூல்களை வெளியிட்டிருந்தாலும் 'நாட்டுப்புறத் தெய்வங்கள்' பற்றிய முதல் முயற்சியாக இந்த நூல் அமைகின்றது. தமிழக நாட்டுப்புற மக்கள் தங்கள் நம்பிக்கையின் அடிப்படையில் பலவகையான தெய்வங்களை வணங்கி வருகின்றனர். அந்த நாட்டுப்புற தெய்வங்கள் காரணமாக கும்மி, கோலாட்டம், குறவஞ்சி, வில்லுப்பாட்டு போன்ற பலவிதமான நாட்டுப்புற இலக்கியங்களும் தோன்றி வளர்ந்துள்ளன. நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள் பற்றிய இந்நூலை டாக்டர் துளசி. இராமசாமி அவர்கள் நல்ல முறையில் கள ஆய்வு செய்து செய்திகளைத் திரட்டி தொகுத்து வகுத்து விளக்கி, பெருக்கி அமைத்துள்ளார். அது மிகவும் பாராட்டிப் போற்றத்தக்கது. இதன் வாயிலாக பல செய்திகள் நமக்குத் தெரியவருகின்றது. இந்த நூலை உரிய காலத்தில் நிறைவு செய்து தந்த டாக்டர் துளசி. இராமசாமி அவர்களைப் பாராட்டி மகிழ்கின்றேன். உரியகாலத்தில் அச்சிட்டுத்தந்த மெய்ப்பொருள் அச்சகத்தார்க்கு எங்கள் நன்றி.

நிறுவனப் பணிகள் அனைத்திற்கும் ஊக்கமும் ஆக்கமும் தருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

அன்புள்ள,
(ச. வே. சுப்பிரமணியன்)

நாட்டுப்புறத் தெய்வங்களாகிய

நம் முன்னோர்களுக்கு

# என்னுரை

ஆறு திங்களுக்குள் கள ஆய்வுப் பணியை முடித்து நூலும் எழுதித்தர வேண்டுமென்பது ஆணை. அக்காலக் கெடுவிற்குள் இவ்வாய்வை இயன்றளவு செய்திருக்கின்றேன். என் கள ஆய்வுப் பணியில் கிடைத்த தரவுப்படியே இந்நூல் ஆக்கம் பெற்றுள்ளது. நாட்டுப்புறக் கலைகள் எனக்குப் புதியதல்லவென்றாலும், நாட்டுப்புறச் சமயம் எனக்குப் புதியதே ஆகும். இவ்வகையில் இது எனக்கு புதிய முயற்சி; ஆகவே ஆய்வில் சறுக்கல் இருக்கலாம். இவ்வாய்வும் முடிந்த முடிபல்ல. மேலும் இதுபற்றிய ஆராய்ச்சிக்கு முன்னுதாரணமாகக் கூட அமையலாம். தவறுகளைச் சுட்டிக் காட்டித் திருத்தம் பெற உதவ வேண்டுகிறேன்.

இந்நூலாக்கம் பெற எல்லாவகையிலும் தாயன்போடு உதவி, ஆதரவளித்து வரும் நிறுவன இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்களுக்கு உள்ளன்போடு நன்றி கூறக் கடமைப் பட்டுள்ளவன். மூலப்படியைப் படித்து, திருத்தம் பெற உதவிய பேராசிரியர் ஆ. சிவலிங்கம் அவர்களுக்கு நன்றி; அவ்வப்போது கருத்துப் பரிமாறலுக்கு உதவிய என் ஆய்வறை அன்பர்களுக்கு நன்றி; கள ஆய்வில் உதவிய அன்பர்களுக்கும் பேட்டி கொடுத்துதவிய அன்பர்களுக்கும் நன்றி; அவ்வப்போது தேவைப்படும் போதெல்லாம் நூல்களைத் தேடி எடுத்துக்கொடுத்தும் புதிய நூல்களை வாங்கிக் கொடுத்தும் உதவிய உலகத் தமிழாராய்ச்சி நூலகருக்கும், நூலக அலுவலர்களுக்கும் நன்றி; வாஞ்சையோடு அச்சக வேலைகளுக்குத் துணை நின்ற அலுவலக மேலாளர் திரு வீரபாகு சுப்பிரமணியம் அவர்களுக்கு நன்றி.

என் கையெழுத்தைப் புரிந்து கொண்டு தட்டச்சுச் செய்து கொடுத்த திரு. வாசுதேவனுக்கும் நன்றி; சிறப்பாக அச்சிட்டுக் கொடுத்த அச்சக உரிமையாளருக்கும், அச்சக ஊழியர்களுக்கும் நன்றி; அட்டைப்படம் செம்மையாக வரைந்து கொடுத்த ஓவிய அன்பருக்கும் நன்றி.

அன்புள்ள,

துளசி. இராமசாமி

# பொருளடக்கம்

# 1. முன்னுரை

நளினம் நளினம் அல்லாதவை—அதாவது செம்மைப் பட்டது, செம்மைப்படாதது என்று இருவகைப் பகுப்பு எதிலும் உண்டு. அம்முறையில்தான் மக்கள் வாழ்வியலையும் இரண்டாகப் பகுக்கின்றனர். படித்தவன், படிக்காதவன், தெரிந்தவன் தெரியாதவன்; என்ற வேறுபாடும் இதில் அடங்கும். படித்தவன், தெரிந்தவன், அறிந்தவன் நிதானமாக அடக்கமாக ஆரவாரமின்றிப் பேசுவான், ஆனால் படிக்காதவன், அறியாதவன் எதையுமே—தனக்குத் தெரிந்ததை ஆரவாரத்தோடுதான் பேசுவான், பாடுவான், குதிப்பான். அறிந்ததற்கும் அறியாததற்கும் உள்ள வேறுபாடு ஒன்று உண்டு. அதுதான் நாட்டுப்புறம் என்பது. ஆரவாரந்தான் நாட்டுப்புறம். பாமர மக்கள்—படிக்காத மக்கள்—அறியாத மக்கள் நாட்டுப்புற மக்கள் ஆவர். அவர்கள் எதையுமே ஆரவாரத்தோடு —பேரிரைச்சலோடுதான் சொல்வார்கள். அடக்கமாக எதையும் சொல்ல மாட்டார்கள். நாட்டுப்புற மக்கள் வாழ்வியலின் எல்லாக் கூறுகளும் நாட்டுப்புறத்தைச் சார்ந்தவை ஆகும்.

இம்மக்கள் இலக்கியம்—எழுதப்படாத இலக்கியம், நாட்டுப்புற இலக்கியமாகும். நடை உடை பாவனை, உடுப்பது, உண்பது, ஆடுவது, விளையாடுவது, பாடுவது, படுப்பது, காண்பது, சண்டையிடுவது, ஆள்வது, வணங்குவது எல்லாவற்றிலும் ஆரவாரத்தைக் காணலாம்—நாட்டுப் புறத்தைக் காணலாம். ஆரவாரம் பொருந்தியவைதாமே நாட்டுப்புறக் கலைகள். இக்கலைகளின் வழிப்பட்டதுதான் வழிபாடு; இவ் ஆரவார வழிபாடு கொண்டதுதானே தெய்வம்; அத் தெய்வ முறைதானே சமயம். ஆக, நாட்டுப்புறச் சமயம் என்பது ஆரவாரத்தோடு கூடிய வழிபாடுகள் கொண்ட—வரன்முறையில்லாத வழிபாடுகள் கொண்ட—கண்மூடித்தனமாக பண்டுதொட்டு வருகின்ற பழக்கத்தை மாற்ற விரும்பாத—பாமரத்தனமான வழிபாடுகள் கொண்ட கொள்கைதான்—நாட்டுப்புறச் சமயம் ஆகும். இச்சமய.வழிபாடுகள் உடைய தெய்வம் நாட்டுப்புறத் தெய்வமாகும்.

இந் நாட்டுப்புறத் தெய்வத்தைச் சிறு தெய்வம் என்றும் அழைப்பார்கள். செம்மைப்பட்ட நெறியை—ஆகம விதிகளின்படி முறையோடு நடக்கும் நெறியை பெருநெறி என்றும்

அவ்வாறு இல்லாது நடைமுறைக்கு — மக்கள் நல முறைக்கு உகந்தவாறு—மரபுவழி வழிபடும் நெறியை சிறுநெ என்றும் அழைக்கலாம். இதைத்தான் அறிஞர்கள் பலரும் கூ கின்றனர். இதைத்தான் சிறுமரபு பெருமரபு என்று கூறுகின்றன இந்து சமயத்தில் இந்த பகுப்பு முறை பண்டு தொட்டு இருந் வருகின்றது. ராபர்ட் ரெட் ஃபீல்ட், பண்பாட்டு விளக்கத்தில் பெரு மரபு, சிறுமரபு என்னும் இவ்விரு கருத்துப் படிவங்களையு பெரிதும் பயன்படுத்தியுள்ளார். (ம. வேலுச்சாமி, 1983:253). ஞானிகள், சமயச் சான்றோர், இலக்கிய ஆசிரியர்கள் ஆகியோர் மரபு பெருமரபு; பாமர மக்களின் மரபு சிறுமரபாகும். சிறுமரபு எழுத் தறிவற்ற பாமர மக்களிடம்—அவர்களின் சமுதாயத்தில் தானே தோன்றி வளருவது. பெருமரபு, சான்றோரால் நினைவு கூர்ந்தும் செம்மை செய்யப்பட்டும் வளர்க்கப்படுவது. பெருமரபு நூல் களின் : மூலம் பாதுகாக்கப்படுகின்றது. ஆனால் சிறுமரபு மக்களின் வழக்கின் மூலமே நடைமுறைப் படுத்தப் படுகிறது.

இச்சிறு மரபாகிய, சிறு நெறிப்பட்டவைதாம் சிறு தெய்வங்கள் ஆகும். கிராமத் தெய்வங்களே—ஊர்த் தெய்வங்களே—குலத் தெய்வங்களே— இனத் தெய்வங்களே சிறு தெய்வங்களாகும். கிராம மக்கள்—பாமர மக்கள் பண்டுதொட்டு மரபுவழிப்பட்டு முன் னோர் வழங்கி வந்த வழி—நம்பிக்கையோடு வணங்கி வழிபட்டு வருவனதாம் சிறு தெய்வங்களாகும். இம் முறையே நாட்டுப் புறச் சமயமாகும். இதைத்தான் கிராமத் தெய்வங்கள் என்றும், கிராமத் தேவதைகள் என்றும், உள்ளூர்த் தெய்வங்கள் என்றும், கிராமத் தேவதை வழிபாடு, சிறு தெய்வ வழிபாடு என்றும், கூறு கின்றார்கள்.

இந்நாட்டுப் புறச்சமயம் குறித்த ஆய்வினை மேற்கொண்ட போது, ஆய்விற்குரிய களமாக—நெல்லை மாவட்டம் தேர்ந்தெடுக் கப்பட்டது. ஆய்வாளனுக்குச் சொந்த மாவட்டம் என்ற முறை யிலும், நாட்டுப்புற இலக்கியங்கள்—செல்வங்கள் அன்றிலிருந்து இன்றுவரை செழுமைப்பட்டு வருகின்ற பூமி என்ற முறையாலும் அம்மாவட்டம் தேர்ந்தெடுக்கப்பட்டது. ஆய்வினை முடிக்கும் காலம் வரையறுத்துக் கொள்ளப்பட்டது. அக்கால எல்லைக்குள் மாவட்டம் முழுவதும் களப்பணி செய்து முடிப்பது என்பது நடை முறைச் சாத்தியமல்ல. ஆகவே ஒரு வட்டத்தை—தாலுகாவை எடுத்துக் கொண்டு செய்வது என்ற முறையில் விளாத்திகுளம் வட்டம் தேர்ந்தெடுக்கப்பட்டது.

விளாத்திகுளம் ஆய்வாளருக்குச் சொந்த வட்டமாகும். வட்டத்தில் எல்லாப் பகுதிகளும் நன்கு அறிமுகமானவையாகும். களப்பணி செல்லும்போது ஏற்படும் இடர்ப்பாடு இதில் இருக்காது. அடுத்து, விளாத்திகுளம் முழுக்க முழுக்க கிராமங்களை—பெரும்பாலும் குக்கிராமங்களை—ஊர்களைக் கொண்ட வட்டம். கிராமத்தனமான நாட்டுப்புறத் தனமான வட்டம் என்று கூறலாம். அங்கு நகரமே கிடையாது—இக்கால நகராட்சி அமைப்பே அங்கு இல்லை. ஆகவே கிராமங்கள் மிகுதியாக உடையதாலும் நாட்டுப்புற மக்களின் செல்வாக்கும் மிகுதியாக இருக்கின்ற காரணத்தாலும் நெல்லை மாவட்டத்தில் வேறு எங்கும் காணமுடியாத நாட்டுப்புற வாடை மிகுதியாக வீசக்கூடியது விளாத்திகுளம் தான். ஆகவே, விளாத்திகுளம் வட்டம் ஆய்வுக் களமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

மேல்மாந்தை என்ற ஊருக்கு முதலாவதாக ஆய்வாளர் களப்பணிக்குச் சென்றார். நாட்டுப்புறக் கலைஞர்கள் மிகுதியாக இருக்கும் ஊர். அங்குள்ள சிறு தெய்வங்கள் இருக்கும் கோயில்கள் அத்தனையையும் பார்த்துக் கொண்டிருக்கும் போது ஆய்வாளர் மனத்தில் ஒரு கருதுகோள் எண்ணப்பட்டது. அடுத்தடுத்து, அன்றே மூன்று கிராமங்கள்—சூரங்குடி, சண்முகாபுரம், கே. சக்கணாபுரம் ஆகியவற்றிற்கும் சென்று கள ஆய்வில் ஈடுபட்டார். சக்கணாபுரம் திரு. பால்சாமி அவர்கள் அவர் சார்ந்த ரெட்டியார் இனக் கோயில்களைப் பற்றி விளக்கமாகச் சொல்லி வந்தார். அப்போது ஏற்கெனவே ஆய்வாளர் மனதில் உருப்பெற்ற கருதுகோள் உறுதிப்பட்டது. கிராமங்களில் எல்லா இன மக்களாலும் கொண்டாடப் பெறும் தெய்வங்கள், அவர்களின் முன்னோர்களாக இருந்து வீர மரணம் அடைந்தவர்களாக இருக்க வேண்டும். அல்லது அகால மரணம் அடைந்தவர்களாக இருக்க வேண்டும். குடும்பத்திற்காக—இனத்திற்காக-ஊருக்காகத் தியாகம் செய்து மடிந்தவராக இருக்க வேண்டும். இவ்வாறு மடிந்தவர்களை அவர்களின் வழிமுறையினர்—சந்ததியினர் தெய்வ நிலைக்கு உயர்த்தியிருக்க வேண்டும். இப்படித்தான் சிறு தெய்வங்கள் பெருகியிருக்க வேண்டும்.

இக் கருதுகோளின் அடிப்படையில் செய்திகளை—தரவுகளை விருப்பு வெறுப்பின்றிச் சேகரித்தார். விளாத்திகுளம் வட்டத்தில் உள்ள அத்தனை ஊர்களுக்கும் சென்று தரவுகளைத் திரட்டினார்.

இதன்பின், இதற்குத் துணைபோகக் கூடிய ஆய்வு ஏடுகளும், புத்தகங்களும் படித்தறியப்பட்டுப் பக்கபலமாக்கிக் கொள்ளப்பட்டன.

இவ்வாறு பல புத்தகங்களைப் படிக்கும்போது டபிள்யூ எல்மோர் (W. T. Elmore) எழுதிய புத்தகமும் (Dravidian Gods Modern Hinduism) பிஷப் வொய்ட்ஹெட் (Bishop white heac எழுதிய புத்தகமும் (The Village Gods of South India, ஆய்வாளருக்குப் புதிய தெம்பைக் கொடுத்தன. தென்னிந்தியக் கிராமங்களில் வழிபடும் தெய்வங்கள் மேனிலை ஆக்கத்தைச் சார்ந்த தெய்வங்கள் இல்லையென்றும், அவை திராவிடத் தெய்வங்கள் என்றும் பட்டது. வழிபாட்டு முறை, தெய்வ அமைப்பு எல்லாம் திராவிட சமய நெறியைச் சார்ந்தது என்று தெரிந்து கொள்ளப்பட்டது. அம்முறையில் நாட்டுப்புறத் தெய்வங்கள் என்று தமிழ்நாட்டில் வழங்குபவை திராவிடத் தெய்வங்கள் என்றும் பெரு மரபு சிறுமரபு என்று பாகுபடுத்தத் தேவை இல்லை என்றும், கிராமச் சமயம் என்றாலே திராவிடச் சமயம் என்றும் கிராம தெய்வங்கள் என்றாலே திராவிடத் தெய்வங்கள் என்றும் கொள்ளப் பட்டது.

இப்போது இந்து சமயத்தில் ஒரு அங்கமாகக் கொள்ளப்படுவது தான் திராவிட சமயம். தென்னிந்தியாவில் 80%-க்கும் மேலான மக்கள் திராவிட சமயத்தைச் சார்ந்தவர்கள். இச்சமயம் மிகப் பழமையாக இருந்தபோதும் இந்துச் சமயத்தில் இதற்கு முக்கியத் துவம் கொடுப்பதில்லை.

ஊர்த் தெய்வங்கள் அல்லது கிராமத் தெய்வங்களைப் பற்றிய முறையான வழிமுறைகள் இல்லாததே இதற்குக் காரணமாகும். அவற்றைப் பற்றிய சுவையான ரசிக்கத் தக்க தத்துவ முறைகள் கொடுக்கப்படவில்லை. திராவிட மக்கள் பெரும்பாலும் படித்தவர்கள் அல்ல; பாமரர்கள். அவர்களுடைய கடவுள்களைப் பற்றிய புத்தகங்கள், வேதங்கள் இல்லை. கிராமத் தெய்வங்கவைப் பற்றிய முறையான வரலாறு இல்லை. தெருப்பாடகர்களே தெய்வங்களைப் பற்றிய குழப்பமான கதைப் பாடல்களைப் பாடுகிறார்கள்; அதுவும் பொங்கல் அல்லது கொடை நடக்கும்போது மட்டும் பாடுகிறார்கள். அவர்கள் வழிபாட்டிலும் உதவுகிறார்கள்.

மனப்பாடம் செய்துவைத்த தங்களின் நினைவலைகளிலிருந்து இதைப் பாடுகிறார்கள். பாடுபவர்களுக்குப் படிக்கத் தெரியாது.

ஆகவே புத்தகங்கள் இருந்தாலும் அவர்களுக்குப் பயன்படுவதில்லை. [illegible]ருக்கும் பாடல்களும் பழைய ஏட்டுச் சுவடிகளிலே இன்னும் பொதிந்து கிடக்கின்றன. சில சமயங்களில் சில பகுதி [illegible] அத்தகைய ஏட்டுச் சுவடிகளைப் பதிப்பிக்க முயலும்போது எந்[illegible]ம் எழுகிறது.

பாமர மக்களிடையே இந்த வழிபாடு நடைபெறுகிறது. ஆகவே அவர்களிடமிருந்து தெய்வங்களைப் பற்றிய தெளிவான விளக்கம் கிடைக்காது. அவர்களை மன்றாடிக் கேட்கும்போதும் சொல்லத் தயங்குகிறார்கள். அப்படிச் சொன்னால் தங்களுக்குக் கெட்ட ஆவிகளின் தொல்லை நேருமோ என்று பயப்படுகிறார்கள்.

படித்தவர்கள் தாங்கள் வழிபடும் கடவுள்களைப் பற்றிய செய்திகளைத் தெரிந்துகொள்ள ஆர்வம் காட்டுவதில்லை. தெரிந்தாலும் சொல்லுவதில் அக்கறை காட்டுவதில்லை. தீண்டாதவர்கள் வழிபடும் கடவுள்கள் என்று ஒதுக்குகிறார்கள். பிராமணர்கள் தெரிந்தாலும் சொல்வதில்லை; தெய்வத் தொடர்பு கொள்ளுவதற்கு [illegible]ட்கப்படுகிறார்கள்.

இவ்வாறான நிலையில்தான் தரவுகளைச் சேகரிக்க முடிந்தது. செய்திகளைச் சேகரித்துக் கொண்டபின் பின்வருமாறு அமைத்துக் கொள்ளப்பட்டது.

## நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள்

1. முன்னுரை
2. நாட்டுப்புறத் தெய்வம்
3. விளாத்திகுளம் எனும் நாட்டுப்புறம்
4. ஊர்த் தெய்வங்கள்
5. இனத் தெய்வங்கள்
6. குலத் தெய்வங்கள்
7. மாலைத் தெய்வங்கள்
3. சமாதித் தெய்வங்கள்
9. துணைத் தெய்வங்கள்
10. நாட்டுப்புறத் தெய்வங்களின் தோற்றமும் வளர்ச்சியும்
11. நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டின் அடிப்படைக் கருத்துகள்
12. நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டு முறைகள்
13. முடிவுரை.

# 2. நாட்டுப்புறத் தெய்வம்

பொதுவாகக் கிராம வாழ்க்கையை நாட்டுப்புற வாழ்க்கை என்று சொல்வதுண்டு. அந்த நாட்டுப்புற வாழ்க்கையோடு இணைந்ததுதான் நாட்டுப்புறச் சமயம். ஆகவே ஒரு கிராமத்து மக்களின் வாழ்வியலை அறிய வேண்டுமானால், அக்கிராமத்திலுள்ள கோயில்களையும் தெரிந்து கொள்ள வேண்டும்; அங்குள்ள தெய்வங்களைக் கண்டு கொள்ள வேண்டும். கிராமம் என்றாலே நாட்டுப் புறந்தான். அங்கு நகர வாடையிருந்தால் அது ஊடுருவல் தான். ஆகவே கிராமத்திற்கு நாட்டுப்புறத் தெய்வங்கள்தாம் உயிர்நாடி; அவை அக்கிராம மக்களால் உருவாக்கப்பட்டவை; தங்கள் வாழ்க்கை மேம்பாட்டுக்காக, வழிமுனையினர் சீர்குலைக்காமல் இருப்பதற்காக அமைக்கப்பட்டவைதாம் சிறு தெய்வங்கள். சிறு தெய்வம் அல்லது நாட்டுப் புறத் தெய்வம், பெருந்தெய்வங்களோடு ஒட்டி உறவாடாதவை; அவ்வாறு இல்லாமல் உறவு இருப்பதாகக் கருத்து நிலவுவது ஒவ்வாததாகும். மனிதத் தலைவர்கள் தாம் நாட்டுப்புறத் தெய்வங்கள்; அவைதாம் சிறு தெய்வங்கள் ஆகும்.

நாட்டுப்புறத் தெய்வங்கள் வழிபாட்டு முறையில் மக்களின் தேவைகள் இருக்கும்; அவர்களின் தேவைக்குத் தகுந்தவாறு அவற்றில் மாறுபாடு ஏற்படும். முக்கியமான தேவையாக இருந்தால் அது நடைமுறைப்படுத்தப்படும். அதுவே மரபாக்கப்படும். வழிமுறையினரும் அதைப் பின்பற்றி வருவார்கள். ஆகவே நாட்டுப்புறத் தெய்வங்கள் மக்களின் நண்பர்கள் போன்று இருப்பவை. நாயைக் கையில் பிடித்துக் கொண்டிருக்கும் சங்கிலிக் கருப்பசாமி, மாடசாமி ஆகிய காவல் தெய்வங்கள் மக்களுக்கு உயிர் காக்கும் தோழர்களாக மதிக்கப்படுகின்றன. நாட்டுப்புறத் தெய்வங்கள், மக்களின் பெருக்கங்களாகி உயர்நிலையில் வைத்துப் போற்றப்படுகின்றன. இந்நாட்டுப்புறத் தெய்வங்களை ஊர்த் தெய்வங்கள் என்றும் குலதெய்வங்கள் என்றும் இனத் தெய்வங்கள் என்றும் அழைத்து வருகின்றனர்.

**முன்னோர் வழிபாடே திராவிடத் தெய்வம்**

இத் தெய்வங்களுக்கு—தம் முன்னோர்களுக்கு மக்கள் மரியாதை கொடுக்கும் முகத்தான் வழிபாடு என்ற பெயரில்

பொங்கல் என்றோ கொடை என்றோ பெயரிட்டு வணங்குகிறார்கள்.

அம்மக்கள், முன்னோர்களை, தம் முன்னோர் மரபுவழி வரபட்டு வந்த காரணத்தினால், தமக்குள்ள வேறுபாட்டை அத் தெய்வங்கள் முன்னிலையில் தீர்த்துக் கொள்ள விழைகின்றனர். ஆகவே தான் பொங்கல் சமயங்களில் வேற்று ஊர்களில் இருக்கும் தம் உறவினர்களை அழைத்து விருந்தோம்புகின்றனர். கருத்து வேறுபாடோடுகூடிய தம் இனத்தார்களையும், உறவினர்களையும் அழைத்து வருகின்றனர். அவ்வாறு அழைக்கவில்லையென்றால் பகைமை நீண்டுகொண்டே போகும், அதற்காகத்தான் வழிபாடு. சமுதாயத்திலுள்ளவர்களுக்குள்ள உறவு அந்தக் குறிப்பிட்ட கால அளவைக்குள் எப்படி இருக்கிறது என்று அறிவதற்கு ஒரு வாய்ப்பைக் கொடுப்பது திருவிழாவாகும். இத்திருவிழாக் காலத்தில்தான் மக்கள் வேறுபாடுகளைப் பற்றிப் பேசித் தீர்த்துக் கொள்ள முடியும்' என்று சூசன் ஹென்செட் என்பார் விளக்கிக் கூறுகின்றார். (1970:80).

அதுபோன்றே திருமணம் போன்ற காரியங்கள் நிச்சயமாவதற்கும் இந்தப் பொங்கல் பயன்படுகிறது. விருதுநகரில் மாரியம்மன் கோயில் திருவிழாவின்போது திருமணமாகாத பெண்களை வரன் தேடுவதற்காக அம்மன் பவனி வரும்போது அவர்கள் கடை, வீட்டு முற்றங்களில் தனியே அலங்காரம் பண்ணி வைப்பது இன்றும் நடைமுறையில் உள்ள வழக்கம். உறவுமுறைக்காரர்களும் இப்பொங்கல் வைபவங்களில்தான் மணமக்களை நிச்சயம் செய்து கொள்கிறார்கள். இது தங்கள் வீட்டுப் பெரியவர்கள் முன்னிலையில் நிச்சயம் செய்து கொள்வதுபோல் ஆகும்; தங்கள் ஊர்த் தெய்வக் கோயில் சாமிகளின் முன்னிலையில் நடக்கச் செய்கிறார்கள், ஆக, நாட்டுப்புறத் தெய்வங்கள் என்பது அவர்களின் முன்னோர்கள் என்பதற்கு ஆதாரமாக அமைகிறது.

ஆக, தமிழகத்தில் நாட்டுப்புறத் தெய்வங்கள், சிறு தெய்வங்கள் என்று சொல்வதெல்லாம் திராவிடத் தெய்வங்களேதாஅ என்று முன்பு சொல்லப்பட்டது. இனி, திராவிடர்களைப் பற்றியும் அவர்களின் கடவுளர்களைப் பற்றியும் காணலாம்.

### திராவிடர்கள்

திராவிடம் என்பது தென்னிந்தியா என்றும் அங்கு வாழும் மக்கள் திராவிடர் என்றும் சொல்லப்படும். இந்தியாவிலுள்ள ஆரியர்

அல்லாத இன மக்களைக் குறிக்கும் சொல்லாகவும் கொள்ளலாம். இந்தியாவிலுள்ள பூர்விகக் குடிமக்கள் திராவிடர்கள். அவர்கள் இந்தியாவின் தென்பகுதியிலும் கிழக்குப் பகுதியிலும் பெரும்பாலும் இருக்கிறார்கள் (கால்டுவெல், ஆர்., 1975:3) வடமேற்குப் பகுதியில் ஆரியர்கள் அதிகமாக இருக்கும் பகுதியில் போதுமான அளவினதாக—அமைப்பாக இருந்தனர்,

மிகப் பழமையான காலத்திலேயே திராவிடர்களுடைய தொன்மை வரலாறு மறைந்து விட்டது.

ஆரியர்கள் இந்தியாவிற்கு வருவதற்கு முன், இங்குள்ள பூர்விகக் குடிகள் அவர்கள். தங்கள் தெய்வங்களைப் பற்றிய சமயம் பற்றிய செய்திகளையும் இலக்கியங்களையும் நினைவுச் சின்னங்களையும் அவர்கள் பாதுகாத்து வைக்கவில்லை.

திராவிடர்கள் இந்தியாவிற்கு வந்ததுபற்றி இரண்டுவிதமானக் கருத்துக்கள் நிலவுகின்றன. ஆரியப் படையெடுப்புக்கு முன்னதாகவே திராவிடர்கள் இமயமலையின் வடமேற்குக் கணவாய்களின் வழியாக வந்தவர்கள்; இது எல்லோரும் ஒப்புக்கொள்ளும் செய்தி. காகசியன் போன்றவர்கள்; மங்கோலியர்களின் உருவங்களை ஒத்த சாயலர்கள்; அவர்கள் இந்தியா முழுவதும் பரவியிருந்து பின் ஆரியர்களால் விரட்டப்பட்டுத் தென்பகுதியில் குடியேறியவர்கள். அடுத்த செய்தி, திராவிடர்கள் தென்னிந்தியாவின் பழங்குடி மக்கள். கடலில் மூழ்கிய லெமூரியா கண்டம் தான் அவர்களுடைய பழைய இருப்பிடம். இலங்கையிலும் திராவிடர்கள்தான் முன் காலத்திலும் குடியிருந்தார்கள்.

### திராவிட, இந்துத் தெய்வங்கள்

திராவிடர்கள் ஆரியப் படையெடுப்புக்குப் பின் அவர்களுடைய சமயத்தை விட்டுக்கொடுக்கவில்லை; ஆரியர்கள் திராவிடச் சமயத்தைத் தங்கள் சமயத்தோடு சேர்த்துக் கொண்டார்கள்; ஆனால் திராவிடர்கள் சமயத்திற்கு அங்கு மதிப்பில்லை; மரியாதை இல்லை. இந்துச் சமயம் என்ற பெயர்தான் இரண்டு சமயங்களையும் இணைத்தது. ஆனால் இரண்டும் ஒட்டி உறவாடாது வெவ்வேறாக இருந்தன; இருந்து வருகின்றன. தமிழ்நாட்டில் வழங்கும் பெருமரபுத் தெய்வங்கள் இந்து சமயத்தைச் சார்ந்தன. சிறு மரபுத் தெய்வங்களாகிய கிராமத் தெய்வங்கள் திராவிட சமயத்தைச் சார்ந்தன. ஆரியர் என்பது இப்போது பிராமணர்கள்தான். ஆனால்

இந்து சமயத்தில் சொல்லப்படும் நான்கு சாதிப் பிரிவினர்களில் சூத்திரர்கள் என்பவர்கள் திராவிடர்கள்; சத்திரியர்களும் வைசியர் களும் தங்களை ஆரிய வம்சம் என்று சொல்லிக் கொள்கிறார்கள்; ஆந்திராவில் கோமதிஸ் (Komatis) என்று சொல்லப்படும் வணிக மரபினர் வைசியர்கள் என்று சொல்லிக் கொள்கிறார்கள்; ஆனால் அவர்களுக்கும் 'மாதியர்' (Madigas)களுக்கும் ஒரு நெருங்கிய தொடர்பு இருப்பது தெரிகிறது. கோமதியர்களில் திருமணம் நடக்கும்போது புதிய குடித்தனம் புகுவதற்கு மாதிரியர்களின் வீட்டிலிருந்து நெருப்புக் கொண்டு வருவது இன்றும் சடங்காக இருக்கிறது என்று டபிள்யூ. டி. எல்மோர் தம் புத்தகத்தில் குறிப் பிடுகிறார் (1984:3).

ரிக் வேதத்தில் ஆரியர்கள் திராவிடர்களைப் பெரும் போராட் டத்தில் வென்ற செய்தி குறிப்பிடப்படுகின்றது. ஆரியர்கள் திராவிடர்களைப் பகைவர்கள் என்றும், அடிமைகள் என்றும் பழங்குடி மக்கள் என்றும் அறிவில்லாதவர்கள் என்றும் பழமையான சடங்குகளில் தொடர்பு கொண்டவர்கள் என்றும் கெட்டவர்கள் என்றும் கடவுளுக்குப் பரிசு கொடுத்து வழிபடாதவர்கள் என்றும் பாலை அபிஷேகம் செய்யமாட்டார்கள் என்றும், கோயில்களில் பூசை செய்ய மதகுருமார்கள் இல்லாதவர்கள் என்றும், பைத்தியக் காரக் கடவுளர்களை வழிபடுபவர்கள் என்றும் குறிப்பிட்டார்கள் (எல்மோர், டபிள்யூ. டி. 1984:3).

திராவிடர்களைப் பற்றிக் கேவலமாக மதித்த ஆரியர்களின் சமயம்தான் இந்துச் சமயம். இன்றுள்ள இச்சமயம் வேதகாலத்தி லிருந்து இருப்பதாகும். பலவித பொருள்களைப் பற்றிக் கூறுவ தாகும்; பிராமணர்களின்—ஆரியர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டது. இன்று நகரங்களிலும் கிராமங்களிலும் காணப்படும் இந்து தெய் வங்கள் விஷ்ணு, சிவன், ஆகியவர்களுடைய அவதாரங்களைப் பற்றியதேயாகும்.

இந்த இந்துக் கோயில்களில் பிராமணர்தான் பூசாரி. திராவிடத் தெய்வங்களுக்கு நடக்கும் பூசையைவிட இக் கோயில்களில் நடக்கும் பூசை நேர்த்தியானது. ஆனால் அதில் மக்கள் வழிபாடு இருக்காது. ஆரியர்களை வசப்படுத்த வேண்டும் என்பதற்காகவும் அவர்களை நட்பாக்கிக் கொண்டு அவர்களிடமிருந்து ஆதாயம் பெறவேண்டும் என்பதற்காகவும் அரசர்களும் யாத்ரிகர்களும் கோயில்களுக்கு அறக் கட்டளையாக - மானியமாக நிலங்களை விட்டிருந்தனர். அந்த

நிலங்களிலிருந்து கிடைக்கும் வருமானத்திலிருந்து கோயில்களின் செலவினங்கள் சமாளிக்கப்பட்டன. ஆனால் திராவிடத் தெய்வக் கோயில்களில் மக்கள் நேரிடையாக கவனம் செலுத்தினர். ஒவ்வொரு கிராமத்திலும் சிலர் கரடுமுரடான கல்லின் வடிவத்தை வழிபட்டு வந்தனர்; சிலர் தற்காலிக வடிவங்களைக் கொண்டு வழிபட்டு வந்தார்கள். வழிபாடு முடிந்தபின் அவற்றைத் தூக்கி எறிந்து விடுவார்கள்.

ஆரியர் அல்லாதவர்கள் மட்டும் இத்தகைய தெய்வ வழிபாட்டில் முழுக் கவனம் செலுத்தினர். எல்லாக் கோயில் தெய்வங்களுக்கும் மிருக பலி கொடுத்து வழிபாடு நடத்துவதால் பிராமணர்கள் பூசாரியாக இருப்பதில்லை. ஆனால் வொயிட் ஹெட் என்பார் தம் நூலில், (1983:19) பெங்களூர்க்கருகே உள்ள நெகபடம் என்ற ஊரில் ஒரு பிராமண விதவைப் பெண் பூசாரியாக இருந்ததாகவும் தஞ்சாவூர்க் கருகே உள்ள மாரியம்மன் கோயிலில் ஐயர் பூசாரியாக இருப்பதாகவும் கூறுகிறார். ஆனால் அவ்வாறு அவர்கள் இருப்பதால் மிருக பலி அங்குக் கொடுப்பதில்லையாம். இன்னும் சில ஊர்களில் பிராமணர்கள் சிறு தெய்வக்கோயில்களைக்குலத்தெய்வக் கோயில்களாகக் கொண்டுள்ளனர். தஞ்சை மாவட்ட மலநாட்டு பிராமணர்கள் - ஐயர்கள், கொள்ளிடக்கரையிலுள்ள அரியூர் என்ற ஊரிலுள்ள சப்பாணிக் கருப்பு என்ற திராவிடத் தெய்வத்தைக்குலத் தெய்வமாகக் கொண்டுள்ளனர். நேர்த்திக் கடனான ஆட்டுக் கிடாயைக் கோயில்களில் விட்டுவிடுவார்கள். ஆனால் வெட்டுவதில்லை. கோயிலுக்கு, மொட்டையும் அடித்துக்கொள்வார்கள் (இராமன், மு. கோ., 10.1.1984). இத்தகைய தெய்வங்கள் கொடூரமான ஆவிகள். ஆகவே அவைகளை விட்டு நீங்க முடியாது என்கிறார்கள்.

ஆரியத் தெய்வங்களுக்கும் திராவிடத் தெய்வங்களுக்கும் உள்ள வேறுபாடுகளை டபிள்யூ. டி. எல்மோர் பின்வருமாறு கூறுகிறார் (1984:4)

ஆரியத் தெய்வங்கள் தெய்வீக வரலாற்று மரபைக் கொண்டவை; அத்தெய்வங்கள் புராண இதிகாசப் பிறப்பைக் கொண்டவை. இவ்வுலகில் அவதாரமாகத் தோன்றியவை. ஆனால் திராவிடத் தெய்வங்கள் எவ்வாறிருப்பினும் பூமியில்—அவ்வூரில் தோன்றியவை. அந்தத் தெய்வங்களின் வரலாறு ஊரோடு தொடர்பு கொண்டது ஊரிலிருந்துதான் அவை தோன்றுகின்றன. பெரும்பாலும் அவ்

வூரில் பிறந்து வளர்ந்து இறந்தவர்களின் ஆவியாகவே அவை இருக்கின்றன; உள்ளூர் வாசியாகவே, அத்தெய்வங்களை மக்களும் நினைக்கிறார்கள். ஒவ்வொரு ஊரும் அதற்கென்று ஒரு கடவுளைப் பெற்றிருக்கும். அதுதான் அந்த ஊரின் தெய்வம். ஒரு தெய்வம் வெவ்வேறு இடங்களில் இருந்தாலும் அதை அவ்வூர் தெய்வமாகவே மக்கள் நினைக்கிறார்கள்.

எல்லாத் தெய்வங்களும் மிருக பலி ஏற்கக் கூடியவை. ஆனால் உண்மையான இந்து சமயத் தெய்வம் இதை ஏற்காது.பிராமணியத் தாக்கத்தால் அய்யனார் போன்ற சிலைக்கு முன் பலி கொடுக்கக் கூடாது என்ற வாதம் தமிழ்நாட்டில் இருக்கிறது. இதன் காரண மாகத்தான் பெரும்பாலும் பூசாரிகள் பிராமணர்கள் அல்லாதவர் களாக இருக்கிறார்கள். திராவிடத் தெய்வங்கள் பெரும்பாலும் பெண் தெய்வங்கள்தாம்;ஆனால் இந்து சமயத் தெய்வங்களில் ஆதிக் கம் செலுத்துவது ஆண் தெய்வங்களே. இதுதான் ஆரிய சமயத்தின் நெறிமுறை; ஆனால் இந்தியாவில் எதற்கும் விதிவிலக்கு உள்ளது போல் இவ்விதிக்கும் விலக்கு இருக்கிறது. அதனால் இந்தக் கணிப்பு சில சமயங்களில் தப்பாவதும் உண்டு. திராவிட நெறியின் இயற்கையே பெண் தெய்வ வழிபாடுதான். இப்பாகுபாடு எதனா லென்றால், ஆரிய தெய்வங்கள் எல்லாம் போரை விரும்பும் தெய் வங்களாகப் படைக்கப்பட்டிருக்கிறார்கள்; ஆனால் திராவிடத் தெய்வங்களாகிய பெண் தெய்வங்கள் விவசாயக் கடவுளர்களாக ஆக்கப்பட்டிருக்கிறார்கள். உலக முழுவதும் இந்த நிலையே. போர் செய்வது ஆணின் தொழில்; விவசாயத்தை கவனிப்பது பெண்ணின் தொழில்; இதுதான் உண்மை; வளமை பெண்ணோடு தான் தொடர்பு கொண்டது. தென்னிந்தியாவெங்கும் எல்லாக் கிராமங்களிலும் பெண் தெய்வங்களே மேலோங்கி நிற்கின்றன. தமிழ்நாட்டில் பெரும்பாலும் ஆண் தெய்வங்கள் அம்மன் கோயில் களில் துணைத் தெய்வங்களாகவே இருக்கின்றன; கோயில்களில் உள்ள அம்மன் கருவறையைக் காத்து அம்மன் இடும் கட்டளையை நிறைவேற்றுபவைகளாகவே இருக்கின்றன. ஆனால் அய்யனார் போன்ற தெய்வங்கள் இதற்கு விதிவிலக்கு. அய்யனார் கிராம தெய்வமாகவே வழிபடப்படுகிறார். அவர்க்கென்று தனியே கரு வறை உண்டு; இரவில் ஊரைக் காத்து வருவதும் அவர் செயலே. தெலுங்கு தேசத்தில் போத்திராசு என்னும் தெய்வம் சில சமயங் களில் அம்மன் தெய்வத்திற்கு சகோதரராகவும் சில சமயம் கணவ ராகவும் மதிக்கப்படுகிறது; இன்னும் சில சமயங்களில் துணைத் தெய்வமாகக் கருதப்படுகிறது. ஆனால் காவல் தெய்வமாக—ஊர்த்

தெய்வமாக தனித்து கருதப்படுவதில்லை என்று வொய்ட்ஹெட் என்பார் தம் நூலில் குறிப்பிடுகிறார்(1983:45). ஆனால் இத்தகைய திராவிடத் தெய்வங்களின் தன்மையிலும் வழிபாட்டிலும் இந்த இரண்டையும் கலப்பதால் ஏற்படும் குழப்பத்தால் தீங்கு ஒன்றும் நேராது. இவைகளின் அடிப்படை அவர்களுக்குச் சொல்லத் தெரியாவிட்டாலும் பொதுப்படையான இரண்டின் தோற்றமும் வேறுபாடும் தெரியும்.

## திராவிடத் தெய்வத்தின் பெயர்

திராவிடத் தெய்வ வழிபாட்டில் பெயர்கள் பெரும்பான்மையும் மக்களின் பெயர்களாகவே இருக்கின்றன. ஆனால் ஆந்திராவில் ஒரு ஊரை விட்டு வேறு ஊருக்கு வந்தால் அவ்வூரின் பெயரையே தெய்வத்திற்கு இட்டு வழங்கி வருகிறார்கள். மசூலி பட்டணத் திற்கருகில் உள்ள கோயிலின் தெய்வப் பெயர் அட்டங்கம்மா; அடங்கி என்ற ஊரிலிருந்து வந்ததால் அட்டங்கம்மா என்று பெயர் வந்திருக்கிறது. இது போன்றதுதான் பண்டிலம்மா. பண்டிலி ருத்து வந்த தெய்வம் பண்டிலம்மா.

பெரியம்மா, சின்னம்மா, என்று உருவத்தை வைத்தும் தெய் வங்களின் பெயர் வந்ததாகத் தெரிகிறது..இது ஆந்திர மாநிலத்தில் பரவலாக வழங்குகிறது. பெத்தம்மா. சின்னம்மா, என்று வழங்கப் படுகின்றன.

காளியம்மாள் என்பது எல்லா ஊர்களிலும் உள்ள தெய்வம். 'காளி' என்று வேதங்களில் குறிப்பிடப்படுவதாகவும், உலகில் உள்ள எட்டு சக்திகளின் ஒரு அவதாரமே காளி என்றும் சொல்லப் படுகிறது. சிவனிடமிருந்து வரம் பெற்ற மகிடாசூரன் சிவனையே தொலைத்துக் கட்ட எண்ணினான். அப்போது சிவன் அவனை இறக்கும்படி சபித்தார். மும்மூர்த்திகளாலோ அல்லது ஆண் தெய் வங்களாலோ தனக்கு என்றும் அழிவு ஏற்படக் கூடாது என்று தான் பெற்ற வரத்தால் தப்பித்தான்; ஆகவே அவனை ஒழிக்கும் வேலை காளியிடம் கொடுக்கப்பட்டது, அவளும் செய்து முடித்தாள். மக்கள் அவளை கிராமத் தெய்வமாக வழிபடுகிறார்கள்.

கடலூருக்கருகில் தேவனாம்பட்டினம் என்ற ஊரில் மீனாட்சி யம்மன் கோயில் ஒன்று உண்டு. இங்கு மீனாட்சியம்மனும், மதுரை வீரனும் மீன் போன்று செய்த மண் உருவச் சிலையின்மீது தனித் தனியே இருக்கிறார்கள். இம் மீனாட்சியம்மன் மீனவர்கள்

வணங்கும் தெய்வமாகும். துணைத் தெய்வம்தான் மதுரைவீரன். மதுரை மீனாட்சிக்கும் இதற்கும் தொடர்பு இருப்பதாகத் தெரியவில்லை. இம் மீனாட்சி மீனவர்கள் வணங்குவதால் மீனாட்சியானாள் எனறு சொல்லப்படுகிறது. இத் தெய்வ வணக்கத்தால் மீனவர்களுக்கு மிகுதியாக மீன் கிடைக்குமாம். இது ஒரு நம்பிக்கை.

தென்னாற்காடு மாவட்டத்தில் பரவலாக வழிபடப்படும் ஒரு தெய்வம் கூத்தாண்டவர் ஆகும். தேவனாம்பட்டிணம் என்ற ஊரிலும் கூத்தாண்டவர் தெய்வம் உள்ளது. இக்கோயில் சாதாரணமாக அமைக்கப்பட்டிருக்கிறது. மூன்றடி உயரத்தில் பெரிய முகமூடி (Mask) போன்ற தலையுடன் அகலமான முகத்துடன் பெரிய மீசையைத் தாங்கிய உருவம் உள்ளது; சிங்கப்பல் போன்ற பற்கள்; தலையில் கிரீடம். இவைதான் கூத்தாண்டவர் உருவம். இவ் வுருவத்தைப் பார்க்கும்போது 'தெருக்கூத்தில்' தோன்றும் பாத்திரங்களின் தோற்றம் நினைவுக்கு வருகிறது. தென்னாற்காடு மாவட்டத்தில்தான் தெருக்கூத்து மிகுதியாக ஆடப்படுகிறது. ஆகவே தெருக்கூத்து ஆடுவதற்கென்றே ஒரு கோயில் கட்டப்பட்டிருக்குமோ என்ற எண்ணம் தோன்றுகிறது. பரத நாட்டியத்திற்கு நடராஜன் இருப்பது போன்று தெருக்கூத்திற்குக் கூத்தாண்டவர் இருக்கலாம். அசுரன் அல்லது வேதாளத்தைக் கொன்று கூத்தாடியதால் கூத்தாண்டவர் ஆனார் என்று சொல்லப்படுகிறது. கூத்தாண்டவர் என்பது நடிகக் கடவுள் என்றும் நாட்டியக் கடவுள் என்றும் கூத்தாடிகள் கடவுள் என்றும் சொல்லப்படுகிறது. இந்தக் கூத்தாடிகள் தென்னாற்காடு மாவட்டத்தில் மிகுதியாக உள்ள வன்னியர்களின் ஒரு பிரிவினரைக் குறிக்கும். இப்பிரிவினராகிய வன்னியர்கள் வணங்குவதால் கூத்தாண்டவர் ஆகியிருக்கலாம் என்கிறார்கள். இப்பிரிவினர் எல்லோரும் தெருக்கூத்து ஆடும் கலைஞர்களாக இருந்திருக்கலாம். இது ஆராயப்பட வேண்டிய செய்தி.

இக் கோயிலைப் பற்றி வழங்கும் கதை. பிராமணனைக் கொன்றதால் இந்திரன் கூத்தாண்டவராக மறுபிறவி எடுத்தார். அவன் தலையை மட்டும் விட்டு உடல் சென்றுவிடும் என்று சபிக்கப்பட்டார். அதனால் யாரும் அவனுக்குப் பெண் கொடுக்கவில்லை, காலையில் திருமணமானால் மாலையில் அவன் உடல் அவனை விட்டு நீங்கிவிடும் என்பது சாபம்; ஆகவே பெண் தாலி அறுக்கப்பட்டு விதவை ஆவாள். கண்ணன் அவன் மீது அனுதாபப்பட்டு மோகினியாகிய பெண் வடிவம் பெற்று திருமணம் செய்ய, அவன் உடல் மாலையில் நீங்கியது. தாலி அப் பெண்ணுக்கு அறுபட்டது.

இதன் நினைவாக சித்திரையில் அக்கோயிலில் திருவிழா நடை பெறுகிறது, அப்போது காலையில் ஆண்கள், பெண்கள் வேடமிட்டு சென்று மாலையில் தாலி அறுபட்டு திரும்புவார்கள். மாறகா பலியும் கொடுப்பார்கள். எல்லா வகுப்பாரும் இத்தெய்வத்தை வணங்குகிறார்கள். இப்போது படையாச்சி அல்லது வன்னியர்கள் மிகுதியாக இருக்கும் பகுதிகளிலெல்லாம் இத்தெய்வ வணக்கம மிகுதியாகக் காணப்படுகிறது. (வொய்ட் ஹெட், 1683: 29)

கர்நாடகத்தில் பெரிய தெய்வம் என்ற கருத்தில் மகேஸ்வரம்மா என்றும் குதிரையின் மீது உட்கார்ந்து சவாரி செய்வதால் சவாரம்மா என்றும் அழைக்கும் வழக்கம் இருக்கிறது. பூஜம்மா என்ற தெய்வமும் அங்கு இருக்கிறது. இது தெலுங்கு மாதியர்களின் தெய்வம். இருந்தபோதும் எல்லா சூத்திரர்களும் வணங்குவதால் இது பூஜம்மா என்று பெயர் ஆகியிருக்கிறது,

தமிழ்நாட்டில் வெயிலம்மா அல்லது வெயிலுலகந்தம்மாள் என்று சொல்லுவதுபோல கர்நாடகத்தில் பிசில் மாரி என்று கிராமத் தெய்வம் அழைக்கப்படுகிறது. பிசில் என்றால் வெயில் என்று பொருள். மாரி என்பது சக்தி தெய்வம். இது முதலில் சூரிய வணக்கத் தெய்வமாக இருந்திருக்கலாம் என்று வொய்ட்ஹெட் கூறுகிறார் (1983:29).

கர்நாடகத்தில் கோயில் திறந்த வெளியில் மேல்பகுதி கூரை வேயப்படாமல இருக்கிறது. செம்புக் கலயத்தில் தண்ணீர் இருக்கும். அதனை ஒட்டி ஒரு கண்ணாடி இருக்கும். இதுதான் தெய்வ உருவம்.

தென்னிந்தியாவில் முதலில் கிராம தெய்வங்களின் பெயர்கள் எல்லாம சாதாரணப் பெயாகளாகவே இருந்திருக்கின்றன. நாளாக ஆக கிராம மககள் தங்கள கற்பனைச் சக்தியின் அளவிற்கேற்பப் பெயர்களை அமைத்துக் கொண்டார்கள். பயத்தின் காரண மாகவும், தங்களைக் காப்பதற்காகவும் மக்கள் தங்கள் விருப்பிற் கேற்ப மாரியம்மா என்றும் அய்யனார் என்றும் பெயர் அமைத்துக் கொண்டார்கள். இதே கருத்தை வொய்ட்ஹெட்டும் கூறுகிறார். (1988:30).

பிராமணர்கள் செல்வாக்கு மிகுதியாக இருக்கும் பகுதிகளில் சிவன் அல்லது விஷ்ணு வழிபாட்டோடு கூடிய இறைப் பெயர்க ளாகக் கிராம தெய்வங்களின் பெயர்கள் மாற்றப் பட்டிருக்கலாம்.

திராவிடத் தெய்வங்களாகிய கிராம தெய்வங்களின் தன்மை மாறுபடுகிறது. மக்கள் அத்தெய்வங்களைக் கொடூரமான ஆவிகள் என்று மதிப்பதில்லை. அதற்கு மாறாகத் தங்களைக் காக்கும் தெய்வமாகத்தான் அத்தெய்வங்களை நினைக்கிறார்கள்.

மாகாளி என்பது காலராவைக் கட்டுப் படுத்தும் தெய்வம் என்று அழைக்கப்படுகிறது. இத்தெய்வம் கொடூரமானது. இதை வணங்கினால் காலரா போன்ற நோய்கள் வராது என்றும் நம்பப்படுகிறது. வீரமாகாளி என்றும் உக்ரமாகாளி என்றும் அழைக்கப்படுகிறது. இதைப் போன்ற தன்மைகொண்ட தெய்வம்தான் அங்கம்மாள். கோயமுத்தூர் மாவட்டத்தில்தான் இதை மிகுதியாக வணங்குகிறார்கள். உலகில் உள்ள எட்டு சக்திகளை வணங்குபவர்கள் காக்கப்படுவார்கள்; மற்றவர்கள் அங்காளம்மாவால் அழிக்கப்படுவார்கள் என்பதுதான் இத்தெய்வ வணக்கத்தின் பொருள்.

காமாட்சியம்மன் என்று ஒரு தெய்வம் வணங்கப்படுகிறது. இது கருணையின் வடிவம் பொருந்திய நல்ல தெய்வமாக மதிக்கப்படுகிறது. பிராமணப் பெண்ணாகப் பிறந்து பின் எட்டு சக்தியின் அவதாரமாக்கப் பட்டதாகக் கூறப்படுகிறது (வொய்ட்ஹெட், 1983:30)

### திராவிடத் தெய்வங்களின் குணங்கள்

தமிழ்நாட்டில் நாகரிக மேம்பாட்டினாலும் பிராமணப் பண்பாட்டின் தாக்கத்தாலும் கிராமத் தெய்வ வழிபாட்டு முறைகளிலும் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் தெலுங்கு கர்நாடகத்தில் அவ்வளவாக இல்லாமல் பழைய நிலையிலேயே இருக்கிறது. மாரியம்மன் என்ற தெய்வம் தமிழ்நாட்டில் பரவலாக வழிபடப்படும் ஒரு ஒப்பற்ற தெய்வம். இந்த மாரியம்மன் அம்மை நோய் வராது தடுக்கும் தெய்வம் என்று வழிபடப்படுகிறது. இந்த மாரியம்மன் ஏழு சகோதரிகளில் ஒருவராக மதிக்கப்படுவதில்லை. அவர்களுக்கும் மேலானவளாகக் கருதப்படுகிறாள்; சக்தியிலும் கொடூரத்திலும் புலம் பொருந்தியவளாக ஆக்கப்பட்டிருக்கிறாள். ஏழு சகோதரிகள் அன்புமிக்கவர்ளாகவும் சாந்த சொரூபிகளாகவும் எண்ணப்படுகிறார்கள்; அதற்கு எதிரிடையாக மாரியம்மன் கருதப்படுகிறாள். தஞ்சை மாவட்டத்தில் காளி என்று பெயரிட்டு அழைக்கப்படும் எல்லைத் தெய்வத்தை, ஊருக்கு வெளியிலிருந்து வரும் தீய சக்திகளை வரவிடாது கிராமத்தைக் காக்கும் தெய்வமாக நினைக்கிறார்கள். ஆனால் ஏழு சகோதரிகளை கிராமத்திற்குள்ளேயே எந்தவித கெட்ட ஆவிகளும் புகாது மக்களைக் காக்கும் தெய்வங்களாகக் கருதுகிறார்கள் (வொய்ட் ஹெட், 1983:32).

கிராமத் தெய்வங்களில் முதன்மையாகக் கருதப்படும் ஆண் தெய்வம் அய்யனார். அய்யனார் தமிழகத்தின் எல்லா பகுதி களிலும் வழிபடும் ஒரு ஒப்பற்ற கிராம தெய்வம். ஒவ்வொரு ஊரி லும் அய்யனார் கோயில் இருக்கும். அவ்வூரின் காவல்காரனாக— காவல் தெய்வமாகக் கருதப்படுபவர் அய்யனார். இரவில் தன் பரிவாரங்களுடன் கோயிலை விட்டுக் கிளம்பி ஆவிகளிடமிருந்து ஊர் மக்களைக் காப்பது இவர் செயலாகும்.

அய்யனாருக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப்படும் கிராமதெய்வம் கருப்பணசாமி என்று அழைக்கப்படும் கருப்பசாமி. கிராம தேவதைகளுக்குத் துணை தெய்வமாகத்தான் பெரும்பாலும் மதிக்கப்படுகிறார். ஆனால் சில இடங்களில் முதன்மைத் தெய்வ மாக எண்ணப்படுகிறார். கீழ்ச்சாதியினர் இவரை முதன்மைத் தெய்வமாகப் பெரும்பாலும் வழிபடுகிறார்கள். எல்லைக் கருப்பா கவும் மதிக்கப்படுகிறார். கெட்ட ஆவிகளிடமிருந்து மக்களைக் காப்பதுதான் இவர் செயல். ஆந்திரத்தில் வழங்கும் போத்திராசு இத் தெய்வத்தை போன்றே எண்ணப்படுகிறார்.

## திராவிடத் தெய்வக் கோயிலமைப்பு

மக்கள் எந்த நிலையில் இருக்கிறார்களோ, அந்த நிலையில் தான் அவர்கள் வழிபடும் தெய்வமும் இருக்கும். அவர்களுடைய இருப்பிட அமைப்பைப் போன்று கோயில்களையும் சாதாரண நிலையிலேயே அமைத்துக் கொண்டார்கள். இன்று காணப்படும் பெரிய கோயில் அமைப்பெல்லாம் இந்து சமயத்தின் தாக்கத்தால் ஏற்பட்டவையேயாகும். திராவிடத் தெய்வக் கோயில்கள் எல்லாம் சாதாரணமானவை. பெரும்பாலும் மரத்தின் அடியில் ஒரு சமதளக் கல்மீது இன்னொரு குத்துக்கல் இருக்கும். இதுதான் அவர்கள் வழிபடும் தெய்வ உருவம் கொண்ட கோயில்; சில இடங்களில் வெறும் சூலம் மட்டும் குத்தப்பட்டிருக்கும். இன்னும் சில இடங்களில் சக்கமாதேவி, ஒன்னம்மாள், தொட்டராயன் தெய்வங்கள் கொண்ட கோயில்களில் சுற்றிலும் இலந்தை முள் அடைக்கப்பட்டக் கோட்டை மட்டும் இருக்கும். இதை நாகலாபுரத்தை அடுத்த கோடாங்கிபட்டியிலும், மேலக்கல்லூரணி, கீழக்கல்லூரணி கிராமங்களிலும் காணலாம்.

கீழக்கல்லூரணியிலுள்ள அய்யனார் கோயிலில் வெறும் மண் உருவச்சிலை மட்டும் இருக்கிறது. பீடத்தின்மீது கூட சிலை வைக்கப்படவில்லை. ஆனால் சுற்றிலும் ஆடு மாடுகள் சென்று சிலையை சிதைக்காதிருக்கவே கருவேலம் முள்ளைக் கொண்டு

வேலி அமைத்துள்ளார்கள். சில ஊர்களில் சிமெண்ட்டால் திண்ணை அமைத்து அதன்மீது கருப்பசாமி முனியசாமி போன்ற தெய்வ உருவங்களை வைத்துள்ளனர். இதுதான் கோயில்; வேலி கிடையாது. ஆனால் பல இடங்களில் ஒன்றுமே இருக்காது. சிலை, கோயில் அமைப்பிருக்காது. பொங்கல் சமயம் தென்னங் கீற்றுகளால் பந்தல் போட்டு அடையாளமாக ஒரு கல்லைத் தெய்வமாக வைத்து வழிபடுவார்கள். இதைப் போன்ற அமைப்புகள் ஆந்திர நாட்டில் மிகுதியாகக் காணப்படுகின்றன என்று வொய்ட் ஹெட் தம் நூலில் குறுப்பிடுகிறார் (1983:36).

### திராவிடத் தெய்வ வடிவம்

கிராமத் தெய்வங்களின் உருவங்கள் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு விதமாக இருக்கின்றன. சில ஊர்களில் நிரந்தரமான உருவங்கள் இல்லாது இருக்கின்றன. பொங்கல் சமயத்தில் மண்ணால் உருவம் செய்து வைத்து வழிபடுகின்றனர். அதுவும் பொங்கல் முடிந்த மறுநாளில் அதை ஊர் எல்லையில் கொண்டு போய் அழித்தும் விடுகின்றனர். சிவலார்பட்டியில் முத்தாலம்மன் கோயிலில் இவ்வாறு இருக்கிறது. சில ஊர்களில் பீடம் மட்டும் இருக்கிறது. பொங்கல் சமயத்தில் அப்பீடத்தின்மீது குச்சிகளை நட்டி வைத்து மலர்களால் அலங்காரம் பண்ணி வைக்கிறார்கள். மேலக்கல்லூரணி கிராமத்தில் தொட்டராயன் கோயிலில் இதைக் காணலாம். சில ஊர்களில் மரம் மட்டும் இருக்கிறது. அதற்குக் கீழே கல்லை வைத்து வழிபடுகிறார்கள். சங்கரலிங்கபுரத்தில் பெத்தாலம்மன் கோயிலில் இவ்வாறான அமைப்பு இருக்கிறது. சில இடங்களில் குத்துக்கல் மட்டும் இருக்கும். இதை எல்லையம்மன் என்று வணங்குகிறார்கள். கருத்தையாபுரத்தில் துக்கையம்மன், எந்தவித உருவமோ கோயிலோ இல்லாமல் ஊரின் மந்தையில் வைத்து தற்காலிக மண் பீடம் அமைத்து வழிபடப்படுகிறது.

அய்யனார் கோயில்களில் மண்சிலை அமைத்து வழிபடப்படுகிறது. அதுவும் ஆண்டு முழுவதும் இருக்கும்படி செய்யப்படுகிறது. ஆனால் அடுத்த பொங்கலின்போது புது உருவங்கள் அமைக்கும் போது பழைய சிலைகள் அருகில் எடுத்து வைக்கப்படுகின்றன. இதே ஊரில் காளியம்மன் கோயிலும் இவ்வாறே காணப்படுகிறது. சில இடங்களில் வெறும் சூலம் மட்டும் குத்தி வைக்கப்பட்டிருக்கும். அதை முனியசாமி என்பார்கள்; காளியம்மன் என்றும் சொல்வார்கள்.

ஒருசில இடங்களில் கலயத்தில் தண்ணீர் ஊற்றி அதற்குள் வேப்பிலையைச் செருகி வைத்து மஞ்சளைக் கலயத்தின் கழுத்துப் பாகத்தில் சேர்த்து வைத்து அதை மாரியம்மன் என்றோ காளியம்மன் என்றோ அழைக்கிறார்கள். மேல்மாந்தை என்ற ஊரில் காளியம்மன் இவ்வாறு வழிபடப்படுகிறது.

சில இடங்களில் உலோகத்தாலான உருவங்களையும் கோயிலில் வைத்து வழிபடுகிறார்கள். பல இடங்களில் கல் சிலைகளும் இருக்கின்றன. இவையெல்லாம் பிற்காலத்தில் ஆரியத் தாக்கத்தால் வந்ததாக இருக்கவேண்டும். கிராமத் தெய்வங்களின் பொதுவான அடையாளமாக இருப்பது சூலம் மட்டுமே. தெலுங்கு தேசத்திலும் கன்னட நாட்டிலும் இத்தகைய அமைப்பு முறையைக் காணலாம்.

நடுகல் வணக்கமும் கிராமத் தெய்வமாகக் கொள்ளப்படுகிறது.

### திராவிடத் தெய்வக் கோயிலின் பூசாரி

தற்கால இந்து சமயக் கோயில்களில் எல்லாம் பிராமணர்களே பூசாரிகளாக இருக்கின்றனர். ஆனால் கிராமத் தெய்வக் கோயில்களில் எல்லா இனத்தவர்களும் பூசாரிகளாக இருக்கின்றனர். தாழ்ந்த குலம் என்ற பாகுபாடு கூடக் கிடையாது. புதுக்கோட்டைக்கும் ஆதனங்கோட்டைக்கும் இடையில் உள்ள பெருங்களூர் கிராமத்தில் உள்ள அம்மன் கோயிலில் ஆதிதிராவிடர் பூசாரியாக உள்ளார். ஐயரில் சிலருக்கு அது குலத் தெய்வமாகும். அப்பூசாரிதான் பூசை வைத்து அவர்களுக்குப் பிரசாதம் கொடுக்கிறார். இதைப் போன்றே பல ஊர்களில் கருப்பசாமி, காளியம்மன் போன்ற கிராம தெய்வக் கோயில்களில் ஆதிதிராவிடர்கள் பூசாரிகளாக உள்ளனர். சாதி வேறுபாடு இக்கிராம தெய்வக் கோயில்களில் இல்லை. இதைப்போன்று அன்றும் இன்றும் எப்போது வென்றான் கோயிலில்—சோலைசாமி தெய்வத்தின் முன் சமபந்தி போஜனம் நடந்துவருகிறது. ஆதிதிராவிடர்கள் சமைத்துக் கொடுத்த உணவை - பன்றிக்கறி உணவை வேறு சாதியினரும் உண்கின்றனர்.

### திராவிடத் தெய்வக் கோயிலில் வழிபாடு

கிராம தெய்வக் கோயில்களில் நித்த பூசை என்பது இல்லவே இல்லை. சில கோயில்களில் மட்டும் - சில சாதிவசம் உள்ள கோயில்களில் மட்டும் - வருமானம் உள்ள கோயில்களில் மட்டும் நித்த பூசை நடைபெறுகிறது. பெரும்பாலும் ஆண்டுதோறும்

பொங்கல் நடைபெறாத கோயில்களும் இருக்கின்றன. அந்தந்த ஊர் மக்கள் பூசலின்றி ஒன்றாகச் சேர்ந்திருக்கும் ஆண்டில் மட்டும் பொங்கல் நடத்துகின்றனர். அதுவும் இன்ன தேதியில்தான் என்ற வரையறை யில்லாது ஆடி மாதமோ, சித்திரை மாதமோ பெரும் பாலும் நடத்துவார்கள். ஆனால் செவ்வாய், வெள்ளி ஆகிய தினங் களில் கண்டிப்பாக நடத்துவார்கள்.' இதற்குக் காரணமாக ஒன்று சொல்லப்படுகிறது. செவ்வாய் பொங்கல் என்றால் புதனன்று கடா வெட்டு இருக்கும். வெள்ளி என்றால் சனிக்கிழமை கடாவெட்டு இருக்கும். புதன், சனிக்கிழமைகளில்தான், எண்ணெய் தேய்த்துக் குளிப்பார்கள்; அந்த நாட்கள்தாம் கிராம மக்கள் ஓய்வாக இருக்கத் தேர்ந்தெடுக்கும் நாட்கள். ஆகவே இந்த வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் பொங்கல் நடத்துவார்கள். முதல் வாரத் திலோ, கடைசி வாரத்திலோ நடத்துவார்கள் (அழகர்சாமி, பொ., 12.9.1984). கிராமத்தில் நடைமுறையில் உள்ள வழக்கமும் இது தான்.

தொகுத்துச் சொன்னால், தென்னகத்தில் நாட்டுப்புறத் தெய்வத்தைச் சிறு மரபுத் தெய்வம் என்றும் சிறுதெய்வம் என்றும் சொல்வதை விடுத்துத் திராவிடத் தெய்வம் என்று சொல்லுவதே சாலச் சிறந்தது; நாட்டுப்புறத் தெய்வமும், திராவிடத் தெய்வமும் ஒன்றுதான் என்பது இதன்வழி பெறப்படுகிறது. இத் திராவிடத் தெய்வம் இந்துத் தெய்வத்தினின்றும் பலவழிகளில் மாறுபட்டு இருக்கிறது. பெயர், வடிவம், கோயில், வழிபாடு ஆகிய எல்லா முறைகளிலும், இந்துச் சமயத்தினின்றும் மாறுபட்டுத் தனித் தன்மையோடு இருக்கிறது. திராவிடத் தெய்வங்களை இந்துச் சமயக் கடவுளர்களோடு இணைத்துப் பார்த்தாலும், ஒட்டி உற வாடாது தனியாகவே நிற்கின்றன. வழிபாட்டிலும் களங்கப்படுத்த முயற்சி செய்தபோதும் தோல்வியேதான். இவ்வாறு பலவழிகளில் தனிமையைக் காத்து மக்கள் சமயமாக, மக்கள் தெய்வமாக இருப்பது திராவிடத் தெய்வங்களே யாகும்.

# 3. விளாத்திகுளம் எனும் நாட்டுப்புறம்

விளாத்திகுளம், 'திக்கெல்லாம் புகழுறும்' நெல்லை மாவட்டத்தின் வடகிழக்கு மூலையில் அமைந்த ஒரு வட்டம் ஆகும். 'கரிசல் மலா' பூத்த பகுதியாகும். எங்கு நோக்கினும் கரிசல் பூமிதான். ஒருசில ஊர்களே செம்மண் பூமி. கீழ்ப்பகுதி மணல் பகுதி; தேரிக்காடு. கடல் சூழ்ந்த இடம். இது கோவில்பட்டி வட்டத்தோடு இணைந்திருந்தது. 1972-இல்தான் இதைப் புது வட்டமாகப் பிரித்தார்கள். இது விளாத்திகுளம், புதூர் ஆகிய இரு ஊராட்சி ஒன்றியங்களைக் கொண்டது. புதூர் 44 ஊராட்சிகளையும் விளாத்திகுளம் 48 ஊராட்சிகளையும் உடையன. விளாத்திகுளம் வட்டம் 114 வருவாய்க் கிராமங்களைக் கொண்டது. 249 கிராமங்களைக் கொண்டது. மக்கள் தொகை 1,54,953 ஆகும். படித்தவர்கள் தொகை 73,713 ஆகும். நெல்லை மாவட்ட மக்கள் தொகை 35,59,174. ஆண் 17,41,506; பெண் 18,17,668.

விளாத்திகுள வட்டத்தில் நகரங்களே இல்லை. எல்லாம் கிராமங்களேயாகும். விளாத்திகுளம், புதூர் ஆகிய இரண்டும்தான் பேரூராட்சிகள். நாகலாபுரம் புதூரைவிடப் பெரியதும் வரலாற்றுப் புகழ் பெற்றதுமான ஊராகும். இங்குக் கவுண்டன்பட்டி, நாகலாபுரம் என்று இரு ஊராட்சிகள் இருக்கின்றன. ஆகவே பேரூராட்சித் தகுதி இதற்கு இல்லை. வீரபாண்டியக் கட்டபொம்மன் அமைச்சர் தானாவதிப் பிள்ளையை இங்குதான் தூக்கிலிட்டார்கள். உமறுப் புலவர் இங்குதான் பிறந்தார். நாட்டுப்புற நாடகங்களுக்குப் பாட்டுப் புனைந்து கொடுத்துப் பேறு பெற்ற பாஸ்கரதாஸ் இவ்வூரைச் சேர்ந்தவரே. இங்கு நாயக்க வம்சத்தைச் சார்ந்த நாகப்ப நாயக்கரின் ஜமீன் இருந்தது. ஆகவே நாகலாபுரம் என்ற பெயர் கொண்டது. தமிழ்நாடு முழுவதும் இப்போது செயல்பட்டு வரும் சத்துணவுத் திட்டத்தின் முன்னோடியான மதிய உணவுத் திட்டம் முதன்முதலில் இவ்வூரில்தான் மாண்புமிகு காமராசர் முதலமைச்சராக இருந்தபோது நெ. து. சுந்தரவடிவேலுவால் ஆரம்பித்து வைக்கப்பட்டது. அதுவும் நாட்டுப்புற உணவாகிய - கரிசல் பூமிக்குரிய ''கம்பங் கஞ்சி'' ஊற்றப்பட்டது.

விளாத்திகுளம் வட்டம் ஒரு நாட்டுப்புறத் தனமான பகுதி; இங்கு உயர்குடியாகிய பிராமணர்களை விரல்விட்டு எண்ணிடலாம்

பெரும்பாலும் பின்தங்கிய தாழ்த்தப்பட்ட மக்கள் நிரம்பி வழியும் பகுதி. தெலுங்கு, கன்னடம் மொழி பேசக்கூடிய மக்கள்—நாயக்கர்களின் பாளயப்பட்டைச் சார்ந்தவர்கள் மிகுதியாக வாழ்கிறார்கள். கலை விரும்பிகள். நாட்டுப்புறக் கலைஞர்கள் மிகுதியாக இருக்கிறார்கள். வில்லுப்பாட்டுக் கலைஞர்கள் விளாத்திகுளத்தைச் சுற்றிலும் கணக்கிலடங்காது இருக்கிறார்கள். தெருக்கூத்து இப்பகுதியில் இருந்திருக்கிறது. சமீப காலத்தில்தான் அதை நாடகம் உருவேற்றிக் கொண்டது. கட்டபொம்மன் கதைப் பாடல், உடுக்கடிப் பாடலாக இருந்து வருகிறது. அதைத் தெருக்கூத்தாக நடித்திருக்கிறார்கள். இன்று அது நாடகமாகியிருக்கிறது. நாட்டுப்புற நாடகமாகிய அரிச்சந்திரா இங்கு எல்லா கிராமங்களிலும் நடிக்கப்படுகிறது. ஒயில் கும்மி, தேவராட்டம், சிறப்பாக எல்லா கிராமங்களிலும் ஆடப்பட்டு வருகின்றன. குறவன் குறத்தி ஆட்டம், சிலம்பாட்டம் ஆடப்படுகின்றன. பெண்கள் கும்மி, கோலாட்டம், இறந்தவர் வீட்டில் ஆடும் ஆண்கள் கோலாட்டம் மாரடிப்பாட்டு,ஒப்பாரி ஆகிய நாட்டுப்புறக் கலைகள் ரசித்து ஆடப்படும் பகுதி; நாட்டுப்புறக் கலைகள் மேலோங்கி நிற்கும் பகுதி. ஒரு கோயில் கொடை அல்லது பொங்கல் என்றால் அந்தந்த ஊர் அமெச்சூர் கலைஞர்களே வேடிக்கை—கேளிக்கை நடத்துவர். புதிது புதிதாகக் கலைஞர்களைத் தோற்றுவிக்கிறார்கள்.

இம்மக்கள் வாழ்வில் நாட்டுப்புறத்தாக்கம் மேலோங்கி நிற்கிறது அவர்கள் பேசும் மொழி நாட்டுப்புற மொழி; மெல்லப் பேசுவது இல்லை; ஆரவாரம்தான்; வாய்மொழி இலக்கியம் செல்வாக்குப் பெற்றது. ‘சொலவடை’ என்று சொல்லப்படும் பழமொழிகள் நடைமுறையில் கையாளப்பட்டு வருகின்றன. நாட்டுப்புற நம்பிக்கைமேல் பற்றுள்ளவர்கள். வைத்தியமும் நாட்டுப்புறந்தான். உடலுக்கு ஒன்று என்றால் உடனடியாக மருத்துவமனைக்குச் செல்லமாட்டார்கள். அதற்கு மாறாகப் பச்சிலை மருந்தைத்தான் கட்டுவார்கள்.

இம்மக்கள் உணவும் நாட்டுப்புற உணவுதான். அதுதான் கம்பு கேழ்வரகு, சோளம், வரகு, குறுதவாலி ஆகும். அவர்கள் உடை உடுத்துவதும் நாட்டுப்புறந்தான். நகரப் பெண்கள் ஆண்கள் பயன் படுத்தும் உடையை இம்மக்கள் அவர்கள் போக்கில் அணிவார்கள். கொசுவம் வைத்துத்தான் பெண்கள் அணிவார்கள். தலைப்பாகை இல்லாத ஆண்களைப் பார்ப்பது அரிது. செருப்பு அணிவதுகூட நாட்டுப்புறப் பாணியில்தான். 4 அங்குல உயரத்தில் ‘கக்கற’

அடியில் செருப்புக் கட்டி அணிவார்கள். அதில் முழுக்க ஆணி அடித்து வைத்திருப்பார்கள். தெருவில் நடக்கும்போது கிரிச் கிரிச் என்று சத்தம்கேட்டுக் கொண்டே இருக்கும். விசில் அடித்துக் கொண்டே செல்லுவார்கள். விசில் இல்லாத வாழ்க்கை ஒரு வாழ்க்கையா? பெண்களைப் பார்த்தாலும் விசில்தான். சினிமா நாடகம் பார்த்தாலும் விசில்தான். அவர்கள் வாழ்வே விசில் அடித்த வாழ்க்கைதான் —ஆமாம் ஆரவார வாழ்க்கைதான். இவர்கள் அரசியலும் விசிலடித்த அரசியல்தான். மேடையில், தெருவில் பேசுவதுபோன்றுதான் பேசுவார்கள்; கத்திப் பேசு வார்கள்; பேச்சு வழக்கில்தான் அவர்கள் பேசுவார்கள்.

இம்மக்கள் தொழிலும் நாட்டுப்புறத் தொழில்தான்; உழவுத் தொழில், ஆடு மாடு மேய்த்தல் முக்கியத் தொழில்கள். கூடை முடைதல்,கயிறு திரித்தல் பனையேறுதல் விறகு வெட்டுதல் போன்ற துணைத் தொழில்களைச் செய்கின்றனர். வாழ்வோடு இணைந்த தொழில்களைச் செய்து வாழ்ந்து வருகிறார்கள். ஆகவே இம் மக்கள் வாழ்க்கை முழுக்க முழுக்க நாட்டுப் புறத்தில் தோய்ந்திருக் கிறது.

இவ்வாறு எல்லாவற்றிலும் நாட்டுப்புறத்தில் தோய்ந்தவர்களின் வாழ்வில் சமயமும் நாட்டுப்புறச் சமயமே இடம் கொண்டிருக்கிறது. இம்மக்கள் சமுதாயத்தில் பெருமரபுத் தெய்வங்களுக்கு மிகுதியான இடமில்லை. எல்லா கிராமங்களிலும் சிறு தெய்வங்கள்தாம் கோயில்கள் கொண்டிருக்கின்றன. அங்கொன்றும் இங்கொன்று மாக, உயர் வகுப்பார் வாழும் ஊர்களில் பெருமரபுத் தெய்வக் கோயில்கள் இருக்கின்றன. ஆனால் எல்லாவூர்களிலும் விநாயகர் இல்லாது இல்லை; இது எதில் சேர்த்தியோ?

இவ்வட்டத்தில் களப்பணி செய்த ஊர்களும், அங்குள்ள நாட்டுப்புறத் தெய்வங்களும் பின்வருவனவாகும்.

**அவ்வூர்கள்**

1. அயன்கரிசல்குளம், 2. மாவில்பட்டி, 3. வி. கோடாங்கி பட்டி, 4. மெட்டில்பட்டி, 5. பெருமாள்கோவில்பட்டி, 6. சூரப்ப நாயக்கன்பட்டி, 7. மடத்துப்பட்டி, 8. சென்னமரெட்டிபட்டி, 9. முத்துசாமிபுரம், 10. வடக்குமுத்தையாபுரம், 11. மணியக் காரன்பட்டி, 12.மேலகுமாரசக்கணாபுரம், 13. தவசிலிங்கபுரம், 14. வன்னிப்பட்டி, 15. மேல அருணாசலபுரம், 16. ஜகவீரபுரம்,

17. ராமலிங்கபுரம், 18. பவானிபுரம், 19. சிவலார்பட்டி, 20. மலைப்பட்டி, 21. கம்பத்துப்பட்டி, 22. சுப்புலாபுரம், 23, வெம்பூர், 24, அழகாபுரி, 25. ராமசாமிபுரம், 26, பட்டித்-தேவன்பட்டி, 27. கீழக் கரந்தை, 28, மேலக் கரந்தை, 29. மாசார் பட்டி, 30, ராஜாப்பட்டி, 31. கைலாசபுரம், 32. வெள்ளக்கா நத்தம், 33, அருணாசலபுரம், 34. கருப்பூர், 35. சுப்பையாபுரம், 36, தோல் மாலைப்பட்டி, 37. வீரப்பட்டி, 38. முத்துலாபுரம், 39. கோட்டூர், 40. கருப்பசாமி கோவில்பட்டி, 41. கீழ் நாட்டுக் குறிச்சி, 42. சக்கிலிய பட்டி, 43. தாப்பாத்தி, 44 அ. வடமலா புரம், 45. அச்சங்குளம், 46. என். வேடபட்டி, 47. வவ்வால் தொத்தி, 48. புதுப்பட்டி, 49. ரகுராமபுரம், 50. செங்கோட்டை, 51, சுப்பிரமணியபுரம், 52. புதூர், 53. தெற்கு முத்தையாபுரம், 54. குளக்கட்டாங்குறிச்சி, 55. சென்னையன்பட்டி, 56. மடத்துப் பட்டி, 57. மேல வெங்கடேஸ்வரபுரம், 58. நடுக்காட்டூர், 59. முத்துப்பட்டி, 60. கீழ அருணசலபுரம், 61. மாதலப்புரம், 62, துரைச்சாமிபுரம், 63. எல். வெங்கடேஸ்வரபுரம், 64. லட்சுமி புரம், 65. குமாரலிங்கபுரம், 66. பி. ஜெகவீரபுரம், 67. புதுச் சின்னையாபுரம், 68. கந்தசாமிபுரம், 69. சேர்வைக்காரன்பட்டி, 70. துரைராஜ்புரம், 71. சங்கரப்பன்பட்டி, 72. என். ஜெகவீரபுரம், 73. குமாரபுரம், 74. சுப்பிரமணியபுரம், 75. சுப்பையாபுரம், 76. மாவிலோடை, 77. கழுகாசலபுரம், 78. பி. வெங்கடேஸ்வர புரம், 79. உத்தண்டபுரம், 80. பூதலப்புரம், 81. சின்னையாபுரம், 82. நூத்தலக்கரை, 83. கே. துரைச்சாமிபுரம், 84. கோவில் குமரெட்டையாபுரம், 85. மேலக்கல்லூரணி, 86. கீழக்கல்லூரணி, 87. ஸ்ரீரெங்கபுரம், 88. சங்கரலிங்கபுரம், 89. சல்லிசெட்டிபட்டி, 90. சின்னவநாயக்கன்பட்டி, 91. சொக்கழுப்பன்பட்டி, 92. சேது புரம். 93. கவுண்டம்பட்டி, 94. ரெட்டியபட்டி, 95. மகராஜபுரம், 96. குமாரசித்தம்பட்டி, 97. நாகலாபுரம், 98. பள்ளிவாசல்பட்டி, 99. என். கோடாங்கிபட்டி, 100. குருவார்ப்பட்டி, 101. குமார புரம். 102, கருத்தையாபுரம், 103. ஆத்தங்கரை, 104. கந்தசாமி புரம், 105. எம். துரைசாமிபுரம், 106. சொக்கலிங்கபுரம், 107. கல்குமி, 108. அம்மன் கோவில்பட்டி, 109. தாப்பன்பட்டி, 110. பேரிலோவன்பட்டி, 111. முதலிப்பட்டி, 112. வாகைத் தாவு, 113. நம்பிபுரம், 114 , மேலநம்பிபுரம், 115. பொன்னையா புரம், 116. டி. தங்கம்மாள்புரம், 117. டி. புதுப்பட்டி, 118. சங்கர லிங்கபுரம், 119. ராமனூத்து, 120. படர்ந்தபுளி, 121. துரைசாமி புரம், 122. தலைக்காட்டுபுரம், 123. சின்னையாபுரம், 124. மாலைநாடார்பட்டி, 125. சிங்கிலிப்பட்டி, 126. வேலிடுப்பட்டி’

127. கழுகாசலபுரம், 128. எம். குமரெட்டையாபுரம், 129. சித்தவ நாயக்கன்பட்டி, 130. மேட்டுப்பட்டி, 131. பிள்ளையார்நத்தம், 132. சொக்கலிங்கபுரம், 133. குமரெட்டையாபுரம், 134. அயன் பொம்மையாபுரம், 135. பனையப்பட்டி, 136. வில்வமரத்துப்பட்டி, 137. நு. கரிசல்குளம், 138. வாதலக்கரை, 139. இடைச்சியூரணி, 140. கீழவிளாத்திக்குளம், 141, சோலைமலையன்பட்டி, 142. பி. மீனாட்சிபுரம், 143. சுப்பையாபுரம்,144. சுந்தரப்பச்சையாபுரம், 145. காடல்குடி, 146. சின்னூர், 147. வடமலாபுரம், 148. குஞ்சியாபுரம், 149. சென்ன ராயபுரம், 150. மல்லீஸ்வரபுரம், 151. குமாரசக்கணாபுரம், 152. லட்சுமிபுரம், 153. முத்தையா புரம், 154. ராமச்சந்திரபுரம், 155. அரியநாயகிபுரம், 156. ரெட்டியப்பட்டி, 157. குரனையம்பட்டி, 158. விளாத்திக்குளம், 159. துளசிப்பட்டி, 160. கத்தாளம்பட்டி. 161. துலுக்கன்குளம், 162. கே. சுந்தரேஸ்வரபுரம், 163. கோட்டநத்தம், 164. செங்கல்படை, 165. ஜெகவீரபுரம், 166. கந்தசாமிபுரம், 167, கமலாபுரம். 168. கூத்தனூரணி, 169. வெள்ளையம்மாள்புரம், 170. குமாரகிரி, 171. அருங்குளம், 172. அகிலாண்டபுரம், 173. ஸ்ரீரெங்கபுரம், 174. என். புதுப்பட்டி, 175. கே. குமரெட்டையா புரம், 176. வேலாயுதபுரம், 177. சண்முகபுரம், 178. சுப்ரமணிய புரம், 179. சிவஞானபுரம், 180. ஏ. லட்சுமிபுரம், 181. நமச்சிவாய புரம். 182. கே. துரைச்சாமிபுரம், 183. சக்கம்மாள்புரம், 184. பொம்மையாபுரம், 185. அயன் செங்கல்படை, 186. அருணாசல புரம், 187. குமாரபுரம், 188. மார்த்தாண்டம்பட்டி, 189. வள்ளி நாயகிபுரம், 190. வெங்கடேஸ்வரபுரம், 191. பூசனூர், 192. வட மலை சமுத்திரம், 193. வேலாயுதபுரம், 194. குமாரசக்கணாபுரம், 195. சுப்பையாபுரம், 196. வீரபாண்டிபுரம், 197. குளத்தூர், 198. முத்துராமலிங்கபுரம், 199. பனையூர். 200. ஸ்ரீராமபுரம், 201. கலைஞானபுரம் (அல்லது கலைக்குட்டம்), 202. சிப்பிகுளம், 203. கீழவைப்பார். 204. துலக்கன்குளம், 205. அகமதுபுரம், 206. கெச்சலாபுரம், 207. ராமநாதபுரம், 208. ராமச்சந்திரபுரம், 209. சுப்பிரமணியபுரம், 210. புளியங்குளம், 211. அரசன்குளம், 212. வி. வேடப்பட்டி, 213. நெடுங்குளம், 214. பல்லாகுளம், 215. இ. வேலாயுதபுரம், 216. மேல்மாந்தை, 217. கன்னிமார் குட்டம், 218. விரிச்சம்பட்டி, 219. மாமு நைனார்புரம், 220. மந்தி குளம், 221. ஓலைப்பட்டி, 222. இலந்தைகுளம், 223. மீனாட்சி புரம், 224. லெக்கம்பட்டி, 225. மாதராஜபுரம், 226. தத்தனேரி, 227. வீரகாஞ்சிபுரம், 228. ஊசிமிணியாபுரம், 229. சுப்பிரமணிய புரம், 230. எம். குமாரசக்கணாபுரம், 231. குரங்குடி, 232. கே.

தங்கம்மாள்புரம், 233, ராயப்பபுரம், 234. எம். சண்முகபுரம், 235. கீழசண்முகபுரம், 236. பெரியசாமிபுரம், 237. குஞ்சியாபுரம், 238. முத்தையாபுரம், 239. சிவப்பரங்குன்றம், 240. வேம்பார், 241. பச்சையாபுரம், 242. ராமராயபுரம், 243. மாதராஜபுரம், 244. சுப்பிரமணியபுரம், 245. கல்லூரணி, 246. வைப்பார், 247. குண்டப் பெருமாள்புரம்.

**கள ஆய்வில் கண்டறிந்த சிறு தெய்வங்கள்**

இருளப்பசாமி, கருப்பசாமி, மாடசாமி, அய்யனார், கற்குவேல், லெக்கப்பசாமி, தொட்டராயன், வைரவன், சுடலைமாடன், முனிய சாமி, மொட்டை இருளப்பன், பாண்டிமுனி, தலைவாயில் கருப்ப சாமி, கிழக்குத்தியான், சப்பாணி, உத்தண்டசாமி, சமயக் கருப்பன், சங்கிலிக் கருப்பன், லாடசன்னாசி, அக்னிவீரன், முத்தையசாமி, சங்குச்சாமி, முண்டன்சாமி, பெரியாண்டவர், சித் தாண்டி, சன்னாசி, மாலைக்கருப்பசாமி, கொண்டிதாத்தன், தலத்து கருப்பசாமி, சொரிமுத்தையன், வீரஓவு, கழுங்கசாமி, அப்பண்ணசாமி, ரெட்டியப்பட்டிசுவாமி.

**பெண் தெய்வங்கள்**

ராக்காட்சியம்மன், காளியம்மன், பத்ரகாளியம்மன், வீர நாகம் மாள், சக்கம்மாள், மாரியம்மாள், துர்க்கையம்மன், ஆவுடையம் மாள், செல்லியம்மன், வீரசின்னம்மாள், திக்கம்மாள், காந்தாரி யம்மன், கரடியம்மன், வெயிலுகந்தம்மன், காட்சிக்காரம்மன், முப் பிடாரியம்மன், கலியுக நாச்சியாரம்மன், சீலைக்காரியம்மன், மாதா, உச்சி மாகாளி, வடக்கு வாய்ச் செல்வி, மல்லம்மாள், பாம் பாலம்மன், அரியநாச்சியம்மாள், முத்துமாலையம்மன், முத்தா லம்மன், வீரகாளியம்மன், அங்காள ஈசுவரி, வீரகல்யாணி, சௌண்டம்மன், சின்னுவையம்மாள், வீர வையம்மாள், கோப்பம்மாள், ஒன்னம்மாள், ராக்கம்மாசூரம்மா, குளத்து அம்மன், மந்தையம்மன், வடக்குத்தியம்மன், சந்தனமாரி, உமை யம்மன், வீரகாத்தியம்மன், வெள்ளமாளம்மாள், இடைச்சியம்மன், பெத்தனாட்சியம்மன், பெத்தாலம்மன், தேவலக்கம்மாள், மாலை, சோலையம்மன், காமாட்சியம்மன், மரகதவல்லி, செம்புலியம்மன், வண்டி மலைச்சியம்மன், மாடதேவி, அழகு நாச்சியம்மன், நாரணம் மாள், வீரமுத்தம்மாள், சந்திரமாகாளி.

விளாத்திகுளம் வட்டம் சார்ந்த ஊர்கள் அனைத்தும் நாட்டுப் புறப் பகுதிகள் ஆகும் என்பதும், அப்பகுதியில் உள்ள தெய்வங்கள் அனைத்தும் நாட்டுப்புறத் தெய்வங்கள் என்பதும் இதனால் பெறப் படுகின்றன. இந்த நாட்டுப்புறத் தெய்வங்களில் முதன்மை யாகவும் பெரும்பான்மையான அளவிலும் இருப்பவை பெண் தெய் வங்களே என்பதும் பெறப்படுகிறது.

# 4. ஊர்த் தெய்வங்கள்

ஊர் தோன்றிய நாள் தொட்டு ஊரைக் காத்துவரும் தெய்வம் காவல் தெய்வம் ஆகும். இதைக் கிராமதேவதை என்றும், ஊர்ச் சாமி என்றும், கிராம தெய்வம் என்றும் கூறுவர். மனிதனுடைய சுகதுக்கங்களில் பங்கேற்பவரைத்தான் மனிதன் விரும்புவான்; அது போன்று மக்களின் சுகதுக்கங்களில் மக்களுக்கு உறுதுணையாக இருந்து 'நல்லது பொல்லது'களில பங்கேற்றுக் காக்கும் தெய்வமாக ஊரிலுள்ள சில துடியான தெய்வங்களை நினைக்கிறார்கள். இவைதாம் ஊர்த் தெய்வங்களாகும். ஊரைக் காப்பதே கிராம தேவதையின் கடமை (ஸ்டீபன் இன்கிலீஷ் 1980:2).

ஒவ்வொரு ஊரும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட தெய்வங்களின் சக்திக்குட்பட்டதாக – கட்டுப்பட்டிருப்பதாகக் கருதப்படுகிறது. அக்கிராமத்தின் நிலப்பகுதி, நீர்நிலை, மக்கள், கால்நடைகள் ஆகிய அனைத்தையும் காக்கும் பொறுப்பு அத்தெய்வங்களைச் சேர்ந்தது. எனவே, அக்கிராமத்தில் குடிகொண்டுள்ள தெய்வங்களின் அனுமதியில்லாது எந்தவித தீய சக்திகளும் அல்லது தெய்வங்களும உட்புக முடியாது. சடங்குகள் காணிக்கைகளின் மூலம் கிராம மக்கள் இத் தெய்வங்களை மகிழ்வித்தால் நன்மைகள் பெருகும். புறக்கணித்தாலோ துன்பங்கள் தலைகாட்டும். அத் தெய்வங்களைக் குறித்து இப்படிப்பட்ட நம்பிக்கைகளை மக்கள் கொண்டுள்ளனர். இத்தகைய தெய்வங்களைப் பாமர மக்கள் மனமார ஊர்த்தெய்வம் என்று அழைத்து வருகின்றனர் (வேலுச்சாமி, ம., 1983: 52).

ஊர்த்தெய்வம் வேறு எல்லைத் தெய்வம் வேறு. ஊர் எல்லையைக் காத்து நிற்கும் தெய்வம் எல்லைத் தெய்வம் ஆகும். இதற்கு எல்லையம்மன் என்று பெயர். இத் தெய்வங்கள் ஊர்த் தெய்வங்களுக்குக் கட்டுப்பட்டவையாகக் கருதப்படுகின்றன. ஊருக்கு மழை பெய்யாதிருக்கும். எலலை கட்டிப் பெய்யும். அதாவது இந்த ஊர் எல்லைவரை மழை பொழியும். ஊருக்கு மழை இருக்காது. அவ்வாறு இருந்தால் எல்லையம்மனுக்குப் பொங்கல் வைப்பார்கள். பொங்கல் என்பது பொங்கல் வைத்துப் பூசை நடத்துவதைக் குறிக்கும். இந்து தெய்வக் கோயில்களில் 'திருவிழா' என்று சொல்லுவதை, திராவிடத் தெய்வக் கோயில்

களில் கொடை என்றோ பொங்கல் என்றோ சொல்லுவார்கள். இந்த ஊரில் கோயில் கொடை, அந்த ஊரில் இன்று பொங்கல் என்பது போலச் சொல்லுவார்கள். இங்கு எல்லையம்மன் கோயில் என்று ஒன்றுமிருக்காது. திசை நோக்கிக் கும்பிடுவார்கள், சிலை ஒன்றுமிருக்காது. இவ்வாறு பொங்கல் வைத்து வழிபடும் நிலப் பகுதி இன்று, 'எல்லை நிலம்' 'எல்லைப் புஞ்சை' என்று மேலக் கல்லூரணி கிராமத்தில் வழங்குகிறது. இதற்கு நிர்வாகப் பொறுப்பைக் கவனிப்பவர் எல்லைக்காரர் என்று அழைக்கப்படு கிறார்.

ஊர்த் தெய்வம் என்று அழைக்கப்படுவது பலவாறாகக் கொள் ளப்படுகிறது. ஒரு சில ஊர்களில் ஊர்த் தெய்வம் என்று குறிப் பிட்டு எதையும் சொல்வதில்லை. ஆண்டுதோறும், அல்லது மிகுதி யாகப் பொங்கல் நடத்தும் கோயில்களில் உள்ள தெய்வங்களை ஊர்த் தெய்வங்கள் என்று சொல்லுகிறார்கள். வேறு சில ஊர் களில் ஊர்த் தெய்வங்கள் என்று எதையும் குறிப்பிட்டுக் கூறுவ தில்லை, அவ்வூர்களில் ஓரிரு கோயில்கள்தாம் இருக்கின்றன. அவை எல்லாம் அவர்களுக்கு ஊர்த்தெய்வங்கள்தாம். குறிப்பிட்டு இன்னின்னதான் ஊர்த் தெய்வம் என்று சொல்வதில்லை. எல்லாம் ஊர்த்தெய்வங்கள்தாம் என்று சொல்கிறார்கள். அவ் ஊரில் எல்லோரும் ஒரே சாதியினராக இருப்பார்கள். ஆகவே அவர்களுக்குக் குலத்தெய்வம், ஊர்த் தெய்வம், இனத் தெய்வம் என்று பகுத்துப் பார்க்கத் தெரிவதில்லை.

விளாத்திகுளம் வட்ட ஊர்களில் ஊர்த் தெய்வங்களாகக் குறிப்பிட்டுக் கூறப்படும் தெய்வங்கள்.

**ஆண் தெய்வங்கள்**

இருளப்பசாமி, கருப்பசாமி, அய்யனார், மாடசாமி, சுடலை மாடன், முனியசாமி, தலைவாயில் கருப்பசாமி, உத்தண்டசாமி, சமயக் கருப்பசாமி, சங்கிலிக் கருப்பசாமி, பெரியாண்டவர்.

**பெண் தெய்வங்கள்**

காளியம்மன், மாரியம்மன், துர்க்கையம்மன், செல்வியம்மன், காந்தாரியம்மன், கரடியம்மன், வெயிலுகந்தம்மன், காய்ச்சிக் காரம்மன், உச்சிமாகாளி, வடக்கு வாய்ச் செல்வி, அரிய நாச்சி யம்மன், வீரகாளியம்மன், அங்காள ஈசுவரி, குளந்து அம்மன்,

மந்தையம்மன், வடக்குத்தியம்மன், சந்தனமாரியம்மன், உமையம்மன், பெத்தனாட்சி, சோலையம்மன், காமாட்சியம்மன், மரகதவல்லி, செண்பக வல்லியம்மன், சந்திரமாகாளி.

**அய்யனார்**

ஊர்த் தெய்வங்களில்—எல்லாக் கிராமங்களிலும் இருக்கும் தெய்வம் அய்யனார் ஆகும். அய்யனார் கோயில் எல்லாக் கிராமங்களிலும், பெரும்பாலும் திறந்தவெளியில் ஒரு மரத்தடியில் உள்ள பீடத்தில் சிலை கொண்ட அமைப்பாகத்தான் இருக்கிறது; மண்சிலை இருக்கிறது; குதிரை, நாய், வீரர்கள் அய்யனார் சிலைக்குப் பக்கத்தே இருக்கின்றன; வீரர்கள் தங்கள் தலைவரைக் காப்பதற்காக நிற்கிறார்கள்; மிருக வாகனங்கள், இரவில் ஊரைக் காக்கச் செல்வதற்கு உரிய வகையில் இருக்கின்றன; இந்த வாகனங்களில்தான் சவாரி செய்து மக்களை அய்யனார் காத்து வருவதாக நினைக்கிறார்கள். அய்யனாருக்குத் துணைத் தெய்வமாக கருப்பசாமி எல்லா ஊர்களிலும் இருக்கிறது. கருப்பசாமியைக் கறுப்பணசாமி என்றும் அழைக்கின்றனர். இவர் கோயிலின் முன் வேட்டைக்குச் செல்லும் பாவனையில் இருப்பவர்; நாயைக் கட்டிய சங்கிலியைக் கையில் பிடித்துக்கொண்டு அரிவாளை ஒரு கையில் ஏந்திக் கொண்டு கம்பீரமாகத் தோன்றுவார். ஏழு கன்னிமார்கள் அய்யனார் பக்கத்தே இருப்பர். சில இடங்களில் வெறும் பீடம் மட்டும் இருக்கிறது. இதை அய்யனார் கோயில் என்று அழைப்பர்.

அய்யனார் கோயில் என்றாலே அங்குக் காவல்காரனாகக் காத்துக்கொண்டிருக்கும் தெய்வம் கருப்பசாமியாக இருக்கும். வேலிடுபட்டி, வைப்பார், புளியங்குளம், ராஜாபட்டி, சோலைமலையன்பட்டி ஆகிய ஊர்களில் உள்ள அய்யனார் கோவில்களில் கருப்பசாமி இல்லாது இருக்கிறது. பொதுவாகப் பலிகொடுக்கும் போது கருப்பசாமியின் முன்தான் பலி கொடுக்கப்படுகிறது; அப்போது அய்யனார் சிலை துணியால் மறைக்கப்படுகிறது. வைப்பாரில் அய்யனார் கோவில் பூசாரியாக ஐயர் இருக்கிறார். ஆகவே வேண்டுமென்றே பலி கொடுக்கக் கூடாது என்ற நோக்கத்தில் கருப்பசாமி இல்லாதிருக்கலாம்; இதேபோன்று மேலே கூறப்பட்ட ஏனைய ஊர்களிலும் முழுவதும் சைவமாக ஆக்கப்பட வேண்டும என்பதற்காகவும் கருப்பசாமியை வைக்காதிருக்கலாம் இது மேலும் ஆராயப்பட வேண்டியதொன்றாகும்.

அய்யனார் கோவிலில் கருப்பசாமி இல்லையென்றால் தனியாகக் கருப்பசாமிக்குக் கோவில் வைக்கும் பழக்கம் பல ஊர்களில்

காணமுடிகிறது. வைப்பாரில் தனியே கருப்பசாமிக் கோவில் இருக்கிறது. நம்பிபுரத்தில் தலைவாயில் கருப்பசாமி இருக்கிறது; வேலிடுபட்டி, புளியங்குளம் ஆகிய ஊர்களில் கருப்பசாமிக்குத் தனிக் கோவில் இல்லை. குளக்கட்டாங்குறிச்சியில் அய்யனார் கோவிலில் கருப்பசாமி துணைத்தெய்வமாக இருந்தபோதும் தனியாகக் கருப்பசாமிக்கே கோவில் இருக்கிறது. இதைத் தலைவாயில் கருப்பசாமி என்று அழைக்கின்றனர். அதாவது ஊர் எல்லைமில் பல ஊர்களில் உள்ள எல்லைக் கருப்பைத்தான் இங்கு தலைவாயில் கருப்பசாமி என்று அழைப்பதாகக் கொள்ளலாம்.

சில ஊர்களில் அய்யனார் கோவிலைக் கருப்பசாமி கோயில் என்றே அழைக்கின்றனர். கோவிலின் முன் பகுதியில் சிலை கொண்டுள்ள பாங்கால், பலி போன்ற வழிபாடுகள் மிகுதியாக நடைபெறும் முறையால், தோரணையால் மக்கள் முன் கருப்ப சாமிதான் பிரபலமடைகிறார். ஆகவேதான் சில ஊர்களில் அய்யனார் கோவிலைக் கருப்பசாமி கோவில் என்று சொல்லி வருகின்றனர். வேம்பாரில் இப்படித்தான் சொல்கிறார்கள் (பால்ராஜ், மா , 5-9-1984)

அய்யனார் ஊரின் முன்னோடித் தெய்வம். ஊரின் காவல் தெய்வம். அத்தெய்வத்திற்குத்தான் முதற்பூசை நடக்கும். ஆனால் தமிழ்நாட்டில் ஒரே ஒரு இடத்தில் திருச்சி மாவட்டத்தில் அய்யனார் துணைத் தெய்வமாகக் காட்சியளிக்கிறார் (இராமச் சந்திரன், ப , 20-9-1984). ஆண் தெய்வங்களில் முதன்மை யானவர் அய்யனார். அய்யனார். கோவில் சிலை கற்சிலையாக சில ஊர்களில்தாம் இருககின்றன பெரும்பாலும் மண் சிலையாகவே இருக்கின்றன. இன்னும் சில ஊர்களில் வெறும் பீடம் மட்டும் கட்டப்பட்டு சிலை எதுவும் வைக்கப்படாது இருக்கிறது. மண்சிலை வைத்திருந்தால் ஆண்டுதோறும் பொங்கல் நடக்கும்போது பொதுச் செலவில் புதிய சிலை வைக்கப்படுகிறது; பழைய சிலையை அருகில் ஒதுக்குப்புறமாக வைத்துவிடுகிறார்கள். அதற்குப் பூசை எதுவும் நடத்துவதில்லை. புதிய மண்சிலையை வேளார் செட்டியார்கள் களிமண்ணால் செய்து கொடுக்கிறார்கள்; பூசை நடத்தி மண் எடுத்து வந்து சிலை செய்கிறார்கள்; சிலை எடுக்கும் விழா சிறப்பாக நடத்தப்படுகிறது. இதை சிலைக்குக் கண்திறக்கும் விழா என்று சொல்கிறார்கள் (இராஜாராம், பெ., 16-8-1984).

சிலை கற்சிலையாக இருப்பின் ஆண்டுக்கு ஒரு முறை எண்ணெய் தடவி பால், நெய், பழரசம் கொண்டு குளிப்பாட்டு கிறார்க ; இதைச் சில ஊர்களில் அபிஷேகம் என்று அழைக் கிறார்கள் (சீனிவாசன், து , 3-9-1984). வெறும் பீடம் உள்ள இடங்களில் பொங்கல் சமயம் மாலைகளை அதன்மீது போட்டு வழிபடுகிறார்கள் (இராசாமி, பெ., 10-9-1984).

அய்யனார் ஊர் மக்களைக் காப்பதற்காக—அதாவது தீய சக்திகளிலிருந்து காப்பதற்காக எப்போதும் இரவு வேளைகளில் குதிரைமீது சவாரி செய்து ஊர்வலம் போவார் என்று நம்பப் படுகிறது. அவ்வாறு இரவு வேளைகளில் செல்லும்போது எதிர்ப் படுவோர் பிழைப்பதரிது என்று மக்கள் நம்புகிறார்கள். அய்யனார், கருப்பசாமி 'வேட்டைக்குச் செல்லும் நேரம்' என்றே மக்கள் வழக்கில் பொழுதைக் கணக்கிட்டுக் கூறுகிறார்கள். மாலை மயங்கும் நேரத்தை சாமி 'பால்குடிக்கும் நேரம்' என்று கூறு கிறார்கள் (தொட்டராயன், தொ , 3-10-1984).

அய்யனார் துடியான தெய்வம் என்று மக்கள் நம்புகிறார்கள். ஆகவே சத்தியத்திற்குக் கட்டுப்பட்ட தெய்வமாக மதிக்கிறார்கள். கொடுக்கல் வாங்கல் தகராறு, திருட்டுக் குற்றம் ஆகிவற்றைத் தீர்க்கும் நீதிபதியாக அய்யனாரை மதிக்கிறார்கள். அய்யனார். முன் சத்தியம் பண்ணினால், போதும்; குற்றம் செய்தவர் நிச்சயம் தண்டிக்கப்படுவார் என்பது நாட்டுப்புற நம்பிக்கையாகும். சில ஊர் களில் அய்யனார் கோவிலில் துட்டு (காசு) வெட்டினால் போதும்; குற்றம் செய்தவர் ஒழிந்து போவார் என்று நம்புகிறார்கள் (சீனி வாசகன், து., 3-9-1984). சர்வாதிகாரிகளில் நல்லெண்ணம் படைத்த சர்வாதிகாரி போன்று அய்யனார் துடியான தெய்வங் களில் நல்ல தெய்வமாக மதிக்கப்படுகிறார்.

அய்யனார் நாட்டுப்புறத் தெய்வங்களில் மேல்நிலை ஆக்கத் தெய்வமாக மதிக்கப்படுகிறார்; மேல்சாதியினர் வழிபடும் தெய்வ மாகப் போற்றப்படுகிறார். ஆகவேதான், அய்யனார் கோவில்கள் இருக்கும் ஊர்களில் தாழ்த்தப்பட்டோர் மிகுதியாக இருந்தால் கருப்பசாமிக்கு என்றே தனியாகக் கோவில் வைத்திருப்பார்கள்; தனியாகக் கோவில்கள் இல்லையென்றாலும் அய்யனார் கோவிலி லுள்ள கருப்பசாமிக்கு முக்கியத்துவம் கொடுத்து அதைப் பிரபலப் படுத்துவர்; அதற்குச் சிறப்பு வழிபாடு நடத்துவர்; இப்படித்தான் அய்யனார் கோவில்களில் கருப்பசாமி இருந்தும் தனியாகக் கருப்ப

சாமிக் கோவில்கள் உண்டாகக் காரணமாக இருந்திருக்க வேண்டும்.

கரிசல் குளத்திலுள்ளஅய்யனார், கற்குவேல் அய்யனார் என்று போற்றப்படுகிறார். இது அரிஜனத்திற்குரிய கோவிலாகும்; சாம்பான் இனத்திற்குப் பாத்தியப்பட்டக் கோவில்; இன்றும் இப்பகுதியில் கீழ்ச்சாதியினரில் கற்குவேல் என்ற பெயர் பொதுவாகக் காணப்படுகிறது. அய்யனார் என்று மற்றப் பிரிவினர் அழைக்க, வேறு பிரிவினர் அதைக் கற்குவேல் என்று அழைத்து வருகின்றனர். அவர்கள் இன முன்னோர் இறந்துபட அதைக் கொண்டு வழிபடும் முறையாகவும் கற்குவேல் அய்யனார் இருக்கலாம்; குலத் தெய்வ வழிபாடாக இருக்கலாம். இது மேற்கொண்டு ஆராய வழி அமைப்பதாக உள்ள செய்தியாகும். மேலக்கல்லூரணியில் அய்யனார் கோவில் முதலில் குலத் தெய்வக் கோவிலாகத்தான் இருந்தது; அனுப்பக் கவுண்டரில் ஆணிவான் என்ற கிளை இருக்கிறது. இப்பிரிவினர் வழிபடும் தெய்வமாக அய்யனார் இருந்தது. இதற்குப் பூசாரி இன்றும் ஆணிவான் கிளையைச் சார்ந்தோரே இருக்கிறார்கள், முன்பெல்லாம் இக்கோவிலுக்குப் பொங்கல் வைக்கும்போது ஊர் மக்கள் அவ்வளவு சிரத்தையோடு இருக்க மாட்டார்கள்; சிறப்பு வழிபாடு எல்லாம் ஆணிவான் கிளையினர் தான் நடத்துவார்கள். சிலை செய்வதற்கு அவர்களே வரி வசூல் செய்து பணம் கொடுப்பார்கள்; அவர்களால் நாளடைவில் கொண்டு செலுத்த முடியாமல் போகவே ஊர் வசம் கோவிலை ஒப்படைத்து விட்டார்கள். இப்போது ஊர்த் தெய்வமாக மக்கள் வழிபட்டு வருகின்றார்கள் (துளசிராமு, வெ., 3-10-1984). அய்யனார் குலத் தெய்வக் கோயிலாகவும் ஊர்த் தெய்வக் கோயிலாகவும் இருக்கிறது. குலத் தெய்வக் கோயில்கள் பெரும்பாலும் முன்னோர் வழிபாடாக இருப்பது குறித்து ஏற்கெனவே சொன்னதை இங்கே நினைவு கூர்தல் நல்லது.

அய்யனார் கோயில்களில் நேர்த்திக் கடனாகத் தவழும் பிள்ளை உருவம் செய்து வைக்கப்படுகிறது. வேலிடுபட்டியில் அய்யனார் கோவிலில் சிலை ஒன்றுமில்லை. ஆனால் நேர்த்திக் கடனாகச் செய்து வைத்தத் தவழும் பிள்ளை சிலைகள்தாம் இருக்கின்றன. பிள்ளைகளுக்கு எந்தவிதத் தீங்கும் ஒட்டாவண்ணமும் நலமுடன் வாழ வேண்டியும் இந்த நேர்த்திக் கடன் விடப்படுகிறது. கந்தசாமி, சி., 12-9-1984). சில ஊர்களில் கோயில் காளை

களும் நேர்த்திக் கடனாக விடப்படுகிறது (பொன்னுராமு, ச., 15-8-1984). மொட்டை போட்டு பெயர் விடுகிறார்கள்.

அய்யனார் கோவில் ஊருக்கு வெளியேதான் இருக்கிறது. காவல் தெய்வமாக இருப்பதால் இவ்வாறு இருக்கிறது. பெரும்பாலும் பூசாரிகள் வேளார் செட்டியார்களாகவே இருக்கிறார்கள்; பண்டாரம் என்று சொல்லப்படும் புலவர் இனத்தாரும் சில ஊர்களில் பூசாரிகளாக இருக்கின்றார்கள். குலத் தெய்வக் கோயில்களாக இருக்கும் ஊர்களில் அந்தந்தக் குலத்தைச் சார்ந்தவர்கள் பூசாரிகளாக இருக்கிறார்கள்; நாளடைவில் குலத்தைச் சார்ந்தவர்கள் பூசாரிகளாக இருக்க விருப்பமில்லாததால் வேளார் செட்டியார் அல்லது பண்டாரம் பூசாரிகளாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

கருப்பசாமி

கருப்பசாமிக்கோயில்கள் விளாத்திகுள வட்டத்தில் எல்லா ஊர்களிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன; தனிக் கோயில்கள் அவ்வளவாக இல்லை; அய்யனார் கோயில்களில் துணைச் சாமியாகவே கருப்பசாமி காணப்படுகிறார்; இருந்தபோதிலும் கருப்பசாமிக்குத்தான் அந்தந்த ஊர்களில் ஏற்றம் மிகுதியாகக் கிடைக்கிறது. இவ்வட்டத்தில் கருப்பசாமி, பெரும்பாலும் அம்மன் கோயில்களில் துணைச் சாமியாக இருக்கவில்லை. அய்யனார் கோவில்களில்தான் துணைச்சாமியாக இருக்கிறார். புதூர் மாதா கோவிலிலும் குளக்கட்டாங்குறிச்சியிலுள்ள கலியுக நாச்சியாரம்மன் கோவிலிலும் கருப்பசாமி துணைச்சாமியாக இருக்கிறார்.

அய்யனார்க்கு அடுத்தபடியாக ஊர்த்தெய்வமாகப் போற்றப்படுபவர் கருப்பசாமி. இவர் கருப்பு, கறுப்பணன், கறுப்பணசாமி என்றும் அழைக்கப்படுகிறார்; உத்தண்டசாமி என்றும் வெம்பூரில் அழைக்கப்படுகிறார்.

கருப்பசாமிக் கோயில் ஊருக்கு வெளியேதான் இருக்கிறது. வெறும் பீடம் மட்டும் போடப்பட்டு, எந்தவிதக் கூரையும் வேலியும் இல்லாது சில இடங்களில் இருக்கிறது; பீடம் மட்டும் போட்டு வெட்டரிவாள் அதன்மீது வைக்கப்பட்டும் சில இடங்களில் இருக்கிறது; இன்னும் சில இடங்களில் மரத்தின் அடியில் ஒரு குத்துக்கல் மட்டும் இருக்கிறது; இதுவும் கருப்பசாமிதான். சுற்றிலும் முள்வேலி போடப்பட்டு அதன் நடுவில் உள்ள திண்ணையில் கல்சிலை

சில இடங்களில் இருக்கிறது. சில இடங்களில் ஓட்டுச் சாவடி அல்லது கூரைச்சாவடிகளிலும் பீடம் போடப்பட்டிருக்கிறது. அதன் மீது சிலை சிலவிடங்களில் இருக்கிறது; பல இடங்களில் சிலை இல்லாதும் இருக்கிறது. சிலை கற்சிலையாகவோ, மண் சிலையாகவோ இருக்கும். மண்சிலை என்றால் ஆண்டுதோறும் நடக்கும் பொங்கலில் புதிய சிலை கொண்டுவந்து வைக்கப்பட்டு, பழைய சிலை இடம்பெயர்த்து வைக்கப்படுகிறது. இது எல்லா ஊர்களிலும் நடக்கும் சம்பிரதாயமாகவே இருக்கிறது. மண்சிலை மண்ணால், வேளார் செட்டியாரால் செய்து வைக்கப்படுகிறது. மண்சிலைக்கு அபிஷேகம் நடத்துவதில்லை; ஆனால் கற்சிலைக்கு ஆண்டுக்கு ஒருமுறை—அதாவது பொங்கலன்று எண்ணெய்க் காப்பிடப்படுகிறது; பால், பன்னீர், நெய், பழரசம் கொண்டு அபிஷேகம் நடத்தப்படுகிறது.

ஊர்த் தெய்வமாக இருக்கும் கருப்பசாமி இரவில் வேட்டைக்குச் செல்வதாக நம்பப்படுகிறது. குதிரை வாகனத்தில் இரவில் ஊர் சுற்றி வருவதாகச் சொல்லப்படுகிறது (சுந்தரம்.,ஆர்.,10-9-1984). பேய், பிசாசு போன்ற தீய சக்திகளினின்றும் ஊர் மக்களைக் காக்கும் கடவுளாகக் கருப்பசாமி போற்றப்படுகிறார்.

அய்யனார் கோவிலில் நடக்கும் வழிபாடு போன்றில்லாது, கருப்பசாமிக்கு நேரிடையாகவே பலி கொடுக்கப்படுகிறது; இதைக் காவு கொடுத்தல் என்று கூறுகிறார்கள் (முத்தையா, கே., 9-9-1984). ஆட்டுக்கிடா, ஈனாத வெள்ளாடு ஆகியவற்றைப் பலி கொடுக்கிறார்கள்;பலி கொடுக்கும்போது சாமியின்முகத்தை மறைப்பதில்லை. மாமிசப் படைப்பு பூசையின் போது போடப்படுகிறது. சில இடங்களில் பன்றியும் பலியாகக் கொடுக்கப்படுகிறது; அரிஜனங்கள் வாழும் ஊர்களில் உள்ள கோவில்களில், அரிஜனங்கள் பூசாரியாக உள்ள இடங்களில் பன்றி காவு கொடுக்கப்படுகிறது. அவரவர்கள் எந்த மாமிசத்தைத் தின்கிறார்களோ, அந்தந்த மிருகங்களைப் பலி கொடுப்பது சாதாரண நிகழ்ச்சி; சக்திக்குத் தக்கவாறும் — அதாவது பொருளாதார அடிப்படையிலும் சேவல் போன்ற பறவைகள் நேர்த்திக்கடனாகத் தேர்ந்துவிடப்பட்டு பலி கொடுக்கப்படுகின்றன. தமிழ்நாட்டில் முன்னையக்காலகட்டங்களில் இன்று ஆந்திராவில் நடப்பது போன்று, எருமைக் கடாவும் பலியாகக் கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது. இதை வொய்ட்ஹெட் (1983:9) அவர்களும் தம்நூலில் குறிப்பிடுகின்றார். இன்றும் தென்னாற்காடு, திருச்சி மாவட்டங்களில் சில ஊர்களில் எருமைக் கடா பலி கொடுக்கப்பட்டு வருவதாகச் சொல்லப்படுகிறது.

அரிஜனங்களுக்கு முக்கிய தெய்வங்களாகக் காளியும், கருப்ப சாமியும் இருக்கின்றன. ஒரு ஊரில் அரிஜனங்கள் மிகுதியாக இருந்து, ஊரில் மற்ற இனத்தார்கள் வழிபடுவதற்குக் காளியும் கருப்பசாமியும் இருந்தால், அரிஜனங்கள் தங்களுக்கென்று காளி யம்மனையும் கருப்பசாமியையும் வழிபடத் தனிக் கோயில்கள் கட்டி வைத்துள்ளார்கள். இதைப் பல ஊர்களில் காணமுடிகிறது. பிள் ளையார் நத்தத்தில் அய்யனார் கோவிலில் கருப்பசாமி இருக்கிறது. ஆகவே அரிஜனங்கள் தாங்கள் தனியாக வழிபடுவதற்கென்றே கருப்பசாமிக்குத் தனிக் கோயில் கட்டிவைத்துள்ளார்கள். புளியங் குளத்தில் கருப்பசாமி கோயிலில் அரிஜன இனத்தைச் சார்ந்தவரே பூசாரியாக உள்ளார். இக்கோயிலை எல்லா இனத்தார்களும் வந்து வழிபடுகிறார்கள். அரிஜனங்களுக்குக் கருப்பசாமி குலத் தெய்வக் கோயிலாகவும் இருக்கிறது.

நாகலாபுரத்திலுள்ள வன்னிக்குளம் கருப்புசாமிக்கு பூசாரி வேளார்செட்டியார். இது ஒரு குலத்தெய்வக் கோயிலாகவும் இருக் கிறது. ஊர்த்தெய்வக்கோயிலாகவும் இருக்கிறது. இக்கோயிலில் அய்யனார் சிலையும் இருக்கிறது. முன்பு பிரதானமாக அய்யனா ரைத்தான் வழிபட்டு வந்திருக்கவேண்டும்; அதைச் சுற்றி 7 கன்னி மார் சிலைகள் வைக்கப்பட்டிருக்கின்றன; கருப்பசாமி, சின்னக் கருப்பசாமி, சங்கிலிக்கருப்பசாமி என்று கருப்பசாமிக்குப் பல சிலைகள் இருக்கின்றன. அய்யனார்கோவிலாக இருந்து கருப்பசாமித் துணைச் சாமியாக முதலில் இருந்திருக்க வேண்டும். பின் குலத் தெய்வக் கோயிலாக மாறும்போது சின்னக் கருப்பசாமி, சங்கிலிக்கருப்பசாமி ஆகிய சாமிகள் வந்திருக்கவேண்டும். இன்று இது பலஇனத்திலுள்ளவர்களுக்குக் குலத்தெய்வக்கோயிலாக இருக் கிறது; அதாவது கருப்பசாமி ஒரு இனத்தாருக்கும், சின்னக்கருப்ப சாமி ஒரு இனத்தாருக்கும், சங்கிலிக் கருப்பசாமி ஒரு இனத்தாருக் கும் குலத் தெய்வங்களாகி யிருக்க வேண்டும்; அந்தந்த இனத்தைச் சேர்ந்த முன்னோர்கள் வழிபாடாகக் கருப்பசாமி,சின்னகருப்பசாமி, சங்கிலிக் கருப்பசாமி இருந்திருக்க வேண்டும். இதே ஊரில் மாலைக் கருப்பசாமி என்று தனிக்கோவிலும் இருக்கிறது. இதற்கு தேவர் பூசாரியாக இருக்கிறார்; இதன் பெயரிலிருந்து இது ஒரு மாலைக்கோயிலாக இருந்து குலத்தெய்வக் கோயிலாக மாறி ஊர்த் தெய்வமாக ஆக்கப்பட்டிருக்க வேண்டும் என்று தெரியவருகிறது.

திருச்சி மாவட்டத்தில் எசினி என்ற ஊரில் கறுப்பணசாமி கோயில் ஒன்று இருக்கிறது. இங்கு மூன்றுவித கறுப்பணசாமி இருக்

கிறார்கள்; கற்சுவரால் சுற்றிக் கட்டப்பட்டு, மத்தியில் உள்ள திண்ணையில் இந்த மூன்று சாமிகள் இருக்கின்றன; புலிமீது அமர்ந்த நிலையில் இச்சிலைகள் உள்ளன. பண்டூர் கறுப்பணன் புதுக் கறுப்பணன், ஊர்சுத்தியான் ஆகியவையே அவற்றின் பெயர்களாகும். பண்டூர் என்பது ஊர்ப் பெயராகும். அவ்வூரிலிருந்து கொண்டு வரப்பட்ட கருப்பணன் பண்டூர் கறுப்பணன் ஆகும்; புதுக் கறுப்பணன் புதியதாக வைக்கப்பட்ட கறுப்பணன்; ஊர்சுத்தியான், ஊரைச் சுற்றிக் காத்துவரும் கறுப்பணன். இக் கோயிலில் மதுரை வீரன் தன் மனைவியுடன் குதிரையின்மீது இருக்கிறார்; இக்கோயில் மேலக்கரையிலுள்ள பறையர்கள் வழிபடும் கோயிலாகும்; கறுப்பணனுக்கு மலையாயி என்ற மனைவியும் இக்கோயிலில் இருக்கிறாள் (இராமசந்திரன், ப. ,20.9.1984).

இக்கோயில் ஒரு குலத்தெய்வக் கோயில் போன்று இருக்கிறது. பறையருக்குப் பாத்தியப்பட்டக் கோயில். இங்குப் பல கருப்பசாமிகள் இருக்கின்றன; இவை வெவ்வேறு காலத்தில் வாழ்ந்த குலத்தின் முன்னோர்களாக இருந்து குலத் தெய்வமாக ஆகியிருக்க வேண்டும்; ஆகவே அந்தக் கருப்பசாமிக்கு மலையாயி என்ற மனைவி இருந்திருக்கிறாள். வேறு எங்கும் கருப்பசாமிக்கு மலையாயி என்ற மனைவி இருந்ததாகக் காணோம்.

இதைப் போன்றுதான் வத்தலக்குண்டு இடமலையான் மகாலிங்கக் கருப்பசாமிக் கோயிலும் குலத் தெய்வக் கோயிலாக இருந்து ஊர்த் தெய்வக் கோயிலாக ஆகியிருக்கிறது. இக்கருப்பசாமி பெட்டியில் மிதந்து வந்ததாகக் கதை கூறுகிறார்கள். வயலில் வேலை செய்து கொண்டிருந்தார்கள்; பிராமணர் ஒருவர் வேலை வாங்கிக் கொண்டிருந்தார். அப்போது ஆற்றில் பெட்டி மிதந்து வந்தது; அதை முதலில் பிராமணர் பார்த்தார்; எடுக்கச்சொன்னார்; அருள் வாக்கு சொல்லியது. நான் எட்டூர் கொட்டக்குடியில் பிறந்தவன்; என்னுடைய அனுமானங்களைப் பொறுக்க முடியாமல் பெட்டியில் அடைத்து தண்ணீரில் விட்டார்கள்; குட்டிக் குடிக்கும் குழுமாயி மகன்; மச்ச மில்லாத வெள்ளாடு அறுத்து ரத்தம் குடிக்கக் கொடுக்க வேண்டும்; வருடம் ஒருமுறை பொங்கல் வைத்து வழிபட வேண்டும் என்று கூறியது. பிராமணர், 'இச்செய்கை எனக்குஆகாது; ஆகவே நீங்கள் இதை எடுத்து வழிபடுங்கள்' என்று சொல்லி வேலையாளாகிய குடும்பனிடம் கொடுத்தார். வேலைக்காரக் குடும்பன் எடுத்துச் சென்று வழிபட்டான்; அது அவனுக்குக் குலத் தெய்வமாகவும் ஊருக்குக் காவல் தெய்வமாகவும் இருக்கிறது.

(விக்டோரியா, ஞா., 1984:29). பெட்டியில் வந்தது 21 தெய்வங்கள்; அத்தனையும் உடன்பிறப்புக்கள்; மின்னடிக்கருப்பு, கழுவடியான் கருப்பு, இடமலை மகாலிங்கக் கருப்பணசாமி, பெரிய கருப்பசாமி என்று இருந்தன. இந்த இடமலை மகாலிங்கக் கருப்பசாமியும் முன்னோர் வழிபாடாகத்தான் இருக்கிறது.

மதுரை மாவட்டம் பள்ளர் சமுதாயத்தின் ஒரு பிரிவாகிய மல்லிக்கூட்டத்தின் குலத் தெய்வம் பெரிய கருப்பசாமியாகும் (வேலுச்சாமி, ம., 1984:155). இதற்குத் துணைத் தெய்வங்களாக 13 சாமிகள் இருக்கின்றன. பெரிய கருப்பசாமி, சின்னக் கருப்பு, மந்தைக் கருப்பு, நொண்டிக் கருப்பு, சங்கிலிக் கருப்பு பெட்டி காத்த தெய்வம், சன்னாசி ஆகியவை அவற்றின் பெயர்கள்; இங்குச் சுட்டப்பட்ட தெய்வங்களும் முன்னோர் வழிபாடாகத்தான் இருக்கின்றன.

வெம்பூரில் உள்ள உத்தண்டசாமி, மதுரை வளையங்குளத்து கருப்பசாமியின் தோற்றமே என்று கூறுகிறார்கள். மதுரையிலிருந்து வெற்றிலை ஏற்றிக் கொண்டு வண்டிகள் தெற்கு நோக்கிப் போய்க் கொண்டிருந்தன; அப்போது வளையங்குளக் கருப்பசாமிக் கோயில் வழியாக வரும்போது கருப்பசாமி வந்து வண்டியில் ஏறி வெற்றிலையில் இருந்து கொண்டார்; வண்டி வெம்பூர் வந்தவுடன், இப்போது உத்தண்டசாமி கோயில் உள்ள இடத்தில் இருந்த வில்வ மர நிழலில் ஒதுங்கினார்; வண்டியும் போய்விட்டது. சாமியும் அங்கேயே தங்கிவிட்டார். அதுமுதல் கருப்பசாமி வெம்பூர்க்கு உத்தண்டசாமியாக இருக்கிறார்; கவுண்டர்களுக்குக் குலத் தெய்வமாகவும், ஊர்த் தெய்வமாகவும் இருக்கிறார் (தம்மணன், 1.10. 1984). கவுண்டர்தான் இங்கு பூசாரி. வளையங்குளக் கருப்பசாமியும் குலத்தெய்வக் கோயில்தான்; இந்த வெம்பூர் உத்தண்டசாமியைக் கருப்பசாமி என்று யாரும் அழைப்பதில்லை. இக்கோயிலில் பூசாரி குறி பார்த்துக் கூறுகிறார். துடியான தெய்வமாக இருப்பதால், திருட்டுக்குற்றம், வழக்கு போன்றவை இங்குத் தீர்க்கப்படுகின்றன, சத்தியம் செய்யப்படுவதின் மூலம் குற்றவாளிகள் தண்டிக்கப்படுவார்கள் என்று மக்கள் நம்புகிறார்கள். குழந்தைகளின் நலனுக்காகவும், நோய் நீங்க வேண்டியும் வாராவாரம் புதன் கிழமை தோறும் அக்கம்பக்கத்துக் கிராமங்களிலிருந்து இக்கோயிலுக்குச் சென்று வார வழிபாடு நடத்துகிறார்கள். முக்கியமாகப் பெண்கள் தாம் அதிகமாகச் செல்கிறார்கள்; அதிலும் கவுண்டர்கள்

தாம் வருகிறார்கள். ஆகவே இது குலத்தெய்வக் கோயிலாகவும் இருக்கிறது; ஊரின் காவல் தெய்வமாகவும் இருக்கிறது. இக் கோயிலின் பொங்கல் ஞாயிற்றுக் கிழமை தொடங்குகிறது; திங்கட் கிழமை கிடா வெட்டோடு முடிகிறது.

ஊருக்கு வெளியே எல்லையைக் காக்கும் தெய்வத்தையும் கருப்பசாமி என்றே அழைக்கிறார்கள்; இதை எல்லைக் கருப்பு என் பார்கள் (உமையன், உ.. 2.9.1984). ஊரின் வெளியே குத்துக் கல் ஒன்று நடப்பட்டிருக்கும். ஊரின் மற்றத் தெய்வங்களுக்கு வழிபாடு நடத்தும் பொங்கல் சமயம் இவ் வெல்லைக் கருப்புக்கு முதலில் பொங்கல் வைத்து வழிபடுவார்கள். இல்லையென்றால் வழி கொடுக்காது என்று நம்பப்படுகிறது. நாகலாபுரம் பள்ளி வாசல் பட்டி வண்டிமலைச்சியம்மன் கோவில் பொங்கலுக்கு முதல் நாள் வன்னிக் குளம் கருப்பசாமியை வழிபட்டு, அதன்பின் அங் கிருந்தே பொங்கலுக்கு தண்ணீர் கொண்டு வரும் மரபு இன்றும் காக்கப்படுகிறது.

சாமிப் பெட்டியையோ, சாமியையோ ஊர்வலமாகக் கொண்டு வரும்போது இடையே கருப்பு இருந்து தொல்லை கொடுக்கும்; அதற்காகவே எலுமிச்சம் பழத்தை வெட்டி எறிவார்கள்; காவு கொடுப்பதும் உண்டு. கருப்பசாமி எல்லாவிடங்களிலும் இருந்து ஊரைக் கண்காணிக்கிறார் என்று சொல்லுகிறார்கள் (கோவிந்தன், 11.8.1984).

மதுரைவீரனைக் கருப்பசாமி என்று அழைப்பதுன் உண்டு (சிதம்பரம், சொ., 8.9.1984). கருப்பசாமி போன்றுதான் மதுரை வீரனும் அய்யனார் கோவிலிலும் அம்மன் கோவில்களிலும் துணைச் சாமியாக இருக்கிறார்; கருப்பசாமிக்குளள வழிபாடுதான் அய்யனார்க்கும் நடக்கிறது.

மதுரைவீரன் அம்மன் கோயில்களில்தான் துணைச் சாமியாக இருக்கிறது. தனிக் கோயில் மதுரைவீரனுக்கு இல்லை மதுரை வீரனைப் பதினெட்டாம்படி கருப்பன் என்றும் அழைக்கிறார்கள்; பதினெட்டுப் படிகளைக் காக்கும் இறைவன் என்று போற்றப்பட்டு கிறார்; அழகர்சாமிக் கோயிலின் முற்றத்தில் பதினெட்டு படி கொண்ட திண்ணை ஒன்று இருக்கிறது. அதன்மீது பெரிய உருவம் கொண்ட-20 அடி உயரமான கருப்பசாமி சிலை இருக் கிறது; குடைபோன்று பெரிய அளவில் கண்கள் இருக்கின்றன

சிலை ஈட்டிகளாலும், ஆயுதங்களாலும் போர்த்தப்பட்டிருக்கிறது; அவ்வளவும் மக்கள் நேர்த்திக் கடனாகச் செய்து வைக்கப்பட்டவை யாகும். கோயில் சொத்துக்கள் வைக்கப்பட்ட அறையை மூடிச் சாவியைக் கொண்டு செல்லமாட்டார்கள்; அதற்குப் பதில் கருப்ப சாமியின் முன்பாகவே வைத்துவிட்டுச் செல்வார்கள். யாரும்வந்து கோயிலைத் திறந்து பொருட்களை எடுத்துச் செல்லத் துணியமாட் டார்கள்; கருப்பசாமி கோயிலைக் காப்பதே இதற்குக் காரணம் (வொய்ட்ஹெட், 1983:113-114). இங்கு மதுரை மாவட்டத்தில் பல தீர்க்கப்படாத சிவில் வழக்குகள் தீர்க்கப்பட்டன. மாவில்பட்டி என்ற ஊரிலும் 18-ஆம்படி கருப்பசாமி இருக்கிறது. இது தனிக் கோயிலாக இருக்கிறது.

தலத்துக் கருப்பசாமி என்று நம்பிபுரத்தில் இருக்கும் கருப்ப சாமியை அந்த ஊருக்கு முக்கிய சாமி என்ற பொருளிலே வழங்கு கிறார்கள்; தலத்தைக் காக்கும் தெய்வமாகவே வழிபடுகிறார்கள். குளக்கட்டாங்குறிச்சியிலுள்ள தலைவாயில் கருப்பசாமியை எல்லைக் கருப்பு என்ற பொருளிலே வழங்குகிறார்கள் (கிருஷ்ண மூர்த்தி, கே.எஸ்., 5.9.1984).

ஊரின் தலைவாயிலைக் காக்கும் கருப்பசாமியாகவே கொள் கிறார்கள். எல்லைக் கருப்புத்தான் தலைவாயில் கருப்பசாமி யாகும். மதுரை மாவட்டம் குஞ்சனம்பட்டி துவக்கத்தில் சாலை யின் இருபுறத்திலும் தூண் போன்ற கல் நடப்பட்டிருக்கிறது. ஊருக்குப் பொதுவான விழாக்கள் துவங்குவதற்கு முன்னர் இக்கல் தூண்களில் தோரணம் கட்டுகிறார்கள்; இத் தூண்களில் உறையும் கருப்பசாமி கிராமத்தின் தலைவாயிலைக் காக்கும் தெய்வமாகக் கருதப்படுவதால் 'தலைவாசல் சாமி' என்று அழைக்கப்படுகிறது (வேலுச்சாமி, ம., 1983:84). சில ஊர்களில் கிராமத்தின் மேற்கு எல்லையில் ஒரு மேடை மட்டும் உள்ளது. இம்மேடை 'ஊர்க் கோல்சாமி' என்னும் தெய்வத்திற்குரியது. இதுவும் எல்லைக் கருப்பாகத்தான் கருதப்படுகிறது (வேலுச்சாமி, ம., 1983:84) மதுரை மாவட்டம் சிலுக்குவார்பட்டியில் 4 அடி உயரத்தில் ஒரு கல் நடப்பட்டுள்ளது. உருவம் இருக்காது. இதில் கருப்பசாமி உறை வதாகக் கருதப்படுகிறது; அதனை எல்லைக் கருப்பு என்றே அழைக்கின்றனர் (வேலுச்சாமி, ம., 1983:54).

புதூரில் முருகன் கோயில் இருக்கிறது. இது மூப்பனார்க்குப் பாத்தியப்பட்டது; மூப்பனார்தான் பூசாரி. இங்கு சங்கிலிக் கருப்ப சாமி, சமயக் கருப்பசாமி துணைத் தெய்வங்களாக இருக்கின்றன

ஆனால் சங்கிலிக் கருப்பசாமிக்கு ஏற்றம் கொடுத்து சங்கிலிக் கருப்பசாமிக் கோயில் என்றுதான் அழைக்கின்றனர். இவ் ஊரிலுள்ள அங்காள ஈஸ்வரிக் கோயிலில் சமயக் கருப்பசாமியும், உத்தண்டசாமியும் துணைத் தெய்வங்கள்.

துணைத் தெய்வங்களிலும் கருப்பசாமிதான் எல்லாவிடங்களிலும் நிறைந்து காணப்படுகிறார்; அதேபோல் ஊர்த் தெய்வமாகவும் காவல் தெய்வமாகவும் கருப்பசாமிதான் அய்யனார்க்கு அடுத்த நிலையில் போற்றப்படுகிறார்.

**முனியசாமி**

கருப்பசாமிக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றி வழிபடப்படும் முதன்மைத் தெய்வமாக விளாத்திகுள வட்டத்தில் இருப்பவர். முனியசாமி கோவில், அய்யனார், கருப்பசாமிக் கோயில்கள் போன்றே சாதாரண அமைப்புடன் காணப்படுகிறது; உருவம் இல்லாது வெறும் குத்துக்கல் மட்டும் முனியசாமியை நினைவூட்டக் கூடிய இடமுமுண்டு. அரிவாள் அல்லது சூலம் மட்டும் மரத் தடியில் இருந்து முனியசாமியைத் தோற்றுவிக்கும்; கல் தூண் நிறுத்தப்பட்டு கூரை வேயப்பட்ட சாவடியிலும் முனியசாமியைக் கல்சிலையாகவோ, மண் சிலையாகவோ காணலாம்.

அய்யனார் கோவில் இருந்து கருப்பசாமி துணைத் தெய்வமாக இல்லாத ஊர்களில் முனியசாமி ஊர்த் தெய்வமாக வழிபடப்படுகிறது; ராஜாப்பட்டி, சூரங்குடி ஆகிய ஊர்களில் அய்யனார் கோவிலில் கருப்பசாமி இல்லாததால், முனியசாமியைத் தனியே கோயில் கட்டி வழிபடுகிறார்கள். ராஜாப்பட்டியில் குலத் தெய்வமாக வழிபடுகிறார்கள். சூரங்குடியில், நிறைசினை ஆட்டை அறுத்துக் கரும்புத் தொட்டிலில் வைத்து ஆட்டுகிறார்கள்; பிள்ளை நோய் தீர்க்க வேண்டி இவ்வாறு செய்கிறார்கள் (பெருமாள்சாமி, கி., 10-9-1984).

அய்யனார் கோவில் இருந்து கருப்பசாமித் துணைத் தெய்வமாக இல்லாவிட்டாலும், தனியாகக் கருப்பசாமிக்குக் கோயில் இருக்கும்; அக் கோயிலில் அரிஜனம் பூசாரியாக, இருக்கும்போது தேவர்கள் தனியாக முனியசாமி கோயில் கட்டி வழிபடுகிறார்கள். துளசிப் பட்டியில் இவ்வாறு இருக்கிறது. அய்யனார் கருப்பசாமி கோவில்கள் இல்லாத ஊர்களாகிய மடத்துப்பட்டி, நடுக்காட்டூர், கல்லூரணி, ஆகிய ஊர்களில் முனியசாமிக்குத் தனிக்கோயில் கட்டி

ஊர்த் தெய்வமாக வழிபடுகிறார்கள். குடும்பன் அதிகமாகவோ, ஊர் முழுவதுமோ இருக்கக் கூடிய ஊர்களில் முனியசாமி ஊர்த் தெய்வமாக வழிபடப்படுகிறார்; இ. வேலாயுதபுரம், பிறங்கட்டான் பட்டி, தத்தனேரி, பொன்னையாபுரம் ஆகிய ஊர்களில் அரிஜனங் கள் மிகுதியாக வாழ்கிறார்கள்; ஆகவே முனியசாமியை வழிபடு கிறார்கள். பூசனூரில் கருப்பசாமியை அரிஜனங்கள் வழிபடுவதால் முனியசாமியை ஊர்த் தெய்வமாக மற்றெல்லோரும் வழிபடு கிறார்கள். இதேபோல்தான் கொரலியம் பட்டியிலும் முனிய சாமியை வழிபடுகிறார்கள்.

தத்தனேரியில் முனியசாமிக் கோயிலில் குடும்பன் பூசாரியாக இருந்தபோதும் எல்லா இனத்தாரும் வழிபட்டு ஊர்த் தெய்வமாக ஏற்றுக்கொள்கிறார்கள்; இன வேறுபாடு இல்லாது இருக்கிறார்கள். திராவிடக் கோயில்களில் பூசை செய்வதற்கு மேல்சாதியினர்தான் இருக்க வேண்டுமென்பதில்லை என்பது உறுதியாக்கப்படுகின்றது.

முனியசாமி அம்மன் கோயில்களில் துணைத் தெய்வமாகவும் தமிழ்நாட்டில் பல பகுதிகளில் இருக்கிறார். தென்னாற்காடு மாவட்டத்தில் மாரியம்மனின் மாற்றுருவமாக கன்னியம்மாவை வழிபடுகிறார்கள்; கன்னியம்மா அம்மை நோய்க் கடவுள்;கன்னியம் மாக் கோயிலில் அவளுடைய 7 சகோதரர்களுக்கு மண் உருவில் சிலைகள் வைக்கப்பட்டிருக்கின்றன; அதில் கடைசி சகோதரன் தான் முனி; பெரிய திண்ணையில் மிகப்பெரிய உருவமாக முனி இருக்கிறார்; அருகில் மற்ற சகோதரர்கள் நின்று கொண்டிருக் கிறார்கள் (வொய்ட்ஹெட், 1983:32).

கர்நாடகத்திலும் தமிழ் நாட்டிலுள்ளது போன்றே முனியசாமி அம்மனுக்குச் சகோதரனாகவும் துணைத் தெய்வமாகவும் காட்சி யளிக்கிறார். பெங்களூர்க்குப் பக்கத்தில் மகேஸ்வரம்மா என்ற தெய்வக்கோயில் இருக்கிறது; பெரிய தெய்வம் என்ற பொருளில் இப்பெயர் வழங்கப்படுகிறது; குதிரையின்மீது அமர்ந்து சவாரி செய்யும் நிலையில் உள்ளது சிலை; இதனால் சவாரம்மா என்றும் மக்கள்அழைக்கிறார்கள்,இவளுடைய சகோதரி தொட்டம்மாவுக்கும் சகோதரன் முனிஸ்வராவுக்கும் அருகிலேயே சிலைகள் வைக்கப் பட்டிருக்கின்றன; அம்மனுக்கு வழிபாடு நடத்துவதற்கு முன் இத் துணைத் தெய்வங்களுக்கு வழிபாடு நடத்துகிறார்கள் (வொய்ட் ஹெட், 1983:29).

ஊர்த் தெய்வமாகவும், துணைத் தெய்வமாகவும் உள்ள முனிய சாமி, குலத்தெய்வமாகவும் காட்சியளிக்கிறது; மதுரைக்கருகில்

பாண்டி கோவில் இருக்கிறது; இது பாண்டி முனியாண்டிசாமி ஆகும். இக் கோயிலிலுள்ள இறைவன் முனியசாமியைப் பற்றி ஒரு கதை வழங்குகிறது. மதுரை பாண்டிய மன்னன், அதாவது மீனாட்சியம்மையின் தந்தை இப்போது கோயில் உள்ள இடத்தில் தவக்கோலம் கொண்டு முனிவராக இருந்தார்; பின் அந்த இடத்தி லேயே சமாதி ஆகிவிட்டார்; இன்று அந்த இடத்தில் கோயில் அமைத்து வழிபடுகிறார்கள்; ஆகவேதான் பாண்டி முனி என்று பெயர் வந்தது என்று சொல்லுகிறார்கள். சிலையின் அமைப்பைப் பார்த்தால் இது சமண முனிவராகத் தென்படுகிறது என்று மதுரை, தொல்பொருள் ஆய்வுத்துறை திரு. வேதாச்சலம் கூறுகிறார். எப்படிப் பார்த்தாலும் இது சமாதி வழிபாடாகத்தான் தெரிகிறது; முன்னோர் வழிபாடாகத் தெரிகிறது. பாண்டி கோயிலுக்குப் பக்கத்திலுள்ள கிராம வாசிகளுக்கு இது குலத் தெய்வக் கோயிலாக இருக்கிறது.

முனியசாமியைக் கெட்ட ஆவியாகவும் நினைக்கிறார்கள்; நாற்சந்திக் கூடுமிடத்தை முனி ஓட்டம் என்று சொல்லுவார்கள்; அங்கு முனி பாய்ச்சல் இரவு வேளைகளில் இருக்கிறது; ஆகவே தான் அந்த வீடு விளங்கவில்லை என்பார்கள்; அம்முனி ஓட்டத்தை நிறுத்த அங்கு ஒரு விநாயகர் சிலையைவைத்துப் பரிகாரம் செய்வார்கள் (சண்முகம், தெ., 4.9.1984).

முனியசாமி கோயிலில் பெண்களுக்குப் பேய் விரட்டும் நிகழ்ச்சி நடக்கிறது;குறி சொல்லுகிறார்கள். முனியசாமியைக் கும்பிட்டால் எந்தவிதக்கருப்புக்கோளாறும்-பேய் பிசாசுகளும் அண்டாது என்பது இப்பகுதி மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கை. குழந்தை யில்லாது இருப்பவர்களும், முனியசாமியை வணங்கினால் பிள்ளைப் பேறு கிட்டும் என்று வந்து வணங்குகிறார்கள்; தொட்டில் கட்டி நேர்த்திக் கடனைச் செலுத்துகிறார்கள்.

### மாடசாமி

நெல்லை குமரிமாவட்டங்களின் கிராமங்களில் முக்கியத் தெய்வ மாகப் போற்றி வழிபடக் கூடியது மாடசாமி ஆகும்; ஆனால் விளாத்திகுள வட்டத்தில் கருப்பசாமி, அய்யனார், முனியசாமிக்கு அடுத்த நிலையில்தான் மாடசாமி இருக்கிறார்; மாடசாமியை சுடலைமாடன் என்றும் இருளப்பசாமி என்றும் வழங்குகிறார்கள் (கந்தசாமி, சு., 11.9.1984). 21 பந்தியில் ஒருவர்தான் இருளப்ப சாமி என்று கூறுகிறார்கள் (வேலு, கொ., 1.10.1984).

மாடசாமி ஒரு துடியான தெய்வம்; சத்தியத்திற்குக் கட்டுப்பட்ட தெய்வம்; ஊர்மக்களைக் காக்கும் காவல் தெய்வம் என்று மக்கள் நம்புகிறார்கள் (பெத்து நாயக்கர், 6.9.1984). இக்கோயிலும் ஊருக்கு வெளியேதான் அமைக்கப்பட்டிருக்கிறது. கட்டடம் கொண்ட அமைப்பாகவும், திறந்தவெளியில் உள்ள திண்ணை யாகவும் இருக்கிறது; சிலை கற்சிலையாகவும, மண் சிலையாகவும் இருக்கின்றன.

தேவர், குடும்பன் ஆகிய இனத்தவர்கள் வாழும் கிராமங்களில் தான் சுடலைமாடன் கோயில் இருக்கிறது; அது அவ்வினத்தார் களுக்குக் குலத் தெய்வக் கோயிலாகவும் இருக்கிறது (எல்லப்பன், க., 17 10.1984). நடுக்காட்டூரில் மொட்டை இருளப்பன் என்று வழங் குகிறது. இது குலத் தெய்வக் கோயில்; இதற்குப் பூசாரி என்று குறிப்பிட்டுக் கூறும்படியாக யாருமில்லை. அவரவர்கள் தனித் தனியே வந்து வழிபட்டுச் செல்கிறார்கள். இதற்குச் சிலை இல்லை, பீடம் மட்டும் இருக்கிறது. வைப்பார் மாடசாமி கோயி லுக்கு ஓதுவார் பூசாரியாக இருக்கிறார். ஆனால் இங்கு பலி கொடுக்கப்படுகிறது; நடுயாமத்தில் காவு கொடுக்கப்படுகிறது. பேரிலோவன்பட்டி, வேலிடுபட்டி ஆகிய ஊர்களில் இருளப்பசாமி என்றே வழங்குகிறார்கள்; இங்கு இது ஊர்த் தெய்வமாகக் கும்பிடப்படுகிறது; வேலிடுபட்டியில் நேர்த்திக் கடனாக தவழும் பிள்ளை சிலையை களிமண்ணால் செய்து கொண்டு வந்து வைக் கிறார்கள்; இங்கு இருளப்பசாமிக்குச் சிலை இல்லை. நமச்சிவாய புரத்தில் ஆசாரி கோயில் பூசாரியாக இருக்கிறார்; மயானத்தில் சோற்றுத் திரளை எரிதல் போன்ற நிகழ்ச்சி இங்கு முக்கியமாக நடக்கிறது (இராஜாராம், பெ., 16.8.1984). அருங்குளத்தில் மாட சாமி கோயிலுக்குக் குடும்பன் இனத்தைச் சேர்ந்தவர்தான் பூசாரி யாக இருக்கிறார். இருந்தும் எல்லா இனத்தாரும் சென்று கும்பிடு கிறார்கள். ஊர்த் தெய்வமாக வழிபடுகிறார்கள் (தனுக்கோடி, 5.9.1984).

### ஏழு சகோதரிகள்

ஊர்த் தெய்வமாக அம்மன் தெய்வங்களைத்தான் மிகுதியாகக் கிராமங்களில் வழிபடுகிறார்கள்; அந்த அம்மன் தெய்வங்களில் மாரியம்மாள், பத்ரகாளி, உச்சிமாகாளி, காளியம்மாள் காந்தாரி யம்மாள், அழகு நாச்சியம்மாள், வண்டி மலைச்சியம்மாள், கரடியம் மாள், உமையம்மாள், அரிய நாச்சியம்மாள் ஆகியவை முக்கிய மானவை. இவை எல்லாவற்றையும் ஏழு சகோதரிகளாகக் கூறு

கிறார்கள் (வாழவந்தாள், ஏ., 15.10.1984). இந்தத் தெய்வங்கள் உள்ள எல்லா கிராமத்தாரும் இந்தத் தெய்வங்களை ஏழு சகோதரிகள் என்றே சொல்லுகிறார்கள்; ஆனால் இங்கே சொல்லப்பட்டவை பத்துத் தெய்வங்கள்; இவற்றில் எஞ்சிய மூன்று பெயர்கள் இங்குச் சொல்லப்பட்ட ஏழு சகோதரிகளில் ஒன்றிற்கு வேறு பெயராக இருக்கவேண்டும். அரி என்றால் அழகு என்று பொருள்; ஆகவே அரிய நாச்சியம்மாளும் அழகு நாச்சியம்மாளும் ஒன்றாகவே இருக்க வேண்டும்; நாகலாபுரத்திற்கருகிலுள்ள அழகு நாச்சியம்மாளும், விளாத்திகுளம், சாயல்குடி சாலையிலுள்ள அரியநாயகிபுரத்திலுள்ள அரிய நாச்சியம்மனும் ஒன்றே என்று கொண்டு அரிய நாச்சியம்மாளை ஏழு சகோதரிகளில் ஒருவராக ஏற்றுக் கொள்வது ஏற்புடையதாக இருக்கிறது.

கரடியம்மாள் எல்லா இடங்களிலும் இல்லை; நாகலாபுரத்தில் தான் இக்கோயில் இருக்கிறது; கரையம்மன், கரடியம்மன் ஆகிவிட்டது; கரை அடியம்மன் கரடியம்மன் ஆகிவிட்டது. (தொட்டராயன், தொ., 3.10.1984); இது எல்லா ஊர்களிலும் உள்ள குளத்து அம்மன் போன்றதுதான்; இது ஏழு சகோதரிகளில் ஒன்றாக இருக்க முடியாது என்பர் (துளசிராமன், வெ., 3.10.1984).

நாள்தோறும் பால் கொண்டு ஒருவர் அவ்வழியாகச் செல்வார். செல்லும்போது ஒரு வேர் தட்டிக் கீழே விழுந்துவிடுவார்; செம்பிலுள்ள பால் சிந்திவிடும்; இது வழக்கமாக நடந்து வந்துகொண்டிருந்தது; ஒருநாள் இதுமாதிரி நடந்ததால், அவர் மிகவும் கோபப்பட்டு அந்த வேரை வெட்டி எறிகிறார்; வெட்டுண்ட இடத்திலிருந்து ரத்தம் பீறிட்டுக் கொண்டு பாய்ந்தது. அவர் இறைவன் செயல் போலும் என்று மனம் பேதலித்து நின்றார்; அம்மன் வாக்கு சொன்னது. அன்றிலிருந்து அவ்விடத்தில் கோயில் கட்டி வழிபட்டு வருகின்றார்கள்; இது நாகலாபுரத்திலுள்ள எல்லா இனத்தார்களும் வழிபடக் கூடிய ஊர்த் தெய்வக் கோயிலாகும் (சீனிவாசன், து., 3 9.1984).

ஆக, ஏழு சகோதரிகள் என்று மாரியம்மாள், காளியம்மாள், பத்ரகாளியம்மாள், அரிய நாச்சியம்மாள், காந்தாரியம்மாள், வண்டி மலைச்சியம்மாள், உமையம்மாள் ஆகிய ஏழு அம்மன்களைத்தான் குறிக்கிறார்கள். கர்நாடகத்திலும் ஏழு சகோதரிகளைப் பற்றிய குறிப்பிருக்கிறது. வொய்ட்ஹெட் தம் நூலில் ஏழு மாரித் தெய்வங்களைக் குறிப்பிடுகிறார்; நம் நாட்டு மாரியம்ம

னைப் போன்றுள்ள ஏழு வகையான மாரித் தெய்வங்களைக் குறிப்பிடுகிறார். இவர்கள் ஏழு பேரும் சகோதரிகள் என்பர்; அன்னம்மா, சந்தேஸ்வரம்மா, மாயேஸ்வரம்மா, மரம்மா, உடலம்மா, கொக்கலம்மா, சுகஜம்மா ஆகியவை அந்த ஏழு சகோதரிகளாகும். மரம்மா காலராக் கடவுள்; உடலம்மா, கழுத்து நோய்க் கடவுள்; கொக்கலம்மா இருமல் நோய்க் கடவுள்; சுகஜம்மா அம்மை நோய்க் கடவுளாகும் (1983:29). இந்த ஏழு சகோதரிகளுக்கும் துணைத் தெய்வமாக முனிஸ்வரா என்ற ஆண் தெய்வம் இருக்கிறது; இது நம்மூர் வைரவன் சாமி போன்றதாகும். தெலுங்கில் போத்திராஜ் என்ற ஆண் துணைத் தெய்வம் இதைப் போன்றதுதான்.

தெலுங்கில் இந்த போத்திராஜ் பெயர் எல்லா இடங்களிலும் ஒன்றாகத்தான் இருக்கிறது; ஆனால் ஏழு சகோதரிகளின் பெயர்கள்தான் மாறி மாறி வருகிறது; ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு பெயராக இருக்கிறது. ஆந்திராவிலுள்ள நெல்லூர் மாவட்டத்தில் கண்டுகுறு வட்டத்தில் பொதுவாகக் கீழ்க்கண்டவாறு ஏழு சகோதரிகளைக்குறிப்பிட்டு அழைக்கிறார்கள். போலேரம்மா, அங்கம்மா, முத்தியாலம்மா, தில்லி பொலசி, பங்காரம்மா, மாதம்மா, ரேணுகா (எல்மோர், டபிள்யூ. டி., 1984:12).

போலேரம்மா அம்மை நோய்க் கடவுளாகும்; இது நம் மாரியம்மாள் போன்ற தெய்வம்; ஊரிலுள்ள மக்களின் எல்லா சுகதுக்கக் கடவுளாகவும் இருக்கின்றது. முத்தியாலம்மா நம்மூர் முத்தாலம்மன் போன்றது. தமிழ்நாட்டிலுள்ள ஏழு சகோதரிகள் கோயில்களிலும் பலிகொடுக்கப்படுகிறது; இது போன்றுதான் ஆந்திரம், கர்நாடகம் போன்ற மாநிலங்களிலுள்ள ஏழு சகோதரிகள் கோயில்களிலும் பலி கொடுக்கப்படுகிறது. ஆந்திரா, கர்நாடகம் போன்ற மாநிலங்களிலுள்ள ஏழு சகோதரிகளும் வீட்டுத் தெய்வமாகவும் ஊர்த் தெய்வமாகவும் வழிபடப்படுகின்றன; இதுபோன்றுதான் தமிழகத்தும் வழிபடுகிறார்கள்.

**மாரியம்மாள்**

விளாத்திகுள வட்டத்திலுள்ள ஊர்களில் மாரியம்மன் கோவில்கள் ஆங்காங்கே இருக்கின்றன. இவ்வட்டத்தில் மாரியம்மன் கோயில்கள் குலத் தெய்வமாகவோ, இனத் தெய்வமாகவோ கும்பிடப்படவில்லை; ஊர்த் தெய்வமாகவே வழிபடுகிறார்கள்; இவ்வட்டத்திலுள்ள மாசார்பட்டிக் கருகிலுள்ளது இருக்கண்குடி மாரியம்மன் கோவில். இக்கோவில் மிகவும் கீர்த்தி வாய்ந்தது. வெள்ளி

தோறும் இங்கு வார வழிபாடு சிறப்பாக நடைபெறுகிறது, இவ் வட்டத்தில் மாரியம்மன் என்று வணங்குவதெல்லாம் இருக்கண்குடி மாரியம்மனைத்தான். இதை நினைத்துத்தான் ஊர்கள் தோறும் பிடிமண் கோயில்கள் பரவலாக இருக்கின்றன.

இருக்கண்குடி மாரியம்மன் வைப்பாற்றின் அரங்கத்தில் உள்ளது; ஆற்றின் இடையிலுள்ள தீவு போன்ற பகுதியில் இருக் கண்குடி மாரியம்மன் கோயில் இருக்கிறது; கண்நோய், அம்மை நோய்க்குக் கடவுளாக மாரியம்மன் இருக்கிறது. மாரியம்மன் கோவில் வேம்பாரில் இரண்டு இருக்கின்றன; ஒன்று தேவர்க் குரியது. இதில் தேவர்தான் பூசாரி; வலையர் என்று சொல்லக் கூடிய அம்பலக்காரருக்குச் சொந்தமாக மாரியம்மன் கோவில் இருக் கிறது. இதற்குப் பூசாரி ஆசாரி. தேவர்க்குரிய கோயிலில் ஆவணி மாதம் பொங்கல் நடக்கிறது; அம்பலக்காரர் கோயிலில் வைகாசி மாதம் நடக்கிறது; இரண்டிற்கும் செவ்வாய்க் கிழமைதான் பொங்கல் வைக்கிறார்கள். தேவர்க்குரிய கோயிலில் உள்ள சிலை மண்சிலையாகும்; அம்பலக்காரர்க்குரிய கோயிற் சிலை கற்சிலை யாகும்; இக்கோயிலில் பலி கொடுப்பதில்லை என்பது குறிப்பிடத் தக்க அம்சமாகும் (பால்ராஜ், மா., 5.9.1984).

வீரபாண்டியாபுரத்தில் மாரியம்மன் கோயில் பூசாரியாக பண்டா ரம் என்று சொல்லக்கூடிய புலவர் இனத்தைச் சார்ந்தவர் இருக் கிறார். இங்குக் கற்சிலைதான் உள்ளது. துணைச்சாமியாக வைரவன் இருக்கிறார்; கழுவேற்றுகிறார்கள்; அச் சேவலை பூசாரிக்கும் தலையாரிக்கும் கொடுக்கிறார்கள் (முருகேசன், வே., 7.9.1984). துரைச்சாமிபுரத்திலும் மாரியம்மன் கோவில் இருக் கிறது. இங்கு ஆடி மாதம் பொங்கல் வைக்கிறார்கள்; மண் சிலை இருக்கிறது. செவ்வாய்க்கிழமைதான் வழிபாடு நடக்கிறது. வள்ளி நாயகபுரத்தில் உள்ள மாரியம்மனுக்குப் பூசாரி வேளார் இனத் தைச் சேர்ந்தவர்; ஆனி மாதம் செவ்வாய்க் கிழமை இங்கு பொங்கல் வைக்கிறார்கள்.

**காளியம்மன்**

வட்டத்திலுள்ள ஊர்களில் அம்மன் தெய்வங்கள் இல்லாது இல்லை; அம்மன் தெய்வங்கள் முக்கியமாக வழிபடப்படுகின்றன. அம்மன் தெய்வங்களில் காளியம்மன் கோவில் எல்லா ஊர்களிலும் இருக்கின்றன; காளியம்மன் கோவில் ஊர்த் தெய்வக் கோயிலாக இருக்கிறது. இத் தெய்வக் கோயிலில் பலி கொடுக்கப்படுகிறது;

துள்ளுமறி என்ற முறையிலும் கழுப்போடுதல் என்ற முறையிலும் பலி கொடுக்கப்படுகிறது; சக்திக் கடாவும் வெட்டப்படுகிறது. திருச்சி மாவட்டத்தில் மதுரகாளியம்மன் கோயிலில் பலி கொடுப்ப தில்லை; இங்கு பிராமணர்கள் அதிகமாக இருப்பதால், 3 மைல் உயரத்திலுள்ள மலைமீது இருக்கும் பெரியண்ணசாமிக்குப் பலி கொடுக்கப்படுகிறது (வொய்ட்ஹெட், 1983:107). சீர்காழியி லுள்ள காளியம்மனுக்கு பிராமணர்கள் முறைப்படி வழிபாடு நடந்த போதிலும், துணைத் தெய்வத்திற்குப் பலி கொடுக்கப்படுகிறது (வொய்ட்ஹெட், 1983:107).

விளாத்திகுள வட்டத்திலுள்ள கோயில்களில் துணைத் தெய்வ மாக வைரவசாமி இருக்கிறது. ஆனால் தஞ்சை மாவட்டத்திலுள்ள மாகாளிக் குடியிலுள்ள மாகாளித் தெய்வத்திற்குத் துணைத் தெய் வங்களாக எல்லியம்மாள், அங்காளம்மாள், புல்லத்தாளம்மாள், விசாலாட்சியம்மாள் ஆகிய பெண் தெய்வங்களும் மதுரைவீரன், பாதாளமா, அய்யனார் போன்ற ஆண் தெய்வங்களும் இருக்கின் றன (வொய்ட்ஹெட், 1983:105). இக்கோயிலில்தான் அய்யனார் துணைத் தெய்வமாக இருக்கிறார். தமிழ்நாட்டில் வேறு எங்கும் இதைக் காணமுடியாது. துக்கணாம்பாளையத்தில் காளியம்மன் கோவில் பொங்கல் சமயம் எல்லைத் தெய்வங்களைச் சாந்தப்படுத் துவதற்காக எருமைக்கடா பலி கொடுக்கப்பட்டதும் உண்டு (வொய்ட்ஹெட், 1983:104).

விளாத்திகுள வட்டத்தில் உள்ள ஊர்களில் மேல்சாதியினரும், கீழ்ச்சாதியினரும் உள்ள இடங்களில் அரிஜனங்களுக்கென்று தனி யாகக் காளியம்மன் கோவில்கள் இருக்கின்றன. வேலிடுபட்டி, சிவஞானபுரம், நமச்சிவாயபுரம், வள்ளிநாயகபுரம், பிள்ளையார் நத்தம், குமாரசுப்பிரமணியபுரம், கம்பத்துப்பட்டி, தவசிலிங்கபுரம், மடத்துப்பட்டி, சின்னையாபுரம், கோவில் குமாரெட்டையாபுரம், கல்லூரணி, குளத்தூர், சின்னவநாயக்கன்பட்டி, சுப்புலாபுரம், மேல அருணாசலபுரம், தாப்பாத்தி, புதூர், ராஜாப்பட்டி, மாவில்பட்டி, சிவலார்பட்டி, கத்தாளம்பட்டி, சோலைமலையம்பட்டி, ரெகுராம புரம், அருங்குளம், நாகலாபுரம், புதுப்பட்டி, சென்னம்பட்டி, நம்பி புரம், பொன்னையாபுரம் ஆகிய ஊர்களில் காளியம்மனை, மற்ற ஊர்த் தெய்வங்களைவிட முக்கியமாக வணங்கி வருகிறார்கள்.

அரிஜனங்கள் மிகுதியாக ஒரு ஊரில் வாழ்ந்தால், அவர்களுக் கென்று தனியாகக் காளியம்மன் கோவில் இருக்கிறது. காளியம் மன் மிகவும் துடியானக் காவல் தெய்வமானதால், எல்லா இனத்

தாரும் இதை வணங்கி வருகிறார்கள். வேலிடுபட்டி, தாப்பாத்தி ஆகிய ஊர்களில் அரிஜனங்களுக்கென்று தனிக் கோயில்கள் இருக்கின்றன- வழிபாட்டு முறைகள் எல்லாம் ஒன்று போலவே இருக்கின்றன.

கோயில்கள் பெரும்பாலும் கட்டடங்களாகவே இருக்கின்றன; கூரை ஓடாகவோ, காரையாகவோ இருக்கிறது. இக்கோயில்களில் துணைத் தெய்வமாக வைரவன் இருக்கிறது. இது கோயிலின் முன்பாக இருக்கிறது; சிலை மண்சிலையாகவே இருக்கிறது. சிங்கத்தின்மீது அமர்ந்துள்ள நிலையிலேயே இருக்கிறது; வருடத்திற்கொரு முறை பொங்கல் சமயம் புதிய மண்சிலை வைக்கப்படுகிறது; அக்கினிச் சட்டி இல்லாது வழிபாடு நடத்த மாட்டார்கள்; பொதுவிலும் அக்கினிச் சட்டிகள் எடுப்பார்கள்; நேர்த்திக் கடனாகவும் அக்கினிச் சட்டி எடுப்பார்கள். அம்மன் கோயில்களில் முளைப் பாரி எடுத்து வழிபடுகிறார்கள். பொருளாதார வசதிக் கேற்பக் கோயில்களில் பொங்கல் நடத்துகிறார்கள்; அதாவது பெரிய அளவில் சிறப்பாக வழிபாடு நடத்துவது; சிலை எடுத்து வைப்பது போன்ற நிகழ்ச்சிகளை உள்ளிட்டு நடத்துவதாகும். அவ்வாண்டில் விளைச்சல் சரியில்லையென்றால் வெறுமனே பொங்கல் மட்டும் வைத்து வழிபடுவார்கள்; இதைச் சாட்டுப் பொங்கல் என்று கூறுகிறார்கள் (பாரதி, வி., 15.8.1984). மதுரை மாவட்டத்தில் இதை குளிர்மைப் பொங்கல் என்று கூறுகிறார்கள் (வேலுச்சாமி, ம., 1983:84). சிறிய அளவில் பொங்கல் வைத்து சாமியைக் குளிர்மைப் படுத்துகிறார்கள் என்பது பொருள்.

நாடார்கள் அதிக அளவில் உள்ள ஊர்களில் காளியம்மன் கோவில்கள் பெரும்பாலும் இருப்பதில்லை. பேரிலோவன்பட்டியில் நாடார்கள் அதிகமாக இருக்கிறார்கள்; ஆகவே அவர்களின் இனத்தெய்வமான பத்ரகாளியம்மனுக்குத்தான் கோயில் கட்டி வழிபடுகிறார்கள். நாகலாபுரத்தில் காளியம்மன் குடும்பன் இனத்தாருக்குத் தனியாகவும், மற்ற சாதிக்காரர்களுக்குத் தனியாகவும் இருக்கிறது; நாடார்கள் காளியம்மனை வழிபடாது, பத்ரகாளியைத் தான் வழிபடுகிறார்கள். நம்பிபுரத்தில் குடும்பனுக்கென்றே தனிக் கோயில் இருக்கிறது. இங்கு பூசாரியும் குடும்பன் தான்: பொன்னையாபுரத்தில் ஒரே சாதிதான் இருக்கிறது; காளியம்மன் கோவில் குடும்பனுக்குப் பாத்தியப்பட்டக் கோயில் ஆகும்;ரெகுராமபுரம், சிவலார்பட்டி, அருங்குளத்திலும் காளியம்மன் குடும்பனுக்குப் பாத்தியப்பட்டதுதான்; கத்தாளம்பட்டியில் அரிஜனத்திற்கு

ஒன்றும் வேறு சாதியினர்க்கு ஒன்றுமாகக் காளியம்மன் கோயில் இரண்டு இருக்கின்றன; அரிஜனக்கோயிலில் சிலை இல்லை;மற்றக் கோயிலில் மண்சிலை இருக்கிறது.தாப்பாத்தியில் இரண்டு கோயில் கள் இருந்தபோதிலும் இரண்டுக்கும் ஒரே சமயத்தில் பொங்கல் நடத்துகிறார்கள். தாப்பாத்தியில் அரிஜனக் காளியம்மன் கோயிலில் துணைத் தெய்வங்களாக வைரவனும்,சப்பாணியும் இருக்கிறார்கள். சப்பாணியைச் சப்பாணிக் கருப்பு என்றும் சொல்வர் (தங்கவேலு, ஆர்., 5-10-1984); ஆகவே இதைக் கருப்புசாமியாகக் கூறுவர் (வெள்ளைச்சாமி, சி., 5-10-84). குளத்தூரில் நாடார்கள் மிகுதி யாக இருக்கிறார்கள். அவர்களுக்குப் பத்திரகாளியம்மன் இருக் கிறது; வாணிய செட்டியார்களுக்குப் பாத்தியப்பட்ட காளியம்மன் கோயிலும், அரிஜனங்களுக்குப் பாத்தியப்பட்டக் காளியம்மன் கோயிலும் இருக்கின்றன. இரண்டிற்கும் ஆனி மாதம் கடைசி செவ்வாய்க் கிழமைதான் பொங்கல் நடத்துகிறார்கள். செட்டியார் கோவிலில் கல் சிலையும், அரிஜனக் கோயிலில் மண் சிலையும் இருக்கின்றன. கல்லூரணியிலும் அரிஜனத்திற்குப் பாத்தியப் பட்டக் கோயில்தான் இருக்கிறது. மேலக்கல்லூரணி, ஸ்ரீரெங்கபுரம் ஆகிய ஊர்களில் ஒரே இனத்தார்தாம் உண்டு. இங்கும் காளி யம்மன் ஊர்த் தெய்வமாகப் போற்றப்படுகிறது. மேலக்கல்லூ ரணியில் தனிப்பட்ட ஒருவர் கோயிலை ஏற்படுத்தினார்; பிடிமண் கொண்டுவந்து கோயிலைக் கட்டினார் (சீனியம்மாள், து., 3-10-1984). இன்று ஊர்த் தெய்வமாக இருக்கிறது. கீழ்க்கல்லூ ரணியில் ரெட்டியார், கவுண்டர், தேவர், ஆசாரி, பிள்ளை ஆகிய இனங்கள் இருந்தும் அங்கு ஊர்த் தெய்வமாக அம்மன் இல்லை.

**உச்சிமாகாளி**

இது, உச்சினி மாகாளி என்றும் உச்சிமாகாளி என்றும் அழைக் கப்படும். குளத்தூர், நாகலாபுரம் ஆகிய இரண்டு ஊர்களில் மட்டும் தான் உச்சிமாகாளி கோயில்கள் இருக்கின்றன. இந்த இரண்டு ஊர்களில் சாதிக்கொரு காளிகோயில் இருக்கிறது. குளத்தூரில் பத்ர காளி நாடார் கோயில், காளியம்மன் செட்டியார் கோயில், இன் னொரு காளியம்மன் அரிஜனக் கோயில்; ஆகவே எல்லோரும் வணங்கும் பொருட்டு ஊர்த்தெய்வமாக உச்சினிமாகாளி கோவிலை வைத்திருக்கிறார்கள் (அய்யாத்துரை, எம்.,9.9.1984). இதைப் போன்றே நாகலாபுரத்திலும்இனத்திற்கு ஒருகோயில் இருக்கிறது; ஆசாரியார்க்குப் பாத்தியப்பட்ட காளியம்மன், அரிஜனங்களுக்குப் பாத்தியப்பட்ட காளியம்மன், நாடார்களுக்குப் பாத்தியப்பட்ட பத்ர காளியம்மன்,ஆகிய கோயில்கள் இருக்கின்றன. ஆகவே எஞ்சிய

இனத்தார்கள் ஊருக்குப் பொதுவாக உச்சி மாகாளிக் கோவிலை வைத்துள்ளார்கள். குளத்தூரிலுள்ள உச்சினிமாகாளிக் கோவிலில் துணைத் தெய்வமாகக் காளியம்மன் இருப்பது குறிப்பிடத்தக்கது.

உச்சினி மாகாளியம்மன் தமிழ் நாட்டில் குலத்தெய்வக் கோயிலாகவும் இருக்கிறது. காளியம்மன் செல்லியம்மன் என்றும் அழைக்கப்படுகிறது. மதுக்கரைச் செல்லாண்டியம்மன் என்ற உச்சினிமாகாளியம்மன் சேரமன்னர்களுக்குக் குலத் தெய்வமாக விளங்கியதாகத் தெரிகிறது (சக்திக்கனல், 1981:630).

வழிபாட்டுமுறை, மற்ற காளியம்மன் கோயில் வழிபாடு போன்றே நடைபெறுகிறது; பலி கொடுக்கப்படுகிறது.

**அரிய நாச்சியம்மன்**

விளாத்திகுளம் வட்டத்தில் விளாத்திகுளம் ஒன்றியத்திலுள்ள சில ஊர்களில்தாம் அரிய நாச்சியம்மன் கோவில்கள் இருக்கின்றன. வைப்பாற்றுக் கருகிலுள்ள கல்லூரணி, தத்தனேரி, அரிய நாயகிபுரம் ஆகிய ஊர்களில் அரிய நாச்சியம்மன் கோவில்கள் இருக்கின்றன. அரியநாயகிபுரம் ஊர்ப்பெயரே அம்மன் பெயரால் வழங்குகிறது (நகுலன், மு., 6-10-1984). தேவர், கவுண்டர், ரெட்டியார் ஆகிய இனத்தார் வாழ்கிறார்கள். தத்தனேரியில் உள்ள அரிய நாச்சியம்மன் கோவிலில் கற்சிலை உள்ளது. ஆனி மாதம் செவ்வாய்க்கிழமை இதற்குப் பொங்கல் நடக்கும். துணைச் சாமியாக வைரவன் இருக்கிறது. இதற்குக் கழுப்போடுதல் உண்டு. அதைப் பூசாரிக்குக் கொடுத்து விடுவார்கள். துள்ளு மறியைப் பூசாரி, ஏகாளி, மேளக்காரர் ஆகியோர் பங்கிட்டுக் கொள்வர். அரிய நாச்சியம்மன் கோயில்களில் புலவரே பூசாரியாக உள்ளார். அக்கினிச்சட்டி நேர்த்திக் கடனாக எடுக்கப்படுகிறது.

**காந்தாரியம்மன்**

குருவார்பட்டி, நாகலாபுரம் ஆகிய இரண்டு ஊர்களில் மட்டுமே காந்தாரியம்மன் கோவில்கள் இருக்கின்றன. குருவார் பட்டியில் பெருமாள்சாமி, காந்தாரியம்மன், காளியம்மன் ஆகிய கோயில்கள் ஒரே வளாகத்தில் இருக்கின்றன. பொங்கல் சமயம் அழகர் கோயிலில் திரிகொண்டு போவது போன்று இங்கும் செய்கிறார்கள். பன்றியைக் காவு கொடுக்கிறார்கள்; ரத்தத்தை உறிஞ்சி, நடு யாமத்தில் காவு கொடுக்கும் நிகழ்ச்சி நடைபெறுகிறது (சேது ராமலிங்கம், எஸ்., 11-9-1984).

நாகலாபுரத்திலுள்ள காந்தாரியம்மன் கோயிலில் வைரவன், முனியசாமி, சின்னக்கருப்பசாமி ஆகிய துணைத் தெய்வங்கள் இருக்கின்றன. இது போன்றுதான் பெருமாள்சாமியும் காளியம் மனும் துணைத் தெய்வமாகக் குருவார் பட்டிக் கோயிலில் இருக்க வேண்டும். காந்தாரியம்மன் குருவார் பட்டி, நாகலாபுரம் ஆகிய ஊர்களின் ஊர்த் தெய்வமாக இருக்கிறது.

## அழகு நாச்சியம்மாள்

இக்கோயில் நாகலாபுரம் புதூர் சாலையில் இருக்கிறது. இங்கு கற்சிலை இருக்கிறது. 7 குழந்தைகளுக்குத் தாயாக இருக்கிறது. அச்சிலைகளும் அருகில் உள்ளன. இதற்குப் பூசாரி மூப்பனாராவர். அரிய நாச்சியும் அழகு நாச்சியும் ஒன்றே என்பது குறித்து முன் பக்கங்களில் கூறப்பட்டது. இக்கோயிலிலும் பலி கொடுக்கப்படு கிறது; கிடாயின் கால், தலையைப் பூசாரிக்குக் கொடுத்து விடுகிறார் கள்.

## உமையம்மன்

விளாத்திகுளத்திலிருந்து சாயல்குடி செல்லும் சாலையில் வைப் பாற்றங்கரையில் உள்ளது உமையம்மன் கோவில்; இவ்வூர் கொரலியம்பட்டி ஆகும். இவ்வட்டத்தில் இங்குதான் இக்கோயில் இருக்கிறது; வேறு எங்கும் இல்லை.

இக் கோயிலில் கல்சிலை இருக்கிறது; ஏழு குழந்தைகளுடன் கூடிய கல்சிலை இருக்கிறது; இரண்டு குழநதைகளை அணைத்த மாதிரி உமையம்மை சிலை இருக்கிறது. ஐந்து பிள்ளைகள் முற்றத்தில் நின்றமாதிரி சிலை இருக்கிறது. சித்திரை மாதம் மூன்றாவது செவ்வாய்க் கிழமை இதறகுப் பொங்கல நடத்துகிறார் கள்; பண்டாரம்தான் கோயில் பூசாரி. அக்னிச்சட்டி, மாவிளக்கு, முளைப்பாரி கொண்டு வழிபடுகிறார்கள். பலிகொடுத்தும் வழிபடு கிறார்கள்.

ஆற்றில் வந்த சாமியாக இந்தத் தெய்வம்பற்றிக் கதை கூறுகிறார்கள். கண்ணாபுரத்திலிருந்து ஆற்றில் மிதந்து வரும போது சகோதரிகளில் ஒருத்தி இருக்கண்குடியில் ஒதுங்கினாள்; உமையம்மை கொரலியம்பட்டியில் ஒதுங்கினாள்; நாள்தோறும் அவ்வழியாக வரும் ஒருவருக்குக் கால் இடறும. ஒரு முளை இருந்து இவ்வாறு தடை ஏற்படுத்திக் கொண்டிருந்தது; ஒருநாள் வரும் போது அவ்வாறு இடறி விழ, அவர் தன் கையிலுள்ள அரிவாளால்

வெட்டி எறிந்தார்; அப்போது வெட்டுண்ட இடத்திலிருந்து ரத்தம் பீறிட்டுக் கொண்டு பாய்ந்தது; மனம் பேதலித்து நிற்க, வரலாறு கூறியது தெய்வம்; அவ்விடத்தில் கோயில் கொண்டது. இவளுடைய இன்னொரு சகோதரி உமை பார்வதி தரக்குடியில் இருக்கிறாள்; அவள் ஒரு சமயம் இவளைப் பார்க்க வந்தாள்; அவளுக்குக் குழந்தையில்லை; கண்வைத்து விடுவாள் என்பதற்காக விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகளை அழைத்து அணைத்துக் கொண்டாள். அப்போது இரண்டு குழந்தைகள் மட்டும் அருகில் வர அணைத்துக் கொண்டாள். மீதமுள்ள ஐந்து குழந்தைகள் முற்றத்தில் இருந்து விட்டன. இத் தோற்றத்தில்தான் சிலை இருக்கிறது (உமையன், உ., 2-9-1984).

**வண்டி மலைச்சியம்மன்**

இந்த அம்மனுக்கு விளாத்திகுளம், நாகலாபுரம், பள்ளிவாசல் பட்டி ஆகிய ஊர்களில் கோயில் இருக்கிறது. இனத் தெய்வங்கள் பகுதியில் இதனைப் பற்றிய விளக்கம் கொடுக்கப் பட்டிருக்கிறது.

**வெயிலுகந்தம்மன்**

புதூரிலிருந்து நடுக்காட்டூர் செல்லும் சாலையில் நடுக் காட்டூருக்கும் கீழ அருணாசலபுரத்திற்கும் இடையில் உள்ள காட்டுப் பகுதியில் இந்த அம்மன் கோயில் இருக்கிறது. இது நடுக்காட்டூர் ஊர்த் தெய்வமாகப் போற்றப்படுகிறது.

இக் கோயிலில் சிலை ஒன்றுமில்லை. பீடம்தான் இருக்கிறது; வைகாசி மாதம் இதற்குப் பொங்கல் நடத்துகிறார்கள். பண்டாரம் தான் இதற்குப் பூசாரி. அக்னிச்சட்டி பொதுவில் எடுக்கிறார்கள்; கவறுகுத்து நேர்த்திக் கடனாகச் செலுத்தப்படுகிறது. முளைப்பாரி, மாவிளக்கு, கரகாட்டம் ஆகிய நிகழ்ச்சிகளின் வழியே வழிபாடு நடத்துகிறார்கள்.

வெயிலுகந்தம்மன் மாரியம்மனின் மறு உருவம் என்று சொல்லு கிறார்கள் (எல்லப்பன், க., 17.10.1984); கர்நாடகாவில் இதை பிசில் மாரி என்று கூறுகிறார்கள்; பிசில் என்றால் வெயில்; ஆகவே வெயில் மாரி என்ற பொருளில் கூறுகிறார்கள் (எல்மோர், டபிள்யூ, டி., 1984:1). வெயிலுகந்தம்மன் கோயில் இவ்வட்டத்தில் நடுக் காட்டூரில் மட்டும்தான் இருக்கிறது. மதுரை திருப்பரங்குன்றத்தில் வெயிலுகந்தம்மன் கோயில் ரெயில் பாதைக்கருகில் இருக்கிறது. இதற்கு மாசி மாதம் வழிபாடு நடத்தப்படுகிறது; இது ஒரு குலத் தெய்வக் கோயில். இக் கோயிலுக்கு வளையங்குளம் மெச்சன்

வகையறாக்கள் ஆண்டுதோறும் தெருக்கூத்தை நேர்த்திக் கடனாக நடத்துகிறார்கள்.

**செல்லியம்மன்**

செல்லியம்மன் என்ற பெயரில் கமலாபுரத்திலும், சிங்கிலி பட்டியிலும் கோவில்கள் இருக்கின்றன; பிள்ளையார் நத்தத்தில் செல்லியாரம்மன் என்ற பெயரில் கோவில் இருக்கிறது. புளியங்குளம், வைப்பார் ஆகிய ஊர்களில் வடக்கு வாய்ச் செல்லி என்ற பெயரில் கோயில்கள் இருக்கின்றன. இங்கு கூறப்பட்ட கிராமங்களில் பிள்ளையார் நத்தத்தில்தான் காளியம்மன் கோயில் இருக்கிறது. வேறு எந்த ஊர்களிலும் காளியம்மன், மாரியம்மன் கோயில்கள் இல்லை. ஆகவே மாரியம்மனாக செல்லியம்மனைக் கூறலாம்; வடக்கு வாய்ச் செல்லியும் மாரியம்மன்தான்; மதுரையிலுள்ள செல்லத்தம்மன் கோயிலை கண்ணகிக் கோயில்என்றும் மாரியம்மன் கோயில் என்றும் கூறுகிறார்கள். ஆகவே செல்லியம்மன் மாரியம்மன்தான் என்பது விளக்கமாகிறது.

கமலாபுரம் செல்லியம்மனுக்கு, அக்னிச்சட்டி எடுக்கிறார்கள்; ஆடி, ஆவணி மாதங்களில் பொங்கல் நடத்துகிறார்கள்; பலி கொடுக்கிறார்கள்; பண்டாரம் பூசாரி. சிங்கிலிப்பட்டியிலும் இவ்வாறே நடத்தப்படுகிறது. பிள்ளையார் நத்தத்தில் செல்லியம்மனுக்குப் பிள்ளை இனத்தைச் சார்ந்தவர் பூசாரி. ஆடி மாதம் பொங்கல் நடத்தப்படுகிறது. கழுப்போடுகிறார்கள். இதைத் தலையாரிக்கும் கொடுக்கிறார்கள். துள்ளுமறியும் அறுக்கிறார்கள். அக்னிச்சட்டி, முளைப்பாரி, மாவிளக்கு கொண்டு வழிபாடு நடத்துகிறார்கள். வில்வமரத்துப் பட்டியில் செல்லியம்மன் கோயில் பறையர்க்குப் பாத்தியப்பட்டது. சிலை இல்லை. பொங்கல் சமயம் மண்ணால் சிலை செய்து கும்பிடுகிறார்கள்.

புளியங்குளம் வடக்கு வாய்ச் செல்லிக்குப் புலவர் பூசாரி; ஆடி மாதம் பொங்கல் நடத்தப்படுகிறது. பலி கொடுக்கப்படுகிறது. கழுப் போடுகிறார்கள். இதைத் தலையாரிக்குக் கொடுக்கிறார்கள். துள்ளுமறியும் அறுக்கிறார்கள். அக்னிச் சட்டி, முளைப்பாரி, மாவிளக்கு கொண்டு வழிபாடு நடத்துகிறார்கள்.

வைப்பாறிலுள்ள வடக்குவாய்ச் செல்லி அம்மனுக்கு ஓதுவார் பூசாரியாக இருக்கிறார். ஆடி மாதம் செவ்வாய்க் கிழமை இதற்குப் பொங்கல் நடத்துகிறார்கள். கற்சிலை இருக்கிறது. மாமிசப் படைப்புப் போடுகிறார்கள். சூல ஆடு அறுக்கிறார்கள். அக்னிச் சட்டி பொதுவில் எடுத்து வழிபடுகிறார்கள்.

**கலியுக நாச்சியாரம்மன்**

இவ்வகையில் ஒரே கோயில்தான் இருக்கிறது, புதூரிலுள்ள குளக்கட்டாங்குறிச்சியில் இக்கோயில் இருக்கிறது. இங்கு கம்மவார் நாயுடு மிகுதியாக இருக்கிறார்கள்; அதற்கடுத்த நிலையில் மூப்பனார் வாழ்கிறார்கள்; வேறு இனத்தார்களும் இருக்கிறார்கள்.

இக்கோயிலுக்குத் தலையாரி பூசாரியாக இருக்கிறார். அவர் தேவர் இனத்தைச் சார்ந்தவர். பரம்பரை பரம்பரையாக அவர் வழியினர்தாம் பூசாரியாக இருக்கிறார்கள். கல்சிலை இருக்கிறது. ஆடி மாதம் இதற்குப் பொங்கல் நடத்துகிறார்கள். மூப்பனாருக்கும் கம்மவாருக்கும் இடையே ஏற்பட்ட தகராறு காரணமாக, ஊர்த் தெய்வமாக இருந்தபோதும், ஊர் கூடி இப்போது பொங்கல் நடத்துவதில்லை. நாயுடு இனத்தார் ஆடி மாதம் செவ்வாய்க் கிழமை பொங்கல் நடத்துகிறார்கள்; மூப்பனார் வெள்ளிக்கிழமை பொங்கல் வைக்கிறார்கள்.

இக்கோயிலில் துணைத் தெய்வமாகக் கருப்பசாமி இருக்கிறது; இதற்குப் பலி கொடுக்கப்படுகிறது. கலியுக நாச்சியாரம்மனை மாரியம்மன் என்றே நினைக்கிறார்கள் (கிருஷ்ணமூர்த்தி, கே. எஸ்., 5.9.1984).

**முத்தாலம்மன்**

முத்தாலம்மன் கோயில் சின்னவநாயக்கன்பட்டி, தாப்பாத்தி, சிவலார்பட்டி ஆகிய ஊர்களில் இருக்கிறது. சின்னவநாயக்கன் பட்டியில் முத்தாலம்மனுக்குப் பூசாரி தனித்து இல்லை. பெண் சாமியாடி இருக்கிறார். அவரே பூசாரியாகச் செயல்படுகிறார். தாப்பாத்தியில் பிள்ளை இனத்தாரும் சிவலார்பட்டியில் வேளார் செட்டி இனத்தாரும் பூசாரிகளாக இருக்கிறார்கள். சின்னவ நாயக்கன் பட்டியில் புரட்டாசியிலும், சிவலார் பட்டியில் ஆடி மாதமும் தாப்பாத்தியில் சித்திரை மாதமும் பொங்கல் நடத்துகிறார்கள். சின்னவநாயக்கன் பட்டியில் பொங்கல் வீடுகளில் வைத்துப் படையல் மட்டும் கோயில் சிலைக்கு முன் போடுகிறார்கள். கோழியின் இடது காலை வெட்டி சாமிக்குப் படையல் போடுகிறார்கள்; இந்தப் படையலை சிலை செய்பவனுக்கும், உறுமிக் காரனுக்கும் கொடுக்கிறார்கள். சிவலார் பட்டியில் தீக் குழி இறங்குதல் முக்கிய அம்சமாக இருக்கிறது. முளைப்பாரி, மாவிளக்கு கொண்டு வழிபடுகிறார்கள்.

வேளார் செட்டியாரால் செய்து வைக்கப்பட்ட மண் சிலையைப், பொங்கல் முடிந்ததும் மந்தைக்குக் கொண்டு சென்று உடைத்துக் காலால் மிதிக்கிறார்கள். இது எல்லா ஊர்களிலும் இருக்கிறது. மதுரை மாவட்டம் சிறுவாலையிலும் இந்நிகழ்ச்சி உண்டு. ஆந்தி ராவிலும் இச்சிலை உடைக்கும் நிகழ்ச்சி இருக்கிறது. இங்கு முத்தாலம்மன் ஏழு சகோதரிகளில் ஒருவராகப் போற்றப்படுகிறார். சிவலார் பட்டியில் சிலை உடைக்கும்போது செட்டியாரை விரட்டி அடிக்கப் போவார்கள். இச்சிலை உடைத்தலால் மழை பெய்யும் என்பது நம்பிக்கை (குருசாமி, கே., 8.9.1984). இது ஆந்திரா விலும் இருக்கிறது; ஆந்திராவில் எருமை, ஆடு, கோழி பலி கொடுக்கப்படுகின்றன; தமிழ்நாட்டில் ஆடு, கோழி ஆகியவை மட்டும் பலி கொடுக்கப்படுகின்றன.

அன்று பிறந்து அன்றே அழிவதுதான் முத்தாலம்மன்;அதற்கு மேல் வைத்திருந்தால் ஊருக்கு அழிவு நேரும் என்பது மக்கள் நம்பிக்கை.

**முப்பிடாரியம்மன்**

பிடாரியம்மன் என்றும் முப்பிடாரியம்மன் என்றும் வழங்கும் பிடாரியம்மன் கோவில் தமிழ் நாட்டின் பல பகுதிகளில் இருக் கின்றன. விளாத்திகுள வட்டத்தில் குளக்கட்டாங்குறிச்சி, அழகா புரி ஆகிய ஊர்களில் முப்பிடாரி என்ற பெயரில் அம்மன் கோயில் கொண்டிருக்கிறாள்.

அம்மன் கோயில்களில் பலிகொடுக்கும்போது துணைத் தெய்வத்தின் முன் பலி கொடுப்பார்கள்; அம்மன் சிலையை மறைத்து விடுவார்கள்; ஆனால் பிடாரியம்மனுக்குப் பலிகொடுக்கும் போது சிலையை மறைக்க மாட்டார்க்ள்; இது தமிழ்நாட்டின் எல்லா பகுதிகளிலும் இருக்கிறது. தமிழ்நாட்டின் திருச்சி மாவட்டத்தில் பத்து நாள் விழாவாக பிடாரியம்மன் பொங்கல் நடக்கிறது. ஆனால் விளாத்திகுள வட்டத்தில் ஒரே நாளில் பொங்கல் முடிந்துவிடுகிறது; ஒன்பதாவது நாள் விழா தேர்த் திருவிழாவாக மற்ற பகுதியில் நடக்கிறது. தேர் போகும்போது பலி கொடுக்கப்படுகிறது; எருமைக்கிடா கொடுத்த காலமும் உண்டு. ரத்தத்தைப் பாத்திரத்தில் பிடித்து கோயிலில் வைத்துவிடுவார்கள். மறுநாள் காலையில் ரத்தம் குறைந்திருக்கும்; பிடாரி குடித்து விட்டது என்ற நம்பிக்கை மக்களிடம் இருக்கிறது (குருசாமி., கே., 8-9-1984).

பிடாரி விழாவின்போது அரிசிச்சோறு, பழங்கள் ஆகியவை எல்லைக் கற்கள் மீது எறியப்படுகின்றன. ஆறாவது நாள் பூசாரி யின் வீட்டிற்கு பிடாரி எடுத்துச் செல்லப்படுகிறது; எல்லைக் கற் களில் உறையும் கெட்ட சக்திகள் நீங்கும்படி பூசாரி வழிபாடு நடத்துகிறார்; பூசாரி காப்புக் கட்டிக் கொள்கிறார்; கறுத்த ஆடு பலி கொடுக்கப்படுகிறது. அதன் ரத்தம் பாத்திரத்தில் பிடித்து வைக்கப்படுகிறது; சோற்றை அதில் கலப்பதில்லை. மரக்குதிரை மீது வைத்து பிடாரி ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகிறது; ஒவ்வொரு எல்லைக்கல் வந்தவுடன் ஆடு பலி கொடுக்கப்படுகிறது. ஊர்வலம் முடிந்தவுடன் ரத்தமுள்ள மண் பாத்திரத்தைக் கையில் எடுத்து வேகமாக ஒரு கயிற்று உறியில் வைத்துக்கொண்டு எல்லைக் கற்களை நோக்கி ஓடுகிறார்; அவரோடு சிலர் கூட ஓடுவார்கள்; அவரைப் பிடித்துக் கொண்டே இவர்களும் ஓடுகிறார்கள்; பிடாரி ஏறிய நிலையில்தான் பூசாரி இருக்கிறார்; கற்கள் வந்தவுடன் அதை ஒரு முறை சுற்றிவிட்டு, ஓங்கி அதன் மீது எறிகிறார்; உடனே திரும்பிப் பார்க்காமல் வந்த இடத்திற்குச் செல்கிறார்; அதன்பின் பிடாரியை ஊர்வலமாக குதிரைமீது வைத்துக்கொண்டு செல்கிறார்கள்; கோயில் வந்தடைகிறார்கள் (வொய்ட்ஹெட், 1983:103).

விளாத்திகுள வட்டத்தில் குளக்கட்டாங்குறிச்சியிலுள்ள பிடாரி கோயிலுக்கு வேளார் பூசாரியாகவும், அழகாபுரியில் நாடார் பூசாரி யாகவும் இருக்கிறார்கள். பங்குனி மாதம் ஞாயிற்றுக்கிழமை, திங்கள், செவ்வாய்க்கிழமைகளில் முப்பிடாரி அம்மனுக்குப் பொங்கல் நடத்துகிறார்கள். மண்ணால் ஆகிய சிலை வைத்திருக் கிறார்கள்.

### மாதா கோயில்

புதூர், பூசனூர் ஆகிய ஊர்களில் மாதா கோவில்கள் இருக் கின்றன. புதூரில் மாதா கோயில் நாடார்க்குப் பாத்தியப்பட்டதாக இருக்கிறது. அது அவர்களின் குலத் தெய்வக் கோயிலாக இருக் கிறது; நாடார்தான் பூசாரியாக இருக்கிறார்; பூசனூர்க் கோயில் ஊர்த்தெய்வக் கோயிலாக இருக்கிறது. புலவர் இதற்குப் பூசாரியாக இருக்கிறார். இரண்டு ஊர்களிலும் கற்சிலைதான் இருக்கிறது. புதூர் மாதா கோயிலில் உள்ள பெரியாண்டவரும் நாடார்களின் குலத் தெய்வமாக இருக்கிறார். பெரியாண்டவர் கருப்பசாமி போன்ற அமைப்பில் உள்ளவர்; மேல்மாந்தை பெத்தனாட்சியம்மன் புதுக் கோயிலிலும் துணைத் தெய்வமாகவும் குலத் தெய்வமாகவும்

இருக்கிறார். பூசனூரில் சித்திரை மாதம் பொங்கலும் புதூரில் மாசி மாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் பொங்கலும் நடத்துகிறார்கள். விழாவின்போது ஆட்டுக்கிடா பலி கொடுக்கப்படுகிறது.

ஆந்திராவில் மாதம்மா என்று அழைக்கப்படுகிறது இத் தெய்வம்; மாதியர்களின் (சக்கிலியர்) முக்கிய தெய்வமாக வணங்கப்படுகிறது. இத்தெய்வத்தின் மீது கொண்டுள்ள பயத் தால் எல்லா இனத்தார்களும் மாதம்மாவை வணங்குகிறார்கள். ஏழு சகோதரிகளில் ஒருத்தியாகப் போற்றி வழிபடப்படுகிறார் (எல்மோர், டபிள்யூ, டி., 1984:22).

### காமாட்சியம்மன்

தத்தனேரியில் காமாட்சியம்மன் ஊர்த் தெய்வமாகக் கும்பிடப் படுகிறது. மண்சிலை இருக்கிறது; ஆண்டுதோறும் பொங்கல் சமயம் புதிய சிலை வைக்கிறார்கள். துணைச் சாமியாக வைரவன் இருக்கிறார். கழுப்போடப் படுகிறது; அதை, பூசாரி, ஏகாளி, மேளக்காரன் ஆகியோர் பகிர்ந்து கொள்கிறார்கள். மாவிளக்கு, முளைப்பாரி கொண்டு வழிபடுகிறார்கள்.

நம்பிபுரத்தில் காமாட்சியம்மன் நாடார்களுக்குப் பாத்தியப் பட்டக் கோயிலாக இருக்கிறது. நாடார்தான் இதற்குப் பூசாரி. வைகாசி கடைசி வெள்ளிக்கிழமை இக்கோயிலில் பொங்கல் கொண்டாடுகிறார்கள்.

### மரகதவல்லியம்மன்

அருங்குளத்தில் இக்கோயில் இருக்கிறது. புலவர் இதற்குப் பூசாரியாக இருக்கிறார். ஐம்பொன் சிலை இருக்கிறது. பங்குனி மாதம் கடைசி செவ்வாய் அன்று இதற்குப் பொங்கல் வைத்து வழி படுகிறார்கள். கழுப்போடுகிறார்கள். இதைப் பூசாரி வைத்துக் கொள்கிறார். கடா வெட்டி வழிபடுகிறார்கள். மாவிளக்கு, முளைப்பாரி கொண்டு வணங்குகிறார்கள். இது இவ்வூர்க் காவல் தெய்வமாகக் கருதப்படுகிறது.

### துர்க்கையம்மன்

துர்க்கையம்மன் துக்கையம்மன் என்று நாட்டுப்புற வழக்கில் வழங்கப்படுகிறது. கமலாபுரம், குளத்தூர், சுப்புலாபுரம், இடைச்சி யூரணி, ரெகுராமபுரம், சண்முகாபுரம், எம். குமாரசக்கணாபுரம், கருத்தையாபுரம், கீழக்கல்லூரணி ஆகிய ஊர்களில் துக்கையம்

மனை வழிபடுகிறார்கள்; ஊர்த் தெய்வமாகக் கொண்டாடு கிறார்கள். சுப்புலாபுரம் கோயிலில் வேளார் செட்டியாரும் குளத் தூரில் பிள்ளையும் பூசாரிகளாக இருக்கிறார்கள். ஏனைய ஊர்களில் பண்டாரம் பூசாரியாக இருக்கிறார். குளத்தூரில் மட்டும் கல்சிலை இருக்கிறது; மற்ற ஊர்களில் பீடம் போட்டு வழி படுகிறார்கள்; ஊர் மந்தையிலோ, ஊரின் நடுவிலோ, களத்திலோ பீடம் போட்டு வழிபடுகிறார்கள். சண்முகாபுரத்தில் துள்ளுமறி அறுக்கிறார்கள்; ரெகுராமபுரத்தில் சக்திக்கடா வெட்டுகிறார்கள்; எல்லா ஊர்களி லும் பலி கொடுக்கிறார்கள். இடைச்சியூரணியில் பொங்கல் மட்டும் வைத்து வழிபடுகிறார்கள்; பலி கொடுப்பதில்லை. குளத் தூரில் ஆனி மாதமும் சுப்புலாபுரத்தில் சித்திரை மாதம் முதல் ஆடி வரையிலுள்ள மாதங்களிலும், பொங்கல் நடத்துகிறார்கள்; மழை பெய்ய வேண்டும் என்ற நோக்கத்தை முதலாகக் கொண்டு வழிபடுகிறார்கள். வயிரவன் துணைத் தெய்வமாகக் கருதப் படுகிறது.

### அங்காள ஈசுவரி

புதூரில் மட்டும் இக்கோவில் இருக்கிறது. மூப்பனார் இனத் தைச் சார்ந்தவர் இதற்குப் பூசாரியாக உள்ளார். மாசி மாதம் செவ்வாய்க்கிழமை இதற்குப் பொங்கல் நடத்துகிறார்கள். கல் சிலை இருக்கிறது. துணைத் தெய்வங்களாக உத்தண்டசாமி, சமயக்கருப்பசாமி இருக்கிறார்கள். முன் காலத்தில் சூல ஆடு பலி கொடுக்கப்பட்டது. இப்போது ஆட்டுக்கிடா மட்டும் பலியாகக் கொடுக்கப்படுகிறது. ஆந்திராவில் அங்காளம்மன் ஏழு சகோதரி களில் ஒருவராகப் போற்றப்படுகிறார் (எல்மோர், டபிள்யு. டி., 1984:6).

### காய்ச்சிக்காரம்மன்

புதூர் குளக்கட்டாங் குறிச்சியில் காய்ச்சிக்காரம்மன் கோவில் இருக்கிறது. இந்தக் கோவில் இவ்வட்டாரத்தில் இங்கு மட்டும் இருக்கிறது. சிலை இல்லை. பீடம் இருக்கிறது. வேளார் செட்டியார் இதற்குப் பூசாரியாக இருக்கிறார். வைகாசி மாதம் பொங்கல் வைக்கிறார்கள். பலி கொடுக்கப்படுகிறது. மக்களுக்குக் காட்சி கொடுத்து ஆள்படுத்தும் தெய்வம் என்ற நிலையில் காட்சிக் காரம்மன் ஆகி காய்ச்சக்காரம்மன் என்று வந்திருக்க வேண்டும்; காய்ச்சல் நோய் தீர்க்க வந்த தெய்வமாகவும் கொள்ளலாம்.

### இசக்கியம்மன்

விளாத்திகுளம் நாகலாபுரம் சாலையில் பெருநாழி சாலை விலக்கிற்குச் சற்றுத் தொலைவில் உள்ளது இக்கோயில். இசக்கி யம்மன் துடியான தெய்வம். இச்சாலையில் செல்லும் பேருந்து ஓட்டுநர் அனைவரும் பேருந்தை நிறுத்தி இதை வழிபட்ட பின்னர் தான் செல்கிறார்கள். குழந்தைகளின் சுகம் வேண்டி நேர்த்திக் கடனாக மரத் தொட்டில் செய்து வந்து வழிபடுகிறார்கள். நீலி தான் இசக்கி என்று கூறுகிறார்கள்(கந்தசாமி,வி.கே., 10.8.1984).

### ராக்காட்சியம்மன்

வேலிடுபட்டியில் ராக்காட்சியம்மன் கோவில் இருக்கிறது. இக்கோவிலில் சிலை இல்லை. நேர்த்திக் கடனாக மக்கள் மண்ணால் செய்து வைத்த தவழும் பிள்ளை சிலைகள்தாம் இருக் கின்றன. இந்த ராக்காட்சியையும் நீலி என்றே கூறுகிறார்கள் (கந்தசாமி, சி., 11.9.1984).

### குளத்து அம்மன்

புதூர் அருப்புக்கோட்டை சாலையில் உள்ள சிவலார்பட்டியில் இக்கோவில் இருக்கிறது. காளி, மாரி போன்றதுதான் குளத்து அம்மன் என்று கூறுகிறார்கள் (குருசாமி, கே., 8.9.1984). தேவர் இனத்தைச் சார்ந்தவர் பூசாரியாக இருக்கிறார்; அம்மனுக்குக் கற்சிலை உள்ளது. ஆடி மாதம் இதற்குப் பொங்கல் வைத்து வழி படுகிறார்கள். மாவிளக்கு, முளைப்பாரி கொண்டு வழிபடுகிறார் கள். பெரிய பொங்கல் நடத்தாத ஆண்டில் சாதாரணமாக பொங்கல் வைத்து வழிபடுகிறார்கள்; இதைக் குளுமை சார்த்துதல் என்று கூறுகிறார்கள். முன்காலங்களில் பலி கொடுத்து வந்திருக் கிறார்கள்; இப்போது பலி கொடுப்பதில்லை. ஊரார் எல்லோரும் சேர்ந்து வழிபடுகிறார்கள்.

### மந்தையம்மன்

நாகலாபுரத்திற்கருகிலுள்ள சங்கரலிங்கபுரத்தில் இத் தெய்வம் இருக்கிறது. இதற்குத் தனியே கோவில் இல்லை. ஊர் மந்தை யில் பீடம் போட்டு பொங்கல் வைத்து வழிபடுவார்கள். புரட்டாசி அல்லது ஐப்பசி மாதங்களில் வழிபடுகிறார்கள். மழை வேண்டியே இதற்கு வழிபாடு நடத்துகிறார்கள். மந்தையம்மனும் குளத்து அம்மனும் ஒன்றுதான் என்று சொல்லப்படுகிறது (இராமசாமி,கே., 13.8.1984).

**வடக்குத்தியம்மன்**

சிவலார்பட்டியில் புளியமரத்தின் அடியில் சிலை இருக்கிறது; கோயில் கட்டவில்லை. தேவர் இனத்தைச் சார்ந்தவர் பூசாரியாக இருக்கிறார். தொத்து நோய் வராது இருக்கவும் மழை வேண்டியும் இதற்கு வழிபாடு நடத்துகிறார்கள்.

ஊர் மக்கள் எல்லோரும் கஞ்சியைக் காய்ச்சி அண்டாக்களில் எடுத்துக்கொண்டு கோயிலுக்குச் செல்கிறார்கள். மழை வேண்டி கஞ்சி ஊற்றுகிறார்கள். வேறுபாடில்லாது எல்லோரும் கஞ்சி குடிக்கிறார்கள்; பானங்கரம் குடிக்கிறார்கள்; துள்ளு மாவு பெற்றுக் கொள்கிறார்கள்.

**சோலையம்மன்**

ரெகுராமபுரம், வெம்பூர் ஆகிய ஊர்களில் இக்கோவில் இருக்கிறது. ரெகுராமபுரத்தில் இக்கோவில் பள்ளர்க்குப் பாத்தியப் பட்ட கோவிலாக இருக்கிறது. பள்ளர்தான் பூசாரி. இது ஒரு குலத் தெய்வக் கோயிலாக இருக்கிறது.

வெம்பூரில் மழை வேண்டி,சோலையம்மனை வழிபடுகிறார்கள். புரட்டாசி மாதம் ஊரெல்லாம் ஒன்று சேர்ந்து கஞ்சி காய்ச்சி ஊற்று கிறார்கள்; பானங்கரம், துள்ளு மாவு கொடுக்கிறார்கள். சோலை யம்மன் கஞ்சி என்று கூறுகிறார்கள். திங்கட்கிழமை இந்த வழி பாடு நடக்கிறது.

**பாம்பாலம்மன்**

இதற்கு இவ்வட்டாரத்தில் தனிக் கோவில்கள் இல்லை. பாம்பு கடிக்காது இருக்க, இதனை திசைநோக்கி வழிபடுகிறார்கள். தீபாவளி சமயம், இதற்குச் சேவல் அறுத்து வழிபடுகிறார்கள். எல்லா ஊர்களிலும் இதைக் கொண்டாடுகிறார்கள் (துளசிராமன், வெ., 3-10-1984).

**சந்திர மாகாளி**

நாடார்களுக்குப் பாத்தியப்பட்ட கோவில்; நாடார் பூசாரியாக இருக்கிறார். நாகலாபுரத்தில் இக்கோயில் இருக்கிறது. இக் கோயிலில் தேரோட்ட விழாவும் நடக்கிறது.

### பெத்தனாட்சியம்மன்

இக்கோயில் மேல்மாந்தை, சூரங்குடி ஆகிய ஊர்களில் இருக்கிறது. குலத் தெய்வப் பகுதியில் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது.

மக்கள் தீய சக்திகளினின்றும் தங்களைக் காக்க வேண்டியும் ஊர்த் தெய்வங்களை வணங்குகிறார்கள்; ஒட்டுமொத்தமாக ஊரார் எல்லாம் நோய்வாய்ப்பட்டு இறக்காது இருக்கவும் ஊர்த் தெய்வங்களை வணங்குகிறார்கள்; மழை வேண்டியும் ஊர்த் தெய்வங்களை வணங்குகிறார்கள் என்பது தெரிகிறது. ஊர்த் தெய்வம் என்பது மக்களின் காவல் தெய்வமே என்பதும் தெளிவாகின்றது.

# 5. இனத் தெய்வங்கள்

விளாத்திகுளம் வட்டத்தில் நாயக்கர் கால ஆட்சியில் குடி பெயர்ந்து குடியேறிய இனங்கள் இருக்கின்றன. அவ்வாறு குடியேறிய இனங்கள்தாம் அனுப்பக் கவுண்டர், சில்லவார், தோக்கலவார், கொல்லவார், கம்மவார் நாயுடுகள் தெலுங்குச் சக்கிலியர், அனுப்பச் சக்கிலியர்கள்; ரெட்டியார்கள் தேவாங்கச் செட்டியார்கள். இவர்கள் ஆந்திர நாட்டிலிருந்தும் கர்நாடகத்திலிருந்தும் குடிபெயர்ந்தவர்கள். கிருஷ்ண தேவராயருடைய விஜயநகர சாம்ராஜ்ஜியத்தின் தலைநகரம் இருந்த இடம் பெல்லாரி மாவட்டத்திலுள்ள ஹம்பி ஆகும். இது இப்போது கர்நாடக மாநிலத்தில் இருக்கிறது. இங்கு தெலுங்கு, கன்னடம் பேசக்கூடிய மக்கள் இப்போதும் இருக்கிறார்கள். இங்குள்ள துங்கபத்திரா நதிக்கரையிலிருந்து வந்து குடியேறியவர்கள்தாம் ரெட்டியார், கவுண்டர், நாயுடு ஆகியோர். ஆகவே, இவர்கள் கன்னடம், தெலுங்கு, மொழி பேசக்கூடிய மரபினராக இன்றும் உள்ளனர். இன்று இவர்களில் ரெட்டியார்கள் பல ஊர்களில் தெலுங்கு மொழியை மறந்து தமிழ் பேசக் கூடியவர்களாக இருக்கின்றனர்; அதுபோலவே கவுண்டர்களும் பல ஊர்களில் தமிழ் பேசக்கூடியவர்களாக இருக்கின்றனர்; கன்னடத்தை மறந்து விட்டனர்; தமிழ் மொழி பேசக்கூடியவர்கள் மிகுதியாக வாழும் ஊர்களில் உள்ள ரெட்டியார்கள் தெலுங்கு பேசக் கூடியவர்களாகவும் இருக்கின்றனர்; இதே வகையிலுள்ள சில ஊர்களில் தெலுங்கை மறந்தவர்களாகவும் இருக்கிறார்கள். இதுபோன்று கவுண்டர்களும் இருக்கிறார்கள். ஆனால் நாயுடுகள் அவ்வாறில்லை. அவர்கள் இருக்கும் எல்லா ஊர்களிலும் தெலுங்கு பேசக் கூடியவர்களாகவே இருக்கிறார்கள்.

இவ்வாறு குடிபெயர்ந்த இனங்களுக்கென்று தெய்வங்களும் தனியாக இருக்கின்றன; அத் தெய்வங்களை வேறு இனத்தார் வழிபடுவதில்லை. இதைப்போன்றே வேறு இனங்களுக்கும் தனித் தனியே இருந்திருக்க வேண்டும். தமிழ்ச் சமுதாயத்தில் இப்போது அவற்றைப் பிரித்தறிய முடியவில்லை; மிகுதியான தெய்வங்களை வழிபடுவதினாலும், இனக்கலப்பாலும் அவற்றைத் தனிமைப் படுத்த இயலாது போயிருக்கலாம். இன்றும் அந்தந்த இனங்களுக்கென்று இனத் தெய்வங்கள் இருக்க வேண்டும்; நம்மால் வேறு

படுத்திக் காட்ட முடியாது கலந்திருக்கின்றன. ஆனால் ரெட்டியார், கவுண்டர், நாயுடு ஆகிய இனத்தார் சமீப காலத்தில் குடியேறி வாழ்ந்து வருபவர்கள். ஆகவே தங்கள் இனத் தெய்வங்களை மறக்காது மறைக்காது, தங்களுக்கு உள்ள முக்கிய துணை போன்று வழிபட்டு வருகிறார்கள்.

விளாத்திகுள வட்டத்தில் குடியேறிய கவுண்டர், ரெட்டியார், நாயுடு, அனுப்பச் சக்கிலியர், தேவாங்கச் செட்டியார் ஆகிய இனங்களில் ரெட்டியார், அனுப்பச் சக்கிலியர் ஆகியோர்க்குத்தாம் இவ் வட்டத்தில் இனத் தெய்வக் கோயில்கள் இல்லை. வேறு பகுதிகளில் இருக்கின்றன. ஆகவே அவற்றைக் காண்பது தேவையில்லாததாகிறது.

அனுப்பக் கவுண்டர்களை 'அனுப்பரசு' என்றுதான் பத்திரப் பதிவுகளில் எழுதுகிறார்கள்; அரச பரம்பரையினர்; 72 பாளையப் பட்டுகளில் வெள்ளியங்குன்றம், சிறுவாலை ஆகிய இரண்டு ஜமீன்களும் அடங்கும். சிறுவாலை ஜமீனின் தாயாதிக்காரர்கள்தாம், மேலக்கோட்டை, கீழக்கோட்டை, நடுக்கோட்டை ஜமீன்கள். இந்த அனுப்பரசுகளுக்குரிய இனத் தெய்வந்தான் ஒன்னம்மாள், தொட்டராயன் ஆகும்.

**ஒன்னம்மாள், தொட்டராயன்**

இக்கோயில், சின்னையாபுரம், மேலக்கல்லூரணி, கீழ்க் கல்லூரணி, வெம்பூர், சோலைமலையன்பட்டி, மாவில்பட்டி, ஆகிய ஊர்களில் இருக்கிறது. மேலக்கல்லூரணியில் மட்டும்தான் சுற்றுக் கோட்டை சாந்துச் சுவரால் கட்டப்பட்டிருக்கிறது;ஏனைய ஊர்களில் இலந்தை முள்ளால் கோட்டை அமைக்கப்பட்டிருக்கிறது. இலந்தை முள்தான் சுவாமிக்கு ஏற்றது என்றுகூறுகிறார்கள்(தொட்டராயன், தொ.,3-10-1984); மேலக்கல்லூரணியிலும் முன்பு இலந்தை முள்தான் கோட்டையாக இருந்ததாம். சமீப காலத்தில்தான் சாந்துச் சுவர் கோட்டையாக மாற்றியிருக்கிறார்கள். பொங்கல் சமயம் கோட்டைக்குப் பக்கத்தில் இலந்தை முள் கொண்டு வந்து அடைக்கும் பழக்கம் இன்றும் இருக்கிறது. ஆகவே சுவாமிக்கு உரியது இலந்தை முள்தான் என்பது தெளிவாகிறது.

கோயிலினுள் சிலை யெல்லாம் இல்லை. இரண்டு வேல மரங்கள் இருக்கின்றன. எல்லா ஊர்களிலும் இவ்வாறு இருக்கிறது; மாலை, ஆடை ஆகியவற்றை மரத்தில்தான் போடுகிறார்கள்.

மரத்தினடியிலுள்ள, பீடம்தான் வழிபாட்டில் முக்கிய அம்சமாகத் தென்படுகிறது.

ஆண்டுதோறும் மாசிமாதம் சிவராத்திரியன்று கோயில் கும்பிடு கிறார்கள். ஏழு நாட்களுக்கு முன்பே கொடி கட்டுகிறார்கள்; கொடி கட்டிவிட்டார்கள் என்றால், கவுண்டர்கள் வேற்று சாதி வீடுகளில் தண்ணீர் கூடக் குடிக்கமாட்டார்கள். யாரும் வீதிகளில் செருப்புப் போட்டு நடக்கக் கூடாது. கவுண்டர்கள் இருக்கும் தெருவில் காவல்போட்டு அடுத்த இனத்தார் நுழையாது இருக்கும் படிப் பார்த்துக்கொள்வார்கள். இன்றும் இந்த அனுப்பக் கவுண்டர் வகுப்பைச் சார்ந்த பல பெண்கள், வேற்று சாதியினர் செய்த உணவு, பலகாரம், ஆகியவற்றை உண்ணமாட்டார்கள். எப்போ தும் அடுத்தவர்கள் தொட்ட தண்ணீர்கூட குடிக்கமாட்டார்கள்; அவ்வளவு கடுமையான நோன்பிருக்கிறார்கள்.

ஊரில் யாருக்கேனும் அம்மை வந்தாலும் பொங்கல் நடத்து வதில்லை; சாவு ஏற்பட்டாலும் நடத்துவதில்லை; சாவு ஏற்பட்டு, கருமாதி செய்யாதிருந்தாலும் பொங்கல் நடத்தமாட்டார்கள். ஆகவே, கொடி கட்டுவதற்கு முன் கருமாதியெல்லாம் நடத்தி விடுவார்கள். எந்தவிதத் தீட்டும் இருக்கக் கூடாது; வீட்டுக்கு விலக்கமான பெண்கள் ஊருக்கு வெளியே தனியிடத்தில்தான் இருக்க வேண்டும்; அதுபோலவே அச்சமயத்தில் பூப்பெய்திய பெண்களும் இருக்க வேண்டும்; நல்லொழுக்கத்தோடு இருக்க வேண்டும்; வேற்று சாதியிலிருத்து வரும் விருந்தினர்களை அழைக்க மாட்டார்கள். இவ்வாறு கடுமையான நெறிக்குட்பட்டே பொங்கல் நடத்துகிறார்கள்.

ஏழாவது நாள் இரவு பொதுவாகப் பொங்கல் இடுவார்கள்; தனித்தனியே பொங்கல் வைப்பதில்லை. கம்பளத்து நாயுடு இனத்தைச் சார்ந்தவர்கள்மட்டும் உறுமி கொட்ட அழைக்கப்படுவர். வேறு மேளதாளங்கள் இல்லை. பொங்கல் வைத்தவுடன், கரும்பு, பஞ்சாமிர்தம்,இளநீர்கொண்டு சுவாமிக்குப் பூசை நடத்தப்படுகிறது. கவுண்டர் இனத்தார் மட்டும் பூசையில் பங்குகொள்வர். கோயிலுக்கு முன் அக்னி வளர்த்திருப்பார்கள். அதற்கும் பூஜை செய்வார்கள்,

பூசைக்கு முன்பாக அம்பலக்காரர் வீட்டிலிருந்து பூப்பெய்தாத சிறுமியர் இருவர் பூக்கூடை கொண்டு வருவார்கள். அப்போது

உறுமி கொட்ட,சுவாமிகளைப் பற்றிய-வரலாற்றைக் கன்னடத்தில் பாடிக்கொண்டு வருவார்கள். கோயில் வந்தவுடன் பூசை நடக்கும். இது நடு இரவில் முடிவடையும். அதன்பின் நேர்த்திக் கடன் செலுத்துவர். மொட்டை எடுத்தல், குழந்தைக்குப் பெயரிடல் நடக்கும். கரும்புத் தொட்டில் கட்டி, குழந்தையைக் கிடத்தி, கன்னடத்தில் தாலாட்டுப் பாடுவார்கள்; அது இனிமையான சந்த அமைப்பில் உள்ள பாட்டாகும். அதன்பின் நேரப் போக்கிற்காக கன்னடத்தில் பாடிக்கொண்டிருப்பர்; கும்மி அடிப்பர்; கோயிலினுள் தமிழ் யாரும் பேசமாட்டார்கள்; கன்னடம் மறந்த கவுண்டர்கள்கூட கோயிலினுள் பேசமாட்டார்கள். வெளியே வந்துதான் தமிழில் பேசுவார்கள். கோயிலுக்கு வெளியே ஒயில் கும்மி ஆடுவார்கள்; பாட்டுப் பாடுவார்கள். இது தமிழில் இருக்கும். விடியும்வரை இது நடக்கும். அதன்பின் பள்ளயம் பிரிப்பார்கள். அதற்கு முன் பூசை நடக்கும். இந்தத் திருநீறை வேற்று சாதியினர்க்குக் கொடுக்க மாட்டார்கள்.

பள்ளயம் பிரித்து, எல்லோருக்கும் பஞ்சாமிர்தம் கொடுப்பார்கள்; வரி கொடுத்த முறையில் தேங்காய் பழம் கொடுப்பார்கள்; கரும்புக் கட்டைப் பிரித்துக் கொடுப்பார்கள். அதன்பின் எல்லோரும் உறுமி கொட்ட,கோவிலை விட்டு ஊருக்கு வருவார்கள். இதுதான் எல்லா ஊர்களிலும் நடக்கும் வழிபாட்டு முறையாகும்.

ஒன்னம்மாள் தொட்டராயர் என்பது இரண்டு சுவாமிகளாகும். ஒன்னம்மாள் பெண்; தொட்டராயர் ஆண். தாய் மகன் ஆவர் இவ்விருவர். தொட்டராயருடைய தந்தை அட்டிய தொட்டப்பன்; மனைவி பொட்டியம்மாள். ஆகவே இவ்வினத்தைச் சார்ந்த பலருக்கும் தொட்டப்பன், தொட்டராயன், ஒன்னம்மாள், பொட்டியம்மாள் என்றே பெயர் இருக்கும். இக்கோவிலுக்கு வேற்று சாதியினர் வருவதில்லை என்று கண்டோம். இதற்கும் ஒரு விதிவிலக்கு இருக்கிறது. மேலக்கல்லூரணி கிராமத்திலிருந்து 7 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது துரைச்சாமிபுரம். இங்கிருந்து அரிஜன வகுப்பைச் சார்ந்த கணவன் மனைவி நடந்தே மேலக்கல்லூரணி வழியே புதூருக்கு அடிக்கடிப் போய் வருவார்கள்; புதூரில் அவர் மாமா இருக்கிறார். அவர்களுக்கு நெடுநாளாகக் குழந்தையில்லாது இருந்திருக்கிறது. ஒரு சமயம் துரைச்சாமிபுரத்திலிருந்து அவர்கள் புறப்பட்டுப் புதூருக்குச் சென்றார்கள். வழியில் மேலக்கல்லூரணிக் கண்மாய்க் கரையில், தொட்டராயன் கோயிலுக் கருகில் இளைப்பாறினார்கள். வயிற்று வலியும் அந்த கணவனுக்கு இருந்தது; துன்பப்பட்டார். உடனே அருகிலுள்ள தொட்டராயனை வேண்டிக்

கொண்டார்கள். நோயும் நீங்க வேண்டும்; குழந்தையும் பிறக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள். அவர்களுக்குத் தெரியும் கோயிலுக்குள் போக முடியாதென்று; ஆகவே வெளியே இருந்து வேண்டிக் கொண்டார்கள். நோயும் நீங்கியது; அடுத்த ஆண்டே ஆண் குழந்தையும் பிறந்தது; ஆகவே வேண்டுதலை முடிக்க வேண்டி கோயிலுக்கு வண்டி போட்டுக்கொண்டு வந்திருக் கிறார்கள். மேலக்கல்லூரணி கிராமத்தார் இதை அனுமதிக்க வில்லை; மன்றாடிக் கேட்டார்கள். இறுதியாக ஒரு முடிவு எடுத் தார்கள். கோயிலில் பூக்கட்டிப் பார்த்தார்கள். அவர்கள் வழிபட லாம் என்று வெள்ளைப்பூ வந்ததாம். உடனே அனுமதித்தார்கள். அதுவும் கோயிலின் வெளியே வைத்தே வேண்டுதலை முடிக்க வேண்டுமென்று நிபந்தனை விதித்தார்கள். வேண்டுதல் நிறை வேற்றப்பட்டது; குழந்தைக்கு மொட்டை எடுக்கப்பட்டது; பெயர் விடப்பட்டது; தொட்டராயன் என்று அழைக்கப்பட்டது. அடுத் தடுத்துப் பிறந்த குழந்தைகளுக்கும் தொட்டராயன், தொட்டப்பன், ஒன்னம்மாள் என்று பெயர் வைத்தார். தன்னுடைய குலத்தெய் வமாகவே ஏற்றுக் கொண்டார்கள். இன்னும் இரண்டாவது தலை முறையினர் துரைச்சாமிபுரத்தில் இருக்கிறார்கள். அவர்கள் மட்டும் வெளியாட்கள் வீட்டில் சாப்பிடாது இருக்கிறார்கள்; பொங்கல் முடிந்தவுடன் அவர்கள் மட்டும் தனியாக வந்து வெளியே இருந்து சுவாமியை வணங்கி, வழிபட்டுச் செல்கிறார்கள் (அழகர்சாமி, பொ., 3-10-1984).

மதுரை மாவட்டத்தில் அனுப்பக் கவுண்டர்கள் மிகுதியாக வாழும் சொக்கநாதபுரத்தில் தொட்டராயன் கோவில் இருக்கிறது; அங்கு கற்சுவர்களால் கோட்டை கட்டப்பட்டு, கற்பக்கிரகம் அமைத்துக் கற்சிலை வைத்திருக்கிறார்கள்; அங்கு வேலமரமே இல்லை. தென்னை மரங்கள்தான் வைத்திருக்கிறார்கள்; மரபெல் லாம் உடைத்தெறியப்பட்டிருக்கிறது. சிலை, குழல் ஊதும் கண்ணன் போன்று இருக்கிறது; கோவிலைத் திறந்து விட்டிருக் கிறார்கள்; எல்லா இனத்தாரும் இங்கு வந்து வழிபாடு நடத்து கிறார்கள்; பெருமாள் கோவில் போன்று வழிபாடு நடைபெறுகிறது; நாள்தோறும் போடி நகரப்பகுதியிலிருந்து பெண்கள் மிகுதியாக வந்து வழிபடுகிறார்கள்; போடியில் பள்ளித் துணை ஆய்வாளராக இருக்கும் அன்பர் ஒருவர் நாள்தோறும் இரவு ஒரு மணிக்கு வந்து சாமியை வணங்கி ஆருடம் சொல்லிவந்தார்; இது ஓராண்டுக்கு முன் நடந்தது; ஆய்வாளர் நேரில் சென்று பார்த்தார்; காலம் மாறும்போது எல்லாம் மாறத்தான் செய்யும்.

அனுப்பக் கவுண்டர்களுக்குக் குலத் தொழில் ஆடு மாடு மேய்த்தல்தான்; அதன்பின்தான் விவசாயம்; மேய்ச்சல் வேண்டி பலவிடங்களுக்கும் அலைந்து திரிந்தவர்கள். துவராபுரியில் இவர்கள் இருக்கும்போதும் இவர்கள் இனத்திலிருந்து பெண் கேட்டார்கள் டில்லி துலுக்கர்; இவர்களும் பெண் கொடுக்கச் சம்மதித்தனர்; திருமணத்தின்போது-அதாவது திருமணத்தின் முன் இரவில் விருந்து கொடுக்கப்பட்டது. எல்லோருக்கும் ஒட்டுமொத்தமாக விருந்து பரிமாறப்பட்டது; அப்போது ஒருவர்க்கு மட்டும் இடம் இல்லை; அருகில் இருந்த கூடையை எடுத்துவிட்டு உட்கார்ந்தார்; அதில் மாட்டிறைச்சி இருக்கக் கண்டார். இச் செய்தி எல்லோருக்கும் தெரிந்துவிட்டது. உடனே எல்லோரும் புறப்பட்டுவிடுவது என்று தீர்மானிக்கப்பட்டது;யாருக்கும் தெரியாது நடு இரவில் புறப்பட்டுவிட்டார்கள். மணப்பெண்ணை மட்டும் மறந்து விட்டு வந்தார்கள். வழியில் நினைவுக்கு வர, யார் போய் மீண்டும் அழைத்து வருவது என்று பேசிக்கொண்டார்கள். பிடுகருமல்லன் என்பவர் தான் போய் அழைத்து வரமுடியும் என்று போனார். மணப் பெண்ணிடம் செய்தியைச் சொல்லி அழைத்தார்; அதற்கு மணப்பெண், என் தலைவிதி இப்படியே இருக்கட்டும், நீ போய் சொல்; நீ வந்ததற்கு அடையாளமாக என் சுண்டு விரலை அறுத்துக் கொண்டு போ என்று சொல்லிவிட்டாள். பிடுகருமல்லனும் அவ்வாறு செய்து திரும்பினான்; வந்தவன் நடந்ததைச் சொன்னான். ஆகவே உனக்கு என்ன வேண்டும் என்று குலத் தலைவி ஒன்னம்மாள் கேட்டாள். 'எனக்கு என் கிளையைத் தவிர்த்து எல்லாக் கிளைகளிலும் சம்பந்தம் செய்து கொள்ளும் உரிமை வேண்டும், என்று கேட்டான். அதன்படி கொடுக்கப்பட்டது. பிடுகருமல்லன் அனுப்பரில் தாசில்வான் கிளையைச் சார்ந்தவர்; ஆகவே இன்று தாசில்வான் கிளையினர் எல்லாக் கிளையினரோடும் திருமண உறவு வைத்துக் கொள்வதைக் காணலாம். இது இன்றும் நடைமுறையில் உள்ள வழக்கம்.

இதற்கிடையில் துலுக்கர்கள் செய்தியறிந்து விரட்டிக் கொண்டு வர, அனுப்பர்களும் ஓடி வந்தனர். வரும் வழியில் ஆறு குறுக்கிட்டது. நீர் நிரம்பி வழிந்து ஓடிக்கொண்டிருந்தது. என்ன செய்வதென்று நினைத்துக் கொண்டிருக்கும் வேளையில், ஒன்னம்மாள் தியானித்துச் சொல்ல கரையிலிருந்த வேலமரம் பாலமானது. உடனே எல்லோரும் வேகமாகக் கடந்து சென்றனர். பின் வேலமரம் நிமிர்ந்தது. இதனால் துலுக்கர்கள் கரையைக் கடக்க முடியாது திரும்பிவிட்டார்கள். வந்த அனுப்பர்கள் பெல்லாரி மாவட்டத்தில்

துங்கபத்திரா நதிக்கரையில் தங்கினர். அப்போது விஜயநகர சாம்ராஜ்யத்தை ஆண்டவர் அரவீடு வம்சத்தைச் சேர்ந்த ராயர். ஆற்றில் ரத்த வெள்ளம் பெருக்கிட்டு ஓடியது. அதைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று மன்னன் எவ்வளவோ முயன்று பார்த்தார்; முடியவில்லை. ஒன்னம்மாள் ஆவின்பாலை ஆற்றில் ஊற்ற அது பாலாறாக ஓடியது. உடனே இதைக் கேள்விப்பட்ட மன்னன் ஒன்னம்மாளை அழைத்து வரச்சொல்ல, அவரும் வந்தார். நன்றி தெரிவித்து, என்ன வேண்டுமென்று மன்னன் கேட்டான். அதற்கு ஒன்னம்மாளும் அட்டிய தொட்டப்பரும், எங்கள் கூட்டம் தங்குவதற்கு இடமும், மேய்ச்சல் தரையும் வேண்டுமென்று கேட்டனர். மன்னனும் கூட்டம் தங்குவதற்கு இடமும், ஆடு மாடுகள் மேய்வதற்கு மேய்ச்சல் தரையும் கொடுத்தான். அன்றிலிருந்து அங்கேயே தங்கினர். அனுப்பர்களின் பலத்தைக் கணக்கிட்ட மன்னன் அனுப்பர்களில் மணம் செய்துகொள்ள வேண்டி தூது அனுப்பினான்; ஒன்னம்மாளைத் தங்கையாகப் பாவித்து நடத்தி வந்தான் மன்னன். தூதுவன் வரும் செய்தி தெரிந்தது; ஒன்னம்மாள் அட்டிய தொட்டப்பன் ஆகிய இருவரும் எல்லோரையும் கலந்து பேசினர்; என்ன செய்யலாமென்று சிந்தித்தனர். முடிவில் பிறந்த குழந்தைக்குக் கூட தாலி கட்டிவிடுவது என்று முடிவு செய்து அவ்வாறே செய்துவிட்டனர்; தூதுவன் வந்து சொன்னான்; மன்னனும் வந்து கேட்டான். ஒன்னம்மாள் மன்னனிடம் 'தாலி இல்லாது இருக்கும் பெண்ணைக் கட்டிக் கொள்ளுங்கள்' என்று சொன்னாள். யாரும் தாலி இல்லாது இல்லை. ஆகவே, மன்னன் திரும்பிவிட்டான். இப்பழக்கத்தினால்தான் சமீப காலம்வரை அனுப்பக் கவுண்டர்களுக்கு, சிறு குழந்தைப் பருவத்தில் திருமணம் செய்து வைக்கும் பழக்கம் இருந்திருக்கிறது. இப்போது மாறியிருக்கிறது (துளசிராமு, வெ., 3.10.1984).

ஒன்னம்மாளுக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அதற்குத் தொட்டராயன் என்று பெயரிட்டு அழைத்து வந்தனர்; அவனைப் பகைவர் அழிக்கத்திட்டமிட்டிருந்தனர்; ஆகவே அவனை யாருக்கும் தெரியாத இடத்தில் வைத்து வளர்த்தனர். எல்லா வித்தைகளிலும் சிறந்தவனாக ஆக்கினர். ஒரு சமயம் ராயருக்குப் பகைவரிடமிருந்து மிரட்டல் வந்தது; அதற்கு அனுப்பர்களின் உதவியை நாடினார்; அனுப்பர்களும் உதவச்சென்றனர்; அப்போது தொட்டராயன் சரியான போர் வீரனாக வெளிப்பட்டு அக்னிப் பரி ஏறி பகைவர்களை அடக்கினான். இதனால் அனுப்பர்களுக்கு மேலும் சிறப்பு ஏற்பட்டது. தொட்டராயன் திருமணம் முடித்து சிறப்புடன்

வாழ்ந்து விண்ணுலகை அடைந்தான். இது அனுப்பக் கவுண்டர் களின் திருமணப் பாட்டில் இருக்கும் செய்தியாகும்.

இனத்தைக் காத்து வாழ்வித்த தெய்வமாக இன்றும் ஒன்னம் மாள் தொட்டராயனை அனுப்பர்கள் வணங்கி வழிபடுகிறார்கள். அவர்கள் இருக்கும் ஊரிலெல்லாம் ஒன்னம்மாள் தொட்டராயன் கோயிலைப் பார்க்கலாம். ஆகவே ஒன்னம்மாள் தொட்டராயனை இனத் தெய்வமாக வழிபடுகிறார்கள்; வேலமரம் இவர்களுக்கு உதவியதால் அதை கோயிலில் வைத்து வணங்குகிறார்கள். கோயம்பத்தூரில் அனுப்பர் பாளையமும், மதுரையில் அனுப்பான டியும் இவர்கள் முதன் முதலில் வந்து தங்கியதால் அப்பெயர் பெற்றன என்று கூறுவர் (இராமகிருஷ்ணபாண்டியன், பா., 4.9.1984).

### தேவி சக்கம்மாள்

கம்பளத்து நாயக்கர்கள் வாழும் விளாத்திகுள வட்டத்தில் பெரும்பாலும் எல்லாக் கிராமங்களிலும் இக்கோயிலைக் காணலாம். இலந்தை முள்ளால்தான் கோட்டை அமைத்துள்ளார்கள். சிலை இல்லாதே வைத்திருக்கிறார்கள்; ஒரு குத்துக்கல் மட்டும் இருக் கிறது. ஒன்பது கம்பளத்திற்கும் சக்கதேவிதான் துணை என்று அவர்கள் நம்பி வாழ்க்கை நடத்துகிறார்கள். கட்டபொம்மன் கடைசியில் சக்கதேவியின் வாக்கைக் கேளாததால்தான் அழிய நேர்ந்தது என்று கூறுவர்; பாஞ்சைப்போரில் சக்கதேவி வெள்ளை யனுக்கு எதிராக இருந்து செயல்பட்டாள் என்று கூறுவர். பெல்லாரி தேசத்திலிருந்து கம்பளத்தோடு துணையாக வந்த தெய்வம்தான் தேவி சக்கம்மாள் (குமாரராமன், எம்., 22.9.1984).

சித்திரை மாதம் பௌர்ணமியன்று சக்கதேவியை வணங்கு கிறார்கள். பொங்கல் வைத்து வழிபடுகிறார்கள். சாமிக்கு உகந்தது உறுமிதான்; அதுபோலவே தேவராட்டம் ஆடுவார்கள்; இக்கம்பளத்து நாயுடுகள்தான் இன்று தமிழகத்தில் வேராட்டத் தைப் போற்றிக் காத்து வருகிறார்கள்.

சக்கதேவிக்கு வழிபாடு நடத்திய பின்தான் எந்த நல்ல காரியத் தையும் இம்மக்கள் நடத்துகிறார்கள். சக்கதேவியில்லாது தாங்கள் இருக்க முடியாது என்று நம்புகிறார்கள்.

### சௌண்டம்மாள்

தேவாங்கச் செட்டியார்களின் இனத் தெய்வம் சௌண்டம்மாள் ஆகும். விளாத்திகுள வட்டத்தில் புதூர், கீழக்கரந்தை ஆகிய

இரண்டு ஊர்களில்தான் தேவாங்கர்கள் வசிக்கிறார்கள். இவர்கள் குலத்தொழில் நெசவுத் தொழிலாகும். கன்னடம் பேசக்கூடிய வர்கள். அப்பகுதியில் திருமணத்திற்குத் தேவையான கூரைப் புடவைகளை இவர்களே தயாரித்துக் கொடுக்கிறார்கள். புதூரில் சௌண்டம்மாள் கோயில் இருக்கிறது.

**வண்டி மலைச்சியம்மன்**

கைக்கோள முதலியார் இனத்தாருக்கு இனத் தெய்வம் வண்டி மலைச்சியம்மன் ஆகும். அவர்கள் குடியிருக்கும் ஊரிலெல்லாம் வண்டி மலைச்சியம்மன் கோவில் இருக்கும். இம் முதலியார் களுக்குக் குலத் தொழில் நெசவுத் தொழிலாகும்.

விளாத்திகுள வட்டத்தில் விளாத்திகுளம், அயன் பொம்மையா புரம், பள்ளிவாசல்பட்டி (நாகலாபுரம்) ஆகிய ஊர்களில் வண்டி மலைச்சியம்மன் கோயில் இருக்கிறது.

கோயிலில் வண்டி மலைச்சியம்மனும்,வண்டி மலையனும் கிடந்த கோலத்தில் மல்லாந்து படுத்த நிலையில் இருக்கிறார்கள். வலது பக்க மூலையில் வைரவன் இருக்கிறார்; பக்க வாட்டத்தில் தண்டிப் பிள்ளைகள் இருக்கிறார்கள். பள்ளிவாசல்பட்டியில் 13 வருஷத் திற்கு முன்தான் கோயிலின் முன் மாடதேவி வைத்திருக்கிறார்கள். இச்சிலை வைத்தவுடன்தான் ஊருக்கு விசேஷமானதாம் (வாழவந் தான், ஏ., 15.10.1984).

ஏழு சகோதரிகளில் வண்டி மலைச்சியம்மன் கடைசிசகோதரி; ஒரு சமயம் வீட்டை விட்டு இளைய சகோதரி கிளம்பி வந்தாள். அவளைப் பின் தொடர்ந்து வண்டி மலையனும் வந்தான். பசி பொறுக்காது துன்பப் பட்டனர்; மேற்கொண்டு நடக்கவும் முடிய வில்லை. அவ்வழியில் முதலியார்கள் நெசவுத் தொழிலுக்காக நூலைப் பாவு போட்டுக் கொண்டிருந்தார்கள். அதற்குப் பசைக் கஞ்சி வைத்திருந்தார்கள். அதை எடுத்து வண்டி மலைச்சியம்மன் அருந்தி பசித்துயர் போக்கினாள். முதலியார்களுக்கு ஒரு வாக்குக் கொடுத்தாள். அவர்களை எப்போதும் காத்து வருவதாகக் கூறினாள். ஆகவேதான் முதலியார்களுக்கு இன்றும் குலத் தெய்வமாக வண்டி மலைச்சியம்மன் இருக்கிறாள்(தம்பா முதலியார் த., 15-10.1984).

செவ்வாய்க் கிழமை இக்கோயிலுக்குப் பொங்கல் வைக்கிறார் கள். ஆடி, ஆவணி மாதங்களில் இது நடைபெறும். திங்கட்

கிழமை வன்னிக்குளம் கருப்பசாமி கோயிலுக்குச் சென்று பொங்கல் வைக்கிறார்கள். அங்கிருந்து வண்டி மலைச்சியையும் வண்டி மலையனையும் அழைத்து வருகிறார்கள். செவ்வாய் இரவு கிணற்றிலிருந்து, மாரியம்மன் கோயிலுக்கருகிலிருந்து கும்பம் வளர்த்துக் கொண்டு வருவார்கள். அதன் பின் பொங்கல் வைப்பார்கள். பொங்கல் வைத்தவுடன் கோழி, சேவல் இறைச்சியோடு படைப்பு வைப்பார்கள். இது வைரவனுக்கு முன் வைக்கப்படும் ஊரார் பொங்கல் தனித் தனியே வைக்கிறார்கள். மாவிளக்குக் கொண்டுவந்து பூசை நடத்துகிறார்கள். பின் நேர்த்திக் கடனாகக் கடா வெட்டு, கோழி அறுப்பு நடக்கிறது.

புதன் மாலை மஞ்சள் நீராட்டம் நடக்கிறது. அதன் பின் பள்ளியம் பிரித்துக் கொடுக்கப்படுகிறது.

**பத்ரகாளியம்மன்**

நாடார் இனத் தெய்வம் பத்ரகாளியம்மன். நாடார்கள் இரு பிரிவினர் ஆவர்; வடக்குத்தி நாடார்கள், தெட்சணமாற நாடார் என்று கூறுவர். எல்லா நாடார்களும் இனத்தெய்வமாகப் பத்ரகாளியம்மனை வழிபடுகிறார்கள்; நாடார்கள் இருக்கும் ஊர்களிலெல்லாம் பத்ரகாளியம்மன் கோயில் இருக்கும். பங்குனிப் பொங்கல் என்றாலே நாடார்கள் பொங்கல் என்று சொல்லுமளவிற்கு அவ்வளவு சிறப்பாக நடத்துகிறார்கள்; பங்குனி மாதம் கடைசி செவ்வாய் அல்லது வெள்ளிக் கிழமைகளில் இப் பொங்கல் நடைபெறும். பெரும்பாலும் நாடார்கள் வெளியூர்களில் கடை வைத்திருப்பார்கள்: ஆனால் பொங்கல் சமயம் கண்டிப்பாக எல்லா நாடார்களும் செலவைப் பற்றிக்கவலைப் படாது ஊர் வந்து சேர்வர்; பொங்கல் சமயம்தான் எல்லா நாடார்களையும் ஊரில் பார்க்க முடியும்; குடும்பத்தில் நடக்க வேண்டிய சில முக்கிய நிகழ்ச்சிகளையும் அப்போதுதான் பேசி முடிவெடுக்கிறார்கள்.

எல்லோரும் ஒருங்கே இருந்து பொங்கல் வைக்கிறார்கள், முளைப்பாரி, மாவிளக்கு கொண்டு வந்து பூசை செய்கிறார்கள். சக்திக் கடா வெட்டப்படுகிறது; அது பூசாரிக்குக் கொடுக்கப்படுகிறது. படையல் போட்டுப் பூசை நடத்துகிறார்கள். அதைப் பூசாரியே எடுத்துக் கொள்கிறார். பூசாரி நாடாராகத்தான் இருப்பார்.

நேர்த்திக் கடனாகக் கடா வெட்டுவார்கள்; மாவிளக்கு எடுப்பார்கள்; கவறு குத்து நடக்கும்; சிலவிடங்களில் சேத்தாண்டி

வேஷமும் போடுகிறார்கள்; மொட்டை எடுத்துப் பெயர் சூட்டுகிறார்கள்.

ஆக, இனம் வாழவேண்டியும் திராவிடர்கள் தெய்வத்தை வணங்கி வந்திருக்கிறார்கள். இங்கு இனம் என்பது, தம்மோடு சேர்ந்த கூட்டத்தினர் என்பதாகும்; இவ்வாறு வழிபடப்பெறும் தெய்வம் அக்கூட்டம் வாழ உதவிய அவர்களின் முன்னோராகத்தான் இருந்திருக்கிறது என்பது தெளிவாகிறது.

# 6. குலத்தெய்வங்கள்

இனத்தின் உட்பிரிவுதான் குலம்; இதனை வடமொழியில் கோத்திரம் என்று சொல்வர்; ஆங்கிலத்தில் 'Clam' என்று வழங்குவர். ''கோத்திரா'' என்னும் வடமொழிச் சொல் 'Clan' என்று மொழி பெயர்க்கப்பட்டுப் பரவலாக இந்தியாவில் பயன்படுத்தப்படுகிறது (வேலுச்சாமி, ம., 1983 : 140). இந்திய மொழிகளில் இச் சொல்லுக்குச் சரியான பல சொற்கள் வழக்கில் இருக்கத்தான் செய்கின்றன; வம்சா, குலா, கணா, தேவகா, பாலி, வீடு, கும்பு, இன்டி பேரு, கிளை என்று சூ (Hsu) என்பார் கூறுகின்றார் (1963 : 62). மேலே கூறப்பட்ட சொற்கள் அனைத்தும் ஒரு பொருள் குறித்தனவாகும். Clan என்தற்கு, மரபுக்குழு, பங்காளிக் கிளை, குலமரபு என்று பொருள் கூறப்படுகிறது (English Dictio nary, 1975 : 190). கூட்டம் என்றும் சில வகுப்பார் குலத்தைக் குறிக்கின்றனர் (வேலுச்சாமி, ம., 1983 : 140).

ஒரு குடும்பம் பல குடும்பங்களாகப் பிரிந்து போய் அக்குடும் பங்கள் எல்லாம் ஒரே உறவு முறையாகும்போது குலம் ஆகிறது; அதாவது பல பங்காளிகள் உறவு முறையைக் குலம் என்று அழைத்து வருகின்றனர். இதை, 'ஒரு பொது மூதாதையின் மரபு வழியில் தோன்றியதன் மூலம் ஒருவர்க்கொருவர் உறவு கொண் டுள்ள குழுவே குலம் ஆகும்' என்றும் வரைவிலக்கணம் கூறுவர் (The used Book Encyclopaedia, 1980 : 498). முன்னோர் ஒருவரின் மரபு வழியில் வந்த உறவினர்களால் அமைந்த அமைப்பே குலமாகிறது. எனவே ஒருவழி மரபினைக் கொண்டதே குலமாகும். குலத்தின் தெய்வம் குலத் தெய்வமாகும். ஒரு வீட்டிற்குத் தெய்வமாக இருந்தது, பல வீடுகளாக உறவு முறை விரியும்போது குலத் தெய்வமாக மாறுகிறது. பங்காளி முறையினரால் வணங்கப் படும் தெய்வம் குலத் தெய்வம் என்றும் கூறலாம். ஒரு கோயிலை வணங்கும் முறையால் குலம் இனங் காணப்படுகிறது. ஒரு குறிப் பிட்ட கோயிலைக் கும்பிடுபவர்கள் எல்லாம் பங்காளிகளாக இருப்பர். அக்கோயிலைக் கும்பிடுபவர்களுக்குள் மண உறவு முறை செய்யக் கூடாது; வேறு கோயிலை வணங்குபவர்களோடு தான் திருமணம் உறவு கொள்ள வேண்டும். நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் இதைச் சிறப்பாகக் கடைப்பிடித்து வருகிறார்கள். கோயிலை வைத்துத்தான் அவர்கள் உறவுமுறை பிரிக்கப்படுகிறது

குலத் தெய்வக் கோயில்கள் பெரும்பாலும் மாலைத் தெய்வக் கோயிலாகவும், சமாதித் தெய்வக் கோயில்களாகவும் உள்ளன. தங்கள் குடும்பத்தில் வாழ்ந்து தெய்வ நிலைக்கு உயர்ந்த பெரியோர்களை வணங்குவதாகக் குலத் தெய்வங்கள் இருக்கின்றன. இதை முன்னோர் வழிபாட்டின் அடிப்படையில் தோற்றம் பெற்றவையாகக் கொள்ளலாம் என்று ம., வேலுச்சாமி தம் ஆய்வேட்டில் கூறுகின்றார் (1983:141). இம் முறையில் மாலைக் கோயில்களும் குலத் தெய்வக் கோயில்களாகின்றன. இக் குலத் தெய்வக் கோயில்கள் மாலைக் கோயில், பிடிமண் கோயில் என இரண்டு வகைகளில் அமைந்துள்ளன. சமாதிக் கோயில்களும்,பிடிமண்கோயில்கள் என்ற அமைப்பின்கீழும் வருகின்றன. குலத் தெய்வம் பற்றிய பழங்கதையோடு தொடர்பு கொண்ட இடத்தில் 'பழங்கதை' நிகழ்ந்த காலத்தில் தோன்றியதாகக் கருதப்படும் மூலக் கோயில்-மாலைக் கோயில் எனப்படும். அக் கோயிலிலிருந்து பிடிமண் எடுத்து வந்து, அதாவது மண்ணை மஞ்சள் துணியில் கட்டிவந்து கோயில் அமைக்கும் இடத்தில் வைத்துக் கோயில் கட்டுவது பிடிமண் கோயில் ஆகும். விளாத்திகுள வட்டத்திலுள்ள பலவூர்களில் உள்ள வீரநாகம்மாள், வீர சின்னம்மாள், திக்கம்மாள் கோயில்கள் பிடிமண் கோயில்களாகும். குலத் தெய்வக் கோயில்கள் அனைத்திலும் அக் குலத்தைச் சேர்ந்தவர்களே பூசாரிகளாக உள்ளனர். பிற குலத்தை-இனத்தைச் சேர்ந்தவர்கள் குலத் தெய்வக் கோயில்களில் பூசாரிகளாக இருப்பதில்லை.

மக்களோடு இருந்து வாழ்ந்தவர்கள் தெய்வநிலைக்கு உயர்ந்து குலத் தெய்வங்களாகிறார்கள். இதுதான் திராவிட இனத்தின் பொதுவான குலத்தெய்வ முறை. இம்முறையில் பார்க்கும்போது இதில் விதிவிலக்கு உண்டா? அல்லது இடைச் செருகல் ஏற்பட்டிருக்குமா என்று சில சமயங்களில் சில குலத்தாரின் குலத் தெய்வங்களைப் பார்க்கும்போது தெரிகிறது.

கருப்பசாமி, அய்யனார், முனியசாமி, மாடசாமி,காளியம்மாள், மாரியம்மாள் ஆகிய தெய்வங்களும் குலத் தெய்வங்களாகின்றன. இத் தெய்வங்களும் ஒரு காலக் கட்டத்தில் மக்களோடு வாழ்ந்து மடிந்தவர்களாக இருக்க வேண்டும். ஒரு இடத்தில் ஒரு ஊரில் தான் அத்தெய்வங்களுக்குக் கோயில் இருந்திருக்க வேண்டும். நாள் ஆக ஆக அங்குள்ள மக்கள் வேறு இடங்களுக்கு இடம் பெயரும்போது, தாங்கள் வணங்கி வந்த குலத் தெய்வங்களைத் தங்கள் ஊரிலேயே வணங்க ஆசை கொண்டு பிடிமண் எடுத்து

வந்து கோயில் ஆக்கியிருக்க வேண்டும். இம்முறையேதான், மாடசாமி, கருப்பசாமி, அய்யனார், முனியசாமி, காளியம்மாள், மாரியம்மாள் போன்ற தெய்வங்கள் இருந்திருக்க வேண்டும். இன்றும் மாடசாமி தேவர் இனத்தைச் சேர்ந்தோர் பலருக்குக் குலத் தெய்வமாக இருக்கிறார்; கருப்பசாமி, பள்ளர் வகுப்பாரின் குலத் தெய்வமாக இருக்கிறார். நாகலாபுரத்தில் உள்ள வன்னிக் குளம் கருப்பசாமி நாயுடு வகுப்பாருக்குக் குலத் தெய்வமாக இருக் கிறது. ஒரு கோயில் பல சாதியைச் சேர்ந்தோர்க்குக் குலத் தெய்வ மாக இருந்திருக்க முடியாது. கருப்பசாமி என்ற பெயர் பல வகுப் பாரிடையே இருந்து வருகிறது. அந்தந்த இனத்தைச் சேர்ந்த குலத்தாருக்குக் குலத் தெய்வமாக இருந்தது. நாளடைவில் பெயர்க் குழப்பத்தால்-வேறுபடுத்திக் காட்ட இயலாத நிலையில், நாயுடு வின் குலத் தெய்வமான கருப்பசாமியும் பள்ளரின் தெய்வமான கருப்பசாமியும், தேவரின் தெய்வமான கருப்பசாமியும் இணைந்து ஒரே கருப்பசாமி ஆகியிருக்கலாம். பல இனத்தார் சேர்ந்து வாழும் ஊரில் முதலில் பள்ளர் சாமியாக கருப்பசாமி இருந்திருக்கும்; தங்கள் இன முன்னோரான இன்னொரு கருப்பசாமியைக் குலத் தெய்வமாகக் கொண்டவர்கள் அவ்வூரில் குடியேறி வாழும்போது அந்தக் கருப்பசாமியையே குலத் தெய்வமாகக் கொண்டிருக்கலாம். ஆனால் அதற்கு மூலக் கோயில் வேறு ஊரில் இருந்திருக்க வேண்டும். இவ்வாறு குழப்பமேற்பட்ட கருப்பசாமி எல்லா சாதியைச் சேர்ந்தவர்களும் குலத் தெய்வமாகக் கொள்ளும்படியான தெய்வமாகிவிட்டார் என்பது பொருத்தமாக இருக்கிறது. இதைப் போன்றே, மாரியம்மாள், காளியம்மாள், முனியசாமி, மாடசாமி, பல இனத்தைச் சேர்ந்த மக்களுக்குக் குலத் தெய்வங்களாகவிருக்க வேண்டும். இது முடிந்த முடிவல்ல; ஒரு கருத்துத்தான்; மேலும் ஆய்வு நடத்த வேண்டிய தொன்றாகும்.

### பெத்தனாட்சியம்மன்

சூரங்குடியிலிருந்து வைப்பாறு செல்லும் சாலையில் மேல் மாந்தை ஊர் உள்ளது. இவ்வூரில் உள்ள கோயில்தான் பெத்த னாட்சியம்மன் கோவில் ஆகும். சூரங்குடியிலும் பெத்தனாட்சியம் மன் கோயில் உள்ளது. அங்குள்ள கோயில் சிலை ஐம்பொன்னால் ஆனது. அதை இரண்டாண்டுகளுக்கு முன் திருடிக்கொண்டு போய் விட்டார்கள். மேல் மாந்தையிலுள்ள பெத்தனாட்சியம்மன் கோவி வில் கல்சிலை உள்ளது. இக்கல்சிலையின் வயிற்றுக்கு மேலுள்ள பாகம் உடைத்து எடுக்கப்பட்டுள்ளது. கோயிலின் பக்கத்தில் கருங் கல் சிதைந்து கிடக்கிறது. இதைத்தான் சிலையின் சிதைந்த பாகம்

என்று கூறுகிறார்கள். நவாப் படையெடுப்பின்போது இந்துக் கோயில்களை அழிக்கையில் இச்சிலையையும் உடைத்துச் சிதைத்து விட்டார்கள் என்று அவ்வூர் மக்கள் சொல்லுகிறார்கள் (இராமசாமி, பெ., 10-9-1984). கோயிலின் கற்பக்கிருகத்தில் உள்ள சிலையின் மேற்பாகம் மெழுகால் வடிவமைத்துப் பொருத்தியிருக்கிறார்கள். இக்கோயில் ஊருக்கு வெளியே சாலையின் பக்கத்தே இருக்கிறது. இக்கோயில் மேல்மாந்தைக் கிராமத்திற்குப் பாத்தியப்பட்டது. மேல்மாந்தையில் ஜமீன் இருந்திருக்கிறது. கம்பளத்து நாயக்கர் வம்சத்தினர் ஆண்டு வந்திருக்கிறார்கள். இன்றும் அப் பரம்பரை யினர் இருக்கிறார்கள். ஜமீன்தார்தான் ஊர்ப் பெரிய தனக்காரர் ஆவர். அவர் முன்னிலையில்தான் கோயில் கொடை, பொங்கல் எல்லாம் நடைபெறுகின்றன.

மேல்மாந்தை பெத்தனாட்சியம்மன் கோவில் பெரும்பாலான நாடார் இனத்தாருக்குக் குலதெய்வமாக உள்ளது. முன்பெல்லாம் அவர்கள் கோவில் பொங்கல் வைபவத்தை முன்னின்று சிறப்பாக நடத்தியிருக்கிறார்கள்; ஆனால் ஊரோடு இணைந்துதான் நடத்தி யிருக்கிறார்கள்; பெரும்பகுதி பொருட்செலவை நாடார் இனத்தார் ஏற்றுக் கொண்டிருந்திருக்கிறார்கள். இப்போது இக்கோயில் வளா கத்தில் இரண்டு பெத்தனாட்சியம்மன் கோயில்கள் இருக்கின்றன. கோயில் சிலை சிதைந்திருந்ததால், நாடார் சமூகத்திலிருந்து பணம் வசூல் செய்து பெரும் பொருட் செலவில் புதியகற்சிலை செய்துவந்து பிரதிஷ்டை செய்யத் தொடங்கினர். பழைய சிலையை எடுத்து அருகிலுள்ள இடத்தில் வைத்துவிட்டனர். புதிய சிலையைக் கோயிலின் உள்ளே வைத்துப் பிரதிஷ்டை செய்யும்போது மேல்மாந் தைக்கிராமத்திலுள்ள ஆமீனா என்ற முஸ்லீம் பெண்ணிற்கு சாமி வந்திருக்கிறது. புதிய சிலை வைக்கக் கூடாது. தனக்குப் பழைய சிலையே இருக்க வேண்டுமென்று அருள்வாக்கில் சாமி சொன்னது. இதை எப்படி நம்புவது என்று மக்கள் கேட்டனர்; உடனே ஐந்து மச்சம் வைத்துப் பார்த்து விடுவோம் என்று சொன்னார்கள். மச்சம் என்றால் வார்த்தை என்று பொருள். அதாவது சாமிக்கு உகந்த வேப்ப இலை, மஞ்சள், பருத்தி விதை, கொட்டமுத்து, சூடம் ஆகிய ஐந்தையும் மறைத்து வைத்து சாமியாடியிடம் இது என்ன என்று கேட்டார்கள். அதற்கு ஆமீனா சரியாகப் பதில் சொல்லவே, மக்கள் சாமி வாக்குத்தான் என்று ஏற்றுக் கொண்டார் கள். தாயே நாங்கள் சென்று சிலையை எடுக்கமுடியாது; நீதான் சென்று புதிய சிலையை அப்புறப்படுத்த வேண்டும் என்று பணிந்து கேட்டனர். உடனே மக்கள் கூட்டம் பின்தொடர சாமி வந்த

ஆமீனா மேளதாளத்துடன் கடப்பாறைக் கம்பியுடன் கோயிலுக்குச் சென்று புதிய சிலையைப் பெயர்த்து எடுத்துவிட்டாள். பின் பழைய சிலை முன்போலவே. வைக்கப்பட்டது. இதனால் மனம் மாறுபாடு கொண்ட நாடார்கள் நாங்கள் கொண்டு வந்த சிலையை என் செய்வது என யோசித்தனர்; பின் ஒரு முடிவு எடுத்தனர். பழைய கோயிலின் அருகே இடம் வாங்கிப் புதிய சிலையை வைத்துப் புதிய கோயிலைக் கட்டினர். பழைய கோயிலைவிடச் சிறப்பாக அமைத்துள்ளனர். பெரியாண்டவர்க்கும் அருகிலேயே கோயில் அமைத்துள்ளனர். பெரியாண்டவரும் நாடார்களின் குலத் தெய்வம்தான். சமீப காலத்தில் கோயிலின் வளாகத்தின் முகப்பில் தோரண வாயிலை ஊர் மக்கள் கட்ட முயன்றபோது நாடார் இனத்தார் தடை கொடுத்தனர். கலவரம் மூளும் நிலையில் காவல்துறை அதிகாரிகள் தூத்துக்குடியிலிருந்து வந்து அதைத் தடுத்து நிறுத்தினர். இப்போது தோரண வாயில் கட்டப்பட்டிருக்கிறது. மேல் மாந்தைக் கிராமத்திற்குப் பாத்தியப்பட்ட பெத்தனாட்சியம்மன் கோயில் என்று எழுதி வைத்திருக்கிறார்கள் (சுந்தரம், ஆர்., 10-9-1984).

இப்போது வெள்ளி செவ்வாய்க்கிழமைகளில் குலத்தெய்வத்தை வணங்குவதற்காக வெளியூரிலிருந்து நாடார்கள் வருகிறார்கள். கடா வெட்டிப் பொங்கல் வைத்து வழிபடுகிறார்கள். எல்லாச் சிறப்பையும் புதிய கோயிலிலேயே நடத்துகிறார்கள். ஊருக்குப் புறப்படும்போது பழைய மரபில் ஊறிய அன்பர்கள் பழைய கோயிலுக்கு வந்து தேங்காய் பழம் வைத்து வழிபட்டுச் செல்கிறார்கள். புதிய கோயிலுக்கு நாடார் இனத்தைச் சேர்ந்தவர் பூசாரியாக உள்ளார். பழைய கோயிலுக்குப் பரம்பரை பரம்பரையாக பண்டாரம் என்று சொல்லப்படும் புலவர் இனத்தார் பூசாரியாக உள்ளனர். இப்போது பூசாரிகள் 4 பங்காளிகளாக உள்ளனர். ச. சுந்தரம் என்பவர்தான் இப்போது பழைய கோவிலுக்குப் பூசாரியாக இருப்பவர்.

இக்கோயில் தெய்வம் ஊர்த் தெய்வமாகவும் இருப்பதால் குலத்தெய்வ வழிபாட்டை மட்டும் இங்குக் காண்போம். அதாவது நாடார்கள் வணங்கும் முறை மட்டும் காண்போம். ஆவணி மாதம் செவ்வாய்க்கிழமை யன்று வெளியூரிலிருந்து நாடார்கள் அனைவரும் வந்து கூடுகிறார்கள். எல்லோரும் தலைக்கட்டு வரி செலுத்துகிறார்கள். பொதுப் பொங்கல் வைக்கிறார்கள். பின் கிடா வெட்டு நடக்கிறது அதன்பின் பூசை நடக்கிறது. பின் எல்லோருக்கும் உணவு கொடுக்கப்படுகிறது; அங்கேயே இருந்து சாப்பிடுகிறார்கள். மொட்டை போட்டு, குழந்தைகளுக்குப் பெயர் சூட்டு

கிறார்கள். நேர்த்திக் கடனாக அக்னிச் சட்டி எடுக்கிறார்கள்; நேர்த்திக் கடனாகப் பலியும் கொடுக்கிறார்கள்.

மாசி மாதத்தில் பூக்குழி இறங்கும் விழா நடத்தப்படுகிறது. ஆவணி மாதம் போன்றே எல்லோரும் வந்திருந்து பூக்குழி இறங்கி வழிபாடு நடத்துகிறார்கள். தவழும் பிள்ளையை மண்ணுருவில் செய்து நேர்த்திக் கடனாகக் கொண்டுவந்து கோயிலில் வைக்கிறார்கள். இப்போதெல்லாம் நாடார்கள் பெத்தனாட்சியம்மனுக்குத் தனியாகவே விழா நடத்துகிறார்கள். சொந்த செலவில் நடத்துகிறார்கள். ஊர் மக்களுக்கும் அவர்களுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. நாடார்களை அவ்வூர் மக்கள் பகையாளி போன்றே எண்ணுகிறார்கள்.

**மாலைத் தெய்வங்கள்**

ஏற்கெனவே விளாத்திகுள வட்டத்திலுள்ள மாலைக் கோயில்களைப் பற்றி, 'மாலைத் தெய்வங்கள்' என்ற பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. அம்மாலைத் தெய்வங்கள் அனைத்தும் அப்பகுதியிலுள்ள வேறுபட்ட இனத்தைச் சேர்ந்த மக்களின் குலத் தெய்வங்களாகவும் இருக்கின்றன. மாலைத் தெய்வங்களுக்குரிய வழிபாடுதான் குலத் தெய்வங்களுக்கும் நடக்கிறது. ஆகவே அவற்றை இங்கு விளக்கத் தேவை இல்லை.

இம்மாலைத் தெய்வங்களைக் குலத் தெய்வமாகக் கொண்டாடுபவர்கள் தங்கள் குழந்தைகளுக்கு முதல் மொட்டை இங்கு எடுக்கிறார்கள்; காது குத்தி, பெயர் விடுகிறார்கள். வேறு சிறப்பான வழிபாடு ஏதுமில்லை.

**சமாதித் தெய்வங்கள்**

மாலைத் தெய்வங்கள் குலத்தெய்வங்களாவது போலவே சமாதித் தெய்வங்களும் குலத்தெய்வங்களாகின்றன. வழிபாட்டு முறைகள் எல்லாம் முன்பு சொல்லியவை போன்றே நடத்தப்படுகின்றன. மொட்டை அடித்தல், காது குத்தல், பெயர் விடுதல் ஆகிய எல்லாம் நடக்கின்றன. தங்கள் வயல்களில் முதன்முறையாக விதைக்கும்போது குலத் தெய்வத்தை வணங்கியே விதை எடுத்து விதைக்கிறார்கள். குடும்பத்தில் எது நடந்தாலும் குலத் தெய்வத்தை வணங்கியே செய்கிறார்கள்; ஆகவே குலத் தெய்வங்கள் வீட்டிலுள்ள பெரியவர்கள் போன்று முன்னிலைப்படுத்தப் படுகிறார்கள்.

## பெருமாள்

நாகலாபுரத்திற்குக் கிழக்கே 4 கிலோமீட்டர் தொலைவில் உள்ள ஊர் மேலக்கல்லூரணி; இங்கு அனுப்பக் கவுண்டர்கள்தான் வாழ்கிறார்கள்; ஓரிரு வீடுகள் செட்டியார், பிள்ளை, ஆசாரி வீடு களாக இருக்கின்றன. அனுப்பக் கவுண்டரில் சூரியவான் என்ற கிளை இருக்கிறது. இவர்களுக்குக் கோவில்பட்டிக்கு மேற்கே திருநெல்வேலிச் சாலையில் உள்ள நாலாட்டின் புத்தூரிலுள்ள கரியமால் அழகு என்ற தெய்வம் குலத் தெய்வமாகும். இக்கவுண் டர் இனத்தில் கரியமலை என்ற பெயர் பொதுவாக இடப்படுகிறது. இக்கரியமால் அழகைத் தங்கள் ஊரிலும் கோயில் கொள்ளச் செய்ய வேண்டும் என்பதற்காக பிடிமண் கொண்டு வந்து மாலை யம்மன் கோயிலுக்கு வடக்கே வைத்திருக்கிறார்கள். அங்கு சிலையோ, பீடமோ இல்லை. வெறுமனே தான் காட்சியளிக் கிறது. ஒரு ஆவரச் செடிதான் அடையாளம்; நாலாட்டின் புத்தூர் இறைவனைப் பெருமாள் என்கிறார்கள்; ஆகவே மேலக்கல்லூரணி யிலிருக்கும் கோயிலையும் பெருமாள் கோயில் என்றே அழைக் கிறார்கள். இக்கோயிலில் பொங்கல் விழா ஒன்றும் நடத்துவது இல்லை. நல்ல காரியங்கள் நடக்கும்போது, அத் தெய்வத்தை சூரியவான் கிளையைச் சார்ந்தவர்கள் மட்டும் வணங்குகிறார்கள்; இங்கு பெருமாள்சாமி என்று சொல்லப்படுவது பெருநெறி மரபைச் சேர்ந்த வைணவக் கடவுளாகிய விஷ்ணு அல்ல. ஆனால் நாளடை வில் குலத் தெய்வமாகிய பெருமாள்-கரியமாலழகு, வைணவக் கடவுளாக்கப்பட்டிருக்கிறார் என்று தெரிகிறது.

நாலாட்டின் புத்தூரிலும் அதையடுத்த இடைசெவல், வில்லி சேரி, ஊத்துப்பட்டி, கழுகுமலைப் பகுதிகளில் அனுப்பக் கவுண்டர் கள் வாழ்கிறார்கள். இவர்களின் குலத்தொழில் முக்கியமாக ஆடு மாடு வளர்த்தல், விவசாயம் செய்வதேயாகும். இன்றும் நாலாட் டின் புத்தூரில் கவுண்டர்கள் இருக்கிறார்கள். சமீப காலம் வரை பரம்பரை பரம்பரையாக அக் கோயிலுக்கு கவுண்டர்களே பூசாரி களாக இருந்து வந்திருக்கிறார்கள். ஒரு வருடமாக, அப் பரம்பரை இனத்தாரை நீக்கிவிட்டு , ஊரார் ஐயரைப் பூசாரியாக நியமித்துள் ளனர். இது ஒரு குலத் தெய்வக் கோயில். அதுவும் குலத்தெய் வக் கோயிலின் மரபுப்படி கவுண்டர்களே பூசாரிகளாக இருந்திருக் கிறார்கள். ஆகவே இது கவுண்டர்களுக்குப் பாத்தியப்பட்ட கோயிலாகத்தான் இருந்திருக்க வேண்டும். அவ்வூரில் இப்போது கம்மவார் நாயக்கர் இனத்தார் செருக்கோடு இருக்கிறார்கள்.

கோனார் இனத்தாரும் இருக்கிறார்கள். இப்போது அக்கோயில் ஊர்ப் பொதுக் கோயிலாகத்தான் இருக்கிறது; இப்போது இக் கோயில் வைணவப் பெருநெறிக் கோவிலாக ஆக்கப்பட்டிருக்கிற தாகப் படுகிறது. ஆரம்பத்தில் கவுண்டர்களின் குலத் தெய்வக் கோயிலாக இருந்து, பின் கோனார் நாயக்கர்கள் அவ்வூரில் வசித்த தால் அவர்களின் ஆதிக்கத்தால் குலத் தெய்வக் கோயில் கண்ணன் அவதாரக் கோயிலாக ஆக்கப்பட்டிருக்க வேண்டும்; கோனார் நாயக்கர் ஆகியோர் கண்ணப் பெருமானை வழிபடக் கூடியவர்கள்; ஆகவே இக் கருதுகோளுக்கு இடமளிக்கிறது.

காட்டுப் பகுதியாகத்தான் நாலாட்டின்புத்தூர் இருந்திருக் கிறது. புதரில் புற்று ஒன்று இருந்திருக்கிறது. அப்பகுதியில் மேய்ந்து கொண்டு வரும் ஆடுகளுக்குப் பால் இருப்பதில்லை; குட்டிக்குப் பால் கொடுப்பதில்லை ; பெரும் சோதனையாக இருந் தது. பால் ஆடுகள் புற்றுக்குச் சென்று பால் கொடுத்துவிட்டு வந்து விடுமாம். ஒருநாள் இதை எப்படியும் காணவேண்டும் என்று ஆட்டுக்காரர் விழிப்போடு இருந்தார். வழக்கம்போல் மேயும் ஆடுகள் புற்றுக்குச் சென்று பாலைச் சுரந்துவிட்டு வந்தன. கண்ட வர்க்குப் பயம் ஏற்பட்டது. ஊரில் வந்து சொன்னார்; பின் அங்கு கோயில்கட்டினார்கள்; புற்றை மையமாகவைத்துக் கட்டியிருக்கி றார்கள்; இன்றும் புற்றுதான் சிலைபோன்று இருக்கிறது. புற்று வளர்ந்துகொண்டு வருவதாகக் கூறுகிறார்கள். ஊருக்கு நாலாட் டின் புத்தூர் என்று பெயர் ஏற்பட்டது (துளசிராமு, வெ., 3-10-1984).

இதே கதைபோன்றுதான் காப்பிலியக் கவுண்டர் குலத் தெய் வத்திற்கும் இருக்கிறது. சிறுமலைக் கருகில் ஒன்னப்பக் கவுண்டர் தினை விதைத்திருந்தார்; அங்கு புற்று ஒன்று இருந்தது. அதன்ரு கில் பூசணிக்கொடி ஒன்று படர்ந்து. அக்கொடியில் பூசணிக்காய் மட்டும் காய்த்தது. அப்பூசணிக்காய் ஒருநாள் வெடிக்கவே, அதனுள்ளிருந்து மல்லையசாமி தோன்றினார். அங்கு மேய்ந்து கொண்டிருந்த ஈனாத வெள்ளாடு ஒன்று அவருக்கு நிதமும் பால் கொடுத்து வந்தது. இதனை ஆடு மேய்ப்பவன் ஒருநாள் கண்டு, ஒன்னப்பக் கவுண்டரிடம் கூற அவர் தனது குலத்தாருடன் மல்லையசாமியைக் கண்டு வணங்கித் தமது குலத்தெய்வமாக ஏற்றுக் கொண்டார். மல்லையசாமி சிறுமலையிலுள்ள குகை ஒன்றைத் தமது இருப்பிடமாகக் கொண்டார் (வேலுச்சாமி, ம., 1983:189).

கன்னடம் பேசக்கூடிய இக்காப்பிலியக் கவுண்டர் குலத் தெய்வக் கதையும், கன்னடம் பேசக்கூடிய அனுப்பக் கவுண்டர் கதையும் ஒன்றுபோல இருக்கிறது. ஆகவே இடைச் செருகலாகக் கரியமாலழகு, கண்ணன் அவதாரமாக்கப்பட்டிருக்க வேண்டும். இதற்கு ஆதாரமாக இன்னொன்றையும் கூறலாம்.

காப்பிலியக் கவுண்டரில் ஹாரப்பித்தர் குலம் என்று ஒரு பிரிவு இருக்கிறது. இவர்களுக்கு பெருமாள் சாமி குலத் தெய்வமாகும். இது குஞ்சனம்பட்டி கிராமத்தின் தெற்கு எல்லையில் இருக்கிறது. இஃதோர் மாலைக் கோயிலாகும். எனவே இதனைப் பெருமாள் மாலை என்பர். கோவில் சிறிய கோபுரத்தினையும் சுற்றுச் சுவரினையும் கொண்டது. கோவிலினுள் பெருமாளின் படிமம் அமைந்துள்ளது. படிமம் சிறிய கல்லில் அமைக்கப்பட்டுள்ளது. குழலூதும் கண்ணனின் வடிவமே அது. அதனைப் பெருமாள் அல்லது பெருமாள்சாமி என்று கூறுகின்றனர்.

இன்றுள்ள இக்கோயில் 1959-ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. அதன் முன்னர் அவ்விடத்தில் கட்டடம் எதுவுமில்லை. பெரிய வேப்பமரத்தின் அடியில் சிறிய கல் ஒன்று நடப்பட்டு அதுவே பெருமாளாக வணங்கப்பட்டு வந்தது. பெருமாளுக்கு முன் தூண் வடிவிலான கல்லொன்று நடப்பட்டிருந்தது. அது இன்றும் உள்ளது. அதனைக் கம்பம் என்பர் (வேலுச்சாமி, ம., 1983:169).

இங்குள்ள பகுதியில் சொல்லப்பட்ட பெருமாள்சாமி மாலைக் கோயில் என்று சொல்லப்படுகிறது. பழைய கோயிலின் அமைப்புத் தான் உண்மையான பெருமாள் சாமியாக-குலத் தெய்வமாக-குலத்தின் முன்னோராக இருந்திருக்க வேண்டும். பெருநெறி செல்வாக்கால் இக்கோயில் கண்ணன் கோயிலாக ஆக்கப்பட்டிருக்கிறது; கோயிலின் முன் உள்ள தூண் கம்பம் இல்லை. பலியிடுவதற்கு திராவிடத் தெய்வக் கோயில்களில் இருக்கும் அடையாள இடமாகும். இச் செய்திகளை ஆதாரமாக்கிக் கொண்டு பார்த்தோமானால் கரியமால் அழகுக் கோயிலும் கண்ணன் கோயிலாக இருக்க முடியாது. அது ஒரு குலத்தின் முன்னோர் தெய்வமாகி மறைந்து, குலத் தெய்வமானதாகத் தான் படுகிறது. இதுவும் ஆய்வுக்குட்பட்ட செய்தியாகும். மேலும் ஆராயப்படவேண்டியதுமாகும்.

இவற்றிலிருந்து, குலத்தெய்வ வழிபாடு, குலத்தின் முன்னோர் வழிபாடே என்பது பெறப்படுகிறது. கருப்பசாமி, மாடசாமி, காளியம்மாள், மாரியம்மாள் போன்ற தெய்வங்கள் குலத்தெய்வங்களாக இருப்பதைக் கொண்டு இவைகளும் ஒரு காலக் கட்டத்தில் அம்மனிதர்களோடு வாழ்ந்து மடிந்தவர்கள் என்றும், முன்னோர் வழிபாட்டின்படி, இவைகளும் தெய்வங்களாயின என்றும் கொள்வதே சிறப்பாகும்.

# 7. மாலைத் தெய்வங்கள்

களஆய்விற்குச் சென்றபோது சோலைமலையன்பட்டி பெ. இராஜாராம் என்னும் பிரமுகரை ஆய்வாளர் சந்தித்தார். இவர் நாட்டுப்புறப் பந்தயமாகிய மாட்டுவண்டி என்னும் 'ரேக்களா' வண்டி பந்தயம் நடத்துவதில் வல்லவர்; மாட்டு வண்டிப் பந்தயம் நடக்கும் இடங்களிலெல்லாம் இவர் இருப்பார். இவரிடம் உங்கள் ஊருக்கும் திராவிடத் தெய்வங்கள் பற்றிய களப்பணிக்கு ஒருநாள் வரவேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தார், ஆய்வாளர். அதற்கு அவர் சோலைமலையன்பட்டியைப் பற்றிச் சொல்லிவிட்டு அருகில் இருந்த நண்பர் ஊரைப் பற்றிச் சொல்லும்போது அங்கு என்ன இருக்கிறது; ஒரு மாலைக்கோயில்தான் இருக்கிறது என்றார். மாலைக்கோயிலுக்கு விளக்கம் கேட்கும்போது சொன்னார். பூக்குழியில் இறங்கி தெய்வமானவர்களை மாலைத் தெய்வம் என்று கூறுவது பழக்கம். இந்தப் பக்கம் இக்கோயில்கள் மிகுதியாக இருக்கின்றன என்றார். பின் களப்பணியில் செய்தி சேகரிக்கும்போது இத்தகைய கோயில் தெய்வங்களைச் சேர்த்து வகைப்படுத்தப்பட்டது. அவற்றிலிருந்து, நல்லவர்களாயிருந்து, பூக்குழி என்று சொல்லப்படும் நெருப்பில் பாய்ந்து உயிரைப் போக்கித் தெய்வமாகும் பெண்களே மாலைத் தெய்வங்கள் என்பது பெறப்பட்டது. இதனைப் போன்றுதான், ஆந்திரா நாட்டில் பெறந்தாளு வழிபாடு நடப்பதாக டபிள்யூ. டி. எல்மோர் தம் நூலில் கூறுகிறார் (1984:27).

கணவன் இருக்க மனைவி இறந்து தெய்வமாவதுதான் பெறந்தாளு ஆகும். தாலிப் பாக்கியத்தோடு இறக்கும் மகளிரைப் பற்றியது; மக்களைப் பெற்று, மதிக்கத்தக்கவாறு வாழ்ந்து கணவனுக்கு முன் இறக்கும் மகளிர்தான் பெறந்தாளு என்று சொல்லப்படுகின்றனர். இக்கோயில்களில் பல இடங்களில் மிருகப் பலி நடக்கிறது. ஆனால் தமிழ்நாட்டில் எந்த இடத்திலும் மாலைத் தெய்வத்திற்குப் பலி கொடுப்பதில்லை.

**வீரவை, சின்னுவையம்மாள்**

நாகலாபுரத்திற்கருகில் உள்ள மேலக்கல்லூரணி என்ற கிராமத்தில் மாலையம்மன் கோயில் இருக்கிறது. இந்தக் கோயி

யிலுள்ள தெய்வத்திற்குப் பெயர், வீரவை சின்னுவையம்மாள் ஆகும். இது அக்காள், தங்கை ஆகிய இரு தெய்வங்கள்; வீரவை அக்காள், சின்னுவை தங்கை.

இப்போது மேலக்கல்லூரணி இருக்கும் இடம் இருநூறு ஆண்டு களுக்கு முன் காடாக இருந்தது. அப்போது இந்த வீரவை, சின்னுவை என்ற சகோதரிகள் தங்கள் தாய் மாமனுக்குக் கஞ்சி கொண்டு வந்தார்கள்; அவர் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தார். நாகலாபுரத்தருகில் உள்ள கவுண்டன்பட்டிதான் அவர் ஊர். அதற்கும் மேலக்கல்லூரணிக்கும் 5 கி. மீ. தூரம் இருக்கும். கவுண்டர் இனத்தைச் சேர்ந்தவர். இப்போது கோயில் இருக்கும் இடத்துக்கருகில் இரு சகோதரிகள் வந்தபோது பாம்பு ஒன்று அவ் வழியே சென்றது. புதராக இருந்ததால் இவர்களுக்குத் தெரிய வில்லை. ஆகவே சகோதரிகளில் ஒருத்தி அதன் தலைமீது மிதித்து விட்டாள். அடுத்தவளும் அதன் அருகில்தான் இருந்தாள். ஆகவே பாம்பு அவர்கள் இருவர் கால்களையும் சுற்றிக்கொண்டது. அவர்களுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை; நேரம் ஆகிக் கொண்டே இருந்தது. மாமாவும் கஞ்சி இன்னும் கொண்டு வர வில்லையே என்று வருத்தப்பட்டு அங்குமிங்கும் பார்த்தார். இவர்கள் நிற்பதைக் கண்டு குரல் கொடுத்தார். அவர்கள் வாய் பேசாது நிற்பதைக் கண்டு அங்கு ஓடி வந்தார். கால்களைச் சுற்றிய பாம்பை ஆடு மேய்ப்பதற்காக வைத்திருந்த அரிவாளால் அறுத்து அறுத்துப் போட்டார். தலைதான் எஞ்சியிருந்தது. அவர்களைக் குதிக்கச் சொன்னார். அவர்களும் குதித்தார்கள். பாம்பின் தலை எகிறி மாமாவைக் கொத்தியது. அவர் அந்த இடத்திலேயே இறந்தார். சகோதரிகளுக்கு என்ன செய்வ தென்றே தெரியவில்லை, அவருக்குத்தான் இருவரையும் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்று நிச்சயம் ஆகியிருந்தது. ஆகவே இரு சகோதரிகளும் பூக்குழியில் பாய்ந்து உயிரை விட்டார்கள்; தெய்வமானார்கள் (சீனியம்மாள், து., 3.10.1984).

இன்று மேலக்கல்லூரணியில் கவுண்டர் இனத்தார் தான் வாழ் கிறார்கள்; இப்பெண்கள் அனுப்பக் கவுண்டரில் எகடவான் பிரிவை—கிளையைச் சேர்ந்தவர்கள். கவுண்டன்பட்டியில் அவர்கள் வழிமுறையினர் இன்றும் ஒத்தை வீட்டுக்காரராக வாழ்கின் றார்கள். ஆகவே இக்கோயில் எகடவான் கிளையினருக்குக் குலத் தெய்வக் கோயிலாகவும் இருக்கிறது.

வைகாசி மாதம் விசாக நட்சத்திரத்தில் இக்கோயிலில் குரு பூசை நடக்கும். அதாவது—அடங்கிய—சமாதியான—பூக்குழியிறங்கி தெய்வமானவர்களுக்குக் குருபூசை கொடுப்பது வழக்கம். அன்று காலையில் வீடு வீதம் அரிசி பருப்பு கொடுப்பார்கள்; வீட்டிற்கு இவ்வளவு என்று கணக்கு வைப்பார்கள்; பின் ஏர்க்கு இவ்வளவு என்று கணக்கு. அதாவது ஒரு ஜோடி உழவு மாடு வீதம் கணக்கு வைத்து அரிசி பருப்பு வாங்குவார்கள். ஏக்கரா வீதம் வரி வசூலிப்பார்கள். இவ்வாறு வசூல் செய்தபின்தான் குருபூசை நடைபெறும். வெளியூரில் இருக்கும் அவ்வூர்க்காரர்களும் வரியைக் கொடுப்பார்கள்; அல்லது அனுப்பி வைப்பார்கள். ஊர்க்கட்டுக்கு அடங்கி நடப்பதற்காகத்தான் இவ்வாறு செய்கிறார்கள்.

இப்போது கோயில் உள்ள இடத்தில்தான் பழைய கோயில் இருந்தது. அப்போது கூரை வேயப்பட்ட இடத்தில் சிலையில்லாது வைத்திருந்தார்கள். எண்பது ஆண்டுகளுக்கு முன்தான் காரைச் சுவர் கட்டி இப்போதுள்ள கோயிலைக் கட்டினார்கள் (தொட்டராயன், தொ., 3-10-1984). இப்போது இரண்டு கற்சிலைகள் மனித உருவில் இருக்கின்றன. இதற்கு அபிஷேகம் எல்லாம் நடத்துகிறார்கள்; இதை இக்கால இந்துச்சமய நெறியால் ஏற்பட்டத் தாக்கமாகக் கொள்ளலாம். சிலைக்கு மலர்களால் அலங்காரம் பண்ணுகிறார்கள். சிற்றாடை என்று சொல்லப்படும் துணியை-அதாவது மஞ்சள் துணியைச் சிலைக்கு அணிவிக்கிறார்கள். கோயில் ஊரின் கண்மாய்க் கரையின் கீழ்ப்பகுதியில் கிழக்கு நோக்கி உள்ளது. கோயிலில் எந்தவித துணைத் தெய்வங்களும் இல்லை. மாலைத் தெய்வக் கோயில்களில் துணைத் தெய்வங்கள் எங்கும் இல்லை என்பது குறிப்பிடத் தக்க அம்சம்.

பொங்கல் தொடங்கும் விதம்; ஒரு வாரத்திற்கு முன் ஊர்க் கூட்டம் போட்டுத் தீர்மானிக்கப்படுகிறது. அதன்பின் பொங்கல் பற்றிய அறிவிப்பு ஊரில் சக்கிலியன் ஒருவனால் சாட்டப்படுகிறது. இதுதான் பொங்கல் சாட்டாகும். வைகாசி மாதத்தில் வரும் விசாக நட்சத்திரத்தில் குரு பூசை (இக்கோயில் பொங்கலுக்குக் குருபூசை என்றுதான் சொல்லுகிறார்கள்) கொண்டாடப்படுகிறது. கோயிலின் முன்னும் ஊரின் நடுவிலும் 'கொட்டகை' என்று அழைக்கப்பெறும் பந்தல் போடப்படுகிறது. பந்தல் என்றால் இப்பகுதியில் இழவு வீட்டின் முன் போடுவதற்குப் பெயர் ஆகும். ஆகவே திருமணம் போன்ற நல்ல காரியங்களுக்குப் போடப்படுவதைக் கொட்டகை என்றே அழைக்கின்றனர். இக்கொட்டகை குருபூசைக்கு முதல் நாள் மாலையில் போடப்படுகிறது.

மறுநாள் அரிசி பருப்பு சேகரிக்கப்படுகிறது. ஊரின் பொது மடத்தில் வைத்து ஊர்ப் பெரியவர்கள், இதை வாங்குவார்கள் அம்பலக்காரர், மானியக்காரர், எல்லைக்காரர், [1] இம்மூன்று நபர்களும் அவர்களுக்குத் துணைபோகக் கூடிய பெரியவர்களும் சேர்ந்து இருந்து அரிசி பருப்பு வாங்குவார்கள். பின், வாங்கி வந்திருந்த மளிகைச் சாமான்கள், காய்கறிகளை எல்லாம் எடுத்துக் கொண்டு கோயிலுக்கு வருவர். இதைச் சடங்கு போலச் செய்வதில்லை. புதுப்பானைகளில்தான் சோறு ஆக்குவார்கள். இதற்கு என்று கொண்டு வந்து கொடுக்கப்பட்ட மண்பானைகள், மொடா என்று சொல்லக் கூடிய பெரிய பானைகள், கலையங்கள், சட்டிகள் எல்லாம் ஆயத்தமாகக் கோயிலின் பக்கத்தே உள்ள அடுப்படியில் இருக்கும். அடுப்படி என்பது சமையற் செய்யும் பகுதி. தரையை நீளமாகக் கொத்தி அதில் தான் அடுப்பு அமைக்கிறார்கள். அடுப்பு எரியும் போது அதே கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். ஊருக்கெல்லாம் அன்னதானம் கொடுக்கிறோம் என்ற இறுமாப்பில் அவ்வூர் மக்கள் அன்று இருப்பார்கள்.

மேளக்காரர்கள் மதியம் வந்துவிடுவார்கள்; அவர்கள் வந்தவுடன் ஊரின் நடுப்பகுதியில் உள்ள கொட்டகையில் வாசிப்பு நடக்கும்; அப்போது எல்லோரும் கூடுவார்கள். உடனே பெரியவர்கள், வீட்டுக்கு ஒரு ஆண், பெண் சமையல் வேலையைக் கவனிக்கப் போக வேண்டுமென்பார்கள். இவர்களை அனுப்பி வைப்பதெல்லாம் மானியக்காரர் வேலைதான். ஆண், பெண் இருபாலரும் குளித்துவிட்டுத் தான் கோயிலுக்குப் போகிறார்கள். அங்கு உடனே பூசாரி பூசை நடத்தி அடுப்புக்குக் 'கங்கு' அதாவது நெருப்புக் கொடுப்பார். பின் திருநீறு கொடுப்பார். சமையல் வேலை ஆரம்பிக்கப்படுகிறது. இது இவ்வாறிருக்க ஊர் மக்கள் ஆடல் பாடல், கேளிக்கைகளிலும், மேளக்காரர்களை, வாசிக்கச் சொல்லிக் கேட்பதிலும் ஈடுபட்டிருப்பார்கள். இவ்வாறு சமையல் முடியும் மட்டும் இருக்கும்.

ஏழு மணி ஆனவுடன் பொங்கல் வைப்பதற்கு ஏற்பாடு செய்வார்கள். எல்லாப் பெண்களும் பொங்கல் பானைகளுடன் ஊரின் மத்தியில் உள்ள கொட்டகைக்கு வருவார்கள். அங்கு வாசிப்பு

1. அம்பலக்காரர் என்பது, ஊரின் பொது நிர்வாகத் தலைவர்; இவர் பெயரில்தான் ஊர்ப் பொதுச் சொத்து இருக்கும். மானியக்காரர் அம்பலக்காரர்க்குத் துணைபோகக் கூடியவர். வரி வசூல் இவர் தான் செய்வார். எல்லைக்காரரும் அப்படியே.

நடந்து கொண்டிருக்கும். மக்கள் கூடுவார்கள். எல்லா வீடுகளிலி ருந்தும் பெண்கள் வந்தவுடன் பொங்கல் வைக்க, மேளங்கொட்ட, தேவராட்டம் போன்ற கேளிக்கைகளுடன் ஊர்வலமாகக் கோயி லுக்குப் போவார்கள். அங்கு கோயிலை மூன்று முறை வலம் வந்த பின் பானைகளை இறக்கி வைத்துவிட்டு கல்லைக் கொண்டு சேர்த்து வைக்கப்பட்ட அடுப்புகளில் பொங்கல் வைக்க ஏற்பாடுகள் செய்வார்கள். பூசை நடக்கும். திருநீறு கொடுத்தவுடன் பொங்கல் வைப்பார்கள். சர்க்கரைப் பொங்கலோ, வெண் பொங்கலோ வைப்பார்கள். பொங்கல் வைத்து முடிந்தவுடன் எல்லோரும் வீட்டிற்குச் சென்று விடுவார்கள். பின் ஊர் சிறப்பு கொண்டு வருவார்கள். அதாவது கோயிலின் தெய்வத்திற்கு நடக்கும்பூசையை 'சிறப்பு நடத்துவது' என்று சொல்வார்கள். இதற்கு, உரிய பொருட்களை அவரவர்கள் வீட்டிலிருந்து கொண்டு வருவார்கள். எல்லோரும் ஊரின் மத்தியில் உள்ள கொட்டகை வந்து சேர்வார் கள். அங்கு வாசிப்பு நடந்து கொண்டிருக்கும்; பெண்கள் கும்மி அடிப்பார்கள். மாலையம்மன் வரலாறைக் கதைப் பாடல்களாக்கிக் கும்மி அடிப்பார்கள். இவ் வேடிக்கை எல்லோரும் ஒருங்கே கூடு வதற்குத்தான். அதன்பின் அங்கிருந்து எல்லோரும் ஊர்வலமாக கோயிலுக்கு வருவார்கள். மூன்று முறை வலம் வருவார்கள். பின் கோயிலுக்குள் சென்று பொருட்களைக் கொடுப்பார்கள். பூசை நடக்கும். இப்போது ஊரிலுள்ள மக்கள் அனைவரும் வந்திருப் பார்கள். பக்கத்திலுள்ள ஊரிலிருந்து எல்லோரும் வந்து சேருவார்கள்.

கோயிலின் முன்பகுதியில் உள்ள திறந்த வெளியில், அதாவது புன்செய் நிலத்தில் பந்தி போடுவதற்கு ஏற்பாடு செய்திருப்பார்கள் எல்லோரும் இனவேறுபாடு இன்றி பந்தியில் உட்காருவார்கள். அங்கு ஆக்கிய சோற்றை எல்லாப் பந்திகளிலும் படைப்பார்கள். பூசை நடக்கும் முன் சாப்பிடக் கூடாது என்று சொல்லிக் கொண்டே இருப்பார்கள். பின் பூசை நடக்கும். அம்மனுக்குப் பூசை நடக்கும் போது பூசாரிக்குத் துணைப் பூசாரி ஒருவர் இருப்பார். பூசாரி வாயைத் துணியால் மறைத்துப் பூசை செய்வார். அதாவது படைக்கப்பட்ட பொருளின்மீது இச்சை ஏற்பட்டு எச்சில் வடியக் கூடாது என்பதற்காகவே வாய்கட்டி பூசை நடத்துகிறார். பூசை முடித்து பூசாரி தீப ஆராதனையோடு முன்செல்ல, அதன்பின் மணி அடித்துக் கொண்டு துணைப் பூசாரி செல்வார். சமையல் பகுதி, சோறு குவித்து வைத்திருக்கும் பகுதி எல்லாம் சுற்றிவிட்டு, பந்தி களுக்கு வருவார்கள்; தீப ஆராதனை காட்டுவார்கள். அதன்பின்

பண்டாரம் சங்கு ஊதி வாழ்த்துவார். அரகரா, அரகரா என்று ஒருவர் சொல்ல அடுத்தவர் இது யார் கொடுக்கும் அன்னதானம்; இது மாலையம்மன் வீரவை, சின்னுவையம்மாள் கொடுக்கும் அன்னதானம்; ஆல்போல் தழைத்து அருகம்புல்போல் வேரூன்றி, பசியாமல் எப்போதும் மக்கள் உண்ண வேண்டும் என்று சொல்லி முடிப்பார். அதன்பின் பூசை நடக்கும். உடனே சாப்பிடச் சொல் வார்கள். எல்லோரும் சாப்பிடுவார்கள் இதை விரதம் விடுதல் என்று சொல்கிறார்கள். திருச்செந்தூர் முருகப் பெருமானுக்கு இப்பகுதி மக்கள் விசாகத்திற்குக் காவடி எடுத்து நேர்த்திக் கடன் செலுத்தி விரதம் இருப்பது வழக்கம். ஆகவே இதையும் விரதம் என்றே குறிப்பிடுகிறார்கள். ஒரே பந்திதான்; அது முடியவே இரவு 12 மணி ஆகிவிடும். அதன்பின் துணைப் பந்தி; இதில் சாப்பிடாமல் இருக்கும் சமையல் வேலை பார்ப்பவர்கள உட்காரு வார்கள். சாப்பிட்டவர்கள் கைகழுவுவதற்கு ஊர்க் கண்மாய்க்குத் தான் செல்வார்கள்; நீர் இல்லாத சமயங்களில் கிணற்று அருகே தொட்டிகளில் தண்ணீர் இறைத்து ஊற்றிக் கொண்டிருப்பார்கள். எல்லோரும் சாப்பிட்டவுடன் மாவிளக்கு எடுக்கத் தயாராவார்கள். முளைப்பாரியும் கொன்டு வருவார்கள்.

முன்னதைப் போலவே, ஊர் மத்தியிலுள்ள கொட்டகையில் மேளம் வாசிக்க, கும்மி அடித்துக் கொண்டிருப்பார்கள். ஒயில் கும்மி அடிப்பார்கள்; பெண்கள் கும்மி அடிப்பார்கள். அதன்பின் முளைப்பாரியும், மாவிளக்கும் எடுத்துக் கொண்டு ஊர்வலமாகக் கோயிலுக்கு வருவார்கள். இப்போது சரியாக விடியும் தருவாயில் இருக்கும். தெய்வத்திற்கு முன் முளைப்பாரியையும் மாவிளக்கை யும் வைப்பார்கள். பூசை நடக்கும். பொங்கல் பானை ஒவ்வொன் றிலிருந்தும் ஒரு கரண்டிப் பொங்கலை எடுத்து அம்மனுக்குப் படைப்பார்கள். அதன்பின் பூசை நடக்கும். பூசை முடிந்தவுடன் திருநீறு கொடுக்கும்போது முதலில் அம்பலக்காரர்க்குக் கொடுப் பார்கள்; அடுத்தது எல்லைக்காரர்; அதன்பின் மானியக்காரர். பின் ஊருக்கு, வெளியூர்களிலிருந்து வந்த புதியவர்களுக்குக் கொடுப்பார்கள். அதன்பின் நேர்த்திக் கடனைச் செலுத்துவார்கள். மாவிளக்கு சிலர் எடுப்பார்கள். நோய்வந்த உடல் உறுப்புக்களின் மீது மாவிளக்கை வைத்து சாமியை வணங்குவார்கள். மொட்டை அடிப்பார்கள்; கோயிலில் கும்மி அடிப்பார்கள்; பாட்டுக் கச்சேரி நடத்துவார்கள். பின் எல்லோரும் ஒருங்கிணைய மேள தாளத் தோடு, பொங்கல் பானையை எடுத்துக் கொண்டு ஊருக்குச் செல் வார்கள். அப்போது ஊரின் நடுப்பகுதிக்கு வந்துதான் கலைய

வேண்டும் என்பதில்லை. அவரவர் வீடு வந்தவுடன் கலைந்து செல்வார்கள். இது நடப்பது இரண்டாம் நாள் காலை ஆகும் பின் எல்லோரும் குளித்துவிட்டு 9 மணியளவில் எஞ்சிய சோற்றை உண்பதற்கு வெளியூர் ஆட்களுக்குக் கொடுப்பார்கள். அதன்பின் பூசை நடக்கும். இதோடு, குருபூசை முடிந்துவிடும்.

பள்ளயம் பிரிக்க ஏற்பாடு செய்வார்கள். அதாவது பொங்கலில் குற்றம் குறையிருப்பின் பேசித் தீர்த்துக் கொள்வார்கள்; தேங்காய் முடிகளைப் பகிர்ந்து கொடுப்பார்கள்; வரி கொடுத்த முறையில் இது நடக்கும். சட்டி, பானைகள் எஞ்சிய அரிசி, பருப்பு, விறகு, காய்கறிகளை ஏலம் போடுவார்கள். அதை யார் வேண்டுமென்றாலும் எடுத்துக் கொள்ளலாம். அந்தப் பணம் செலவு போகவுள்ள மீதியுள்ளதாகும். 500-க்குக் குறையாமல் மிகுவதுண்டு. அதை வைத்து என்ன செய்யலாம் என்று அன்றே முடிவு செய்வார்கள். அவ்வாரத்தில் ஒருநாளில் நாடகம் அல்லது வில்லுப்பாட்டு வைத்துக் கொள்வது என்று முடிவாகும். பணம் மிகுதியாக இருந்தால் நாடகம் என்றும் குறைவாக இருந்தால் வில்லுப்பாட்டு என்றும் முடிவாகும். நாடகம் என்றால் அரிச்சந்திரா அல்லது கட்டபொம்மு நாடகம்தான். அவ்வூரில் இதற்கென்றே நாடகம் படித்திருப்பார்கள். அல்வூர் மக்களோடு வேறு கலைஞர்களையும் சேர்த்துக் கொண்டு மூன்று நாட்களுக்குக் குறையாது நாடகம் போடுவார்கள்; சென்ற ஆண்டு அரிச்சந்திரா நாடகம் ஒரு நாளும் கட்டபொம்மு நாடகம் ஒருநாளும் நடந்தன. மேலக்கல்லூரணியில் நாட்டுப்புறக் கலைஞர்கள்-கிராமியக் கலைஞர்கள் மிகுதி. கட்டபொம்முக் கதையைக் கூத்தாக நடித்துக் கொண்டிருந்த காலத்திலிருந்து இன்றைய நாட்டுப்புற நாடகமாகும் வரை நடித்துக் கொண்டிருப்பவர் கட்டபொம்மு, கே. என். உ த் த ண் ட ர ா ய க் கவுண்டர். நாடகம் முடிந்தவுடன் ஊருக்கு வந்த விருந்தினர்கள் சென்று விடுவார்கள். இத்துடன் பொங்கலும் முடிந்துவிடும்.

இந்த மாலையம்மன் கோயிலின் பூசாரி கவுண்டர் இனத்தைச் சேர்ந்தவர். அதுவும் அந்த மாலையம்மனின் கிளையாகிய எகடவான் கிளையைச் சேர்ந்தவர். இவருக்கு எந்தவித மானியமும் இல்லை. குருபூசையின்போது தேங்காய் உடைக்கும்போது ஒவ்வொரு முடியும் இவருக்குக் கிடைக்கும். பொங்கல் பானைகளிலிருந்து பொங்கலை எடுத்துக் கொள்ளலாம். அம்மனுக்கு நேர்த்திக் கடனாகப் புதுத் துணிகள் வரும்போது அதை எடுத்துக் கொள்ளலாம். காணிக்கை செலுத்தினால் அதையும் வைத்துக் கொள்ளலாம்.

இத்தெய்வத்திற்கு பலி கொடுப்பதில்லை. பொதுவாக இப் பகுதியிலுள்ள மாலையம்மன் கோயில்களுக்கு பலி கொடுப் பதில்லை.

**தேவலக்கம்மாள்**

விளாத்திகுளத்திலிருந்து சிவஞானபுரம் போகும் சாலையில் இருப்பது அருங்குளம். இங்கு தேவலக்கம்மாள் என்னும் மாலை யம்மன் கோயில் இருக்கிறது. இது வெள்ளையம்மாள்புரத் திற்கும் அருங்குளத்திற்கும் இடையே உள்ளதாகும். இத்தெய் வமும் பூக்குழியில் இறங்கி தெய்வமானதுதான். இந்தத் தெய்வத் தோடு இணைக்கப்பட்ட கதையும் மேலக்கல்லூரணியில் உள்ள மாலையம்மன் கதையும் ஒன்று போலவே இருக்கிறது. இங்கு அக்கா தங்கை இல்லை; ஒரே ஒருத்திதான்; அவளுக்கு மாமா; ஆடு மேய்த்தது; பாம்பு கடித்தது; தீக்குழி பாய்ந்தது எல்லாம் ஒன்று போலவே இருக்கிறது (இராசாராம், பெ., 16-8-1984). இத்தெய்வத்தின்—தேவலக்கம்மாள் கதையில் மாறுபாடு இல் லாது இருப்பதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை. ஒரு வேளை இதுவும் உண்மைச் சம்பவமாக இருந்திருக்க வேண்டும். ஒரே நிகழ்ச்சி இன்னொரு இடத்திலும் நிகழ்வது உண்டு. இக் கோயில் பூசாரி கவுண்டர்தான். தேவலக்கம்மாளும் கவுண்டர் இனத்தைச் சார்ந்த பெண்தான். இங்கும் பலி கொடுப்பதில்லை. குரு பூசை கொண்டாடுவது இல்லை.

**வீரநாகம்மாள்**

அருங்குளத்தில் உள்ள இன்னொரு மாலையம்மன் கோயில் வீரநாகம்மாள் கோயிலாகும். இது பிடிமண் கோயில்தான். இந்த தெய்வத்தோடு, தொடர்புடைய கதை நடந்த இடம் மதுரை மாவட்டம், உசிலம்பட்டி வட்டம், ஏழுமலைக்கும் எம். கல்லுப் பட்டிக்கும் இடையே உள்ள மல்லப்புரம் ஆகும்.

மல்லப்புரத்தின் மந்தையில் மேற்கில் முன்பு ஊர் இருந்தது. அதுதான் மல்லப்புரம் ஆகும். இப்போதுள்ள ஊர் முன்பு இல்லை. அங்கு ரெட்டியார் இனத்தார் மிகுதியாக வாழ்ந்தார்கள். அந்த ஊர்ப் பெயர் வட்டையம்பட்டி ஆகும். சிவல் சின்னப்பரெட்டியார் என்பவர் ஜமீன் போன்று வாழ்ந்து வந்திருக்கிறார்; முகமதியர் படையெடுப்பின் போது அவரைத் துன்புறுத்தியிருக்கிறார்கள். ஆகவே அவர் மடிந்து விட்டார். அப்போது, அவர் மனைவி வீர நாகம்மாள் இப்போது கல்லுப்பட்டியில் உள்ள சினிமா தியேட்டர்

அருகே தீக்குழியில் பாய்ந்து இறந்து, தெய்வமானாள். சின்னப்ப ரெட்டியாருடைய வைப்பாட்டியும் தனக்கு, இனி யார் என்று உயிரை மாய்த்துக் கொண்டாள். ஆகவே இருவருடைய நினைவுச் சின்னங்களும் இன்று அங்குக் கட்டப்பட்டிருக்கின்றன. (செல்வ ராசு, பொ., 14-10-1984). இப்போதும் அந்த வீர நாகம்மாள் கோயிலுக்குப் பூசாரியாக ரெட்டியார் இனத்தைச் சேர்ந்தவர்தான் இருக்கிறார்.' காஞ்சாபுரத்தில் குடியிருக்கிறார். இக் கோயிலின் நிர்வாகத் தலைவர் கீழப்பட்டி வேலுச்சாமி ரெட்டியார் ஆவார். ஆடி மாதத்தில் அக்கம்பக்கத்திலுள்ள ரெட்டியார் இனத்தார் எல் லோரும் இக்கோயிலில் கூடுகிறார்கள்; பொங்கல் வைத்து வழிபடு கிறார்கள்; அவ்வாறு வழிபடும் போது அடுத்த இனத்தாரை அங்கே அனுமதிப்பதில்லை. பொங்கலை அடுத்த இனத்தார் களுக்குக் கொடுப்பதில்லை. அவர்களே சாப்பிட்டுச் செல்கிறார்கள்.

இந்தக் கோயிலிலிருந்து பிடிமண் எடுத்து வந்து அருங் குளத்தில் கோயில் அமைத்துள்ளார்கள். விளாத்திகுளம் பகுதி, ரெட்டியார்கள் மிகுதியாகக் குடியிருக்கும் பகுதியாகும்.

### பெத்தாலம்மன்

நாகலாபுரத்துக்கு, அருகில் உள்ள ஊர் சங்கரலிங்கபுரம். புதூர் செல்லும் சாலைக்குப் பக்கத்தில் பெத்தாலம்மன் கோயில் இருக்கிறது. அதாவது கோயில் என்று தனியே ஒன்றும் கட்டப் படவில்லை. உடை மரம் ஒன்று இருக்கிறது. அதன்கீழ் ஒரு கல் இருக்கிறது. இதுதான் பெத்தாலம்மன் தெய்வம். ஜமீன் கோடாங்கிப்பட்டியிலிருந்த தச்சு வேலை செய்யும் ஆசாரிப் பெண், நாயுடு வகுப்பைச் சேர்ந்தவரோடு ஊரைவிட்டு ஓடிப்போய் திருமணம் செய்து கொண்டாள். கணவனைக் கொன்று விட்டார்கள். ஆகவே அப்பெண் தீக்குழிபாய்ந்து இறந்து விட்டாள். அப்பெண்தான் பெத்தாலம்மன் (விராடராசன், 20-8-1984). இன்றும் சிவராத்திரி சமயம் கோடாங்கிப்பட்டி ஆசாரிகள் அங்குச் சென்று வழிபடுகிறார்கள். பலி ஒன்றும் கொடுப்பதில்லை. அக் கம்பக்கத்திலுள்ள ஆசாரி இனத்தார் மிகுதியாக வருகிறார்கள். ஆனால் அது சங்கரலிங்கபுரத்தைச் சேர்ந்த கோயிலாகும்.

### மல்லம்மாள்

வைப்பாறு என்னும் ஊரில் மல்லம்மாள் என்னும் மாலை யம்மன் கோயில் இருக்கிறது. மூன்று சகோதரர்களும் ஒரு தங்கை

யும், அவர்களுடைய தாத்தாவும் ஒரு சமயம் வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் கட்டபொம்மன் இனத்தைச் சேர்ந்த தோக்கலவார் கம்பள நாயக்க வம்சத்தவர்கள். தாத்தாவைத்தான் திருமணம் செய்து கொள்வதாக பேத்தி மல்லம்மாள் சொல்லிக் கொண்டிருப் பாள். திடீரென்று தாத்தா இறந்தார். அவருக்கு இறுதிச் சடங்குகள் செய்தனர். கட்டையில் வைத்து நெருப்பு மூட்டும்போது நெருப்பு பற்றவில்லை. ஆகவே மல்லம்மாள் நெருப்பு பற்ற வைத் தாள், உடனே தீப் பிடித்தது. அங்கிருந்தவர்கள் எல்லாம், இவள்தான் பெண்டாட்டி என்று சொன்னார்கள். ஆகவே அத் தீயில் விழுந்து மரணம் அடைந்தாள், சகோதரர்கள் மல்லம் மாளுக்குக் கோயில் அமைத்து வணங்கி வந்தார்கள். இப்போது எல்லோரும் வழிபடுகிறார்கள். வைப்பாறில் மூன்று பங்காளி களைச் சேர்ந்தவர்களும் இருக்கிறார்கள். இரண்டாவது தலை முறையைச் சேர்ந்தவர் இக்கோயிலுக்குப் பூசாரியாக இருக்கிறார் (துரைராசன், சி., 9-8-1984). இக்கோயில் சக்காரக்குடிக்குப் பக்கத்தில் பேருரணி என்ற கிராமத்திலும் இருக்கிறது. அவ்வூர் பாஞ்சாலங்குறிச்சி சீமையைச் சார்ந்தது. அவ்வூரில்தான் இக்கதை நிகழ்ந்திருக்க வேண்டும். பலி, ஒன்றும் கொடுத்து வழிபடு வதில்லை; ஊர்ப் பொங்கல் சமயம் வழிபடப்படுகிறது. ஆடிமாதம் வழிபாடு நடத்துகிறார்கள். இக்கோயிலில் துணைத் தெய்வங் களாக சன்னாசி சித்தாண்டி, பெருமாள் இருக்கின்றன.

நாத்தினார் முறையுள்ள பெண்கள் பொங்கல் சமயம் அம்மன் உடுத்தியுள்ள சேலை போன்ற சேலையைக் கட்டக் கூடாது. அப் படி உடுத்திக் கொண்டால் தீப்பிடிக்கும். பொங்கல் வைக்கும் போது வரிசைக்கிரமமாக வரவேண்டும். அப்படி வரவில்லை யென்றால் கோயிலில் தகராறு ஏற்படும் (துரைராசன், சி., 9-8-1984). இவை இன்றும் கோயிலிலுள்ள சில நம்பிக்கைகள்.

**வெள்ளமாளம்மாள்**

இக்கோயில் அருங்குளத்தில் இருக்கிறது. நாயக்கர் இனத்தில் பிறந்த பெண் பூக்குழி இறங்கி தெய்வமான வரலாற்றைக் கொண்டது. இத் தெய்வ வழிபாட்டில் நேர்த்திக் கடனாக சுளகு, கருவளையல்சுருள் ஓலை ஆகியவற்றை வைத்து வணங்குவார்கள். கம்மவார் நாயுடுகள்தான் அதிகமாகச் சென்று அவ்வப்போது வணங்குகிறார்கள். பொதுவாக ஊர்மக்கள் எல்லோரும் சென்று வழிபாடு நடத்துகிறார்கள்.

**வீரிகாத்தியம்மன்**

விளாத்திகுளத்திற்குக் கிழக்கே வைப்பாற்றங் கரையில் உள்ள கொரலியம்பட்டி என்னும் ஊரில் இக்கோயில் இருக்கிறது. இதற்குப் பூசாரி சக்கிலிய இனத்தை சார்ந்தவர் இருக்கிறார். சிலை ஒன்றும் இல்லை. பீடம் மட்டும் இருக்கிறது. வைகாசி மாதத்தில் செவ்வாய்க் கிழமையில் இதற்குப் பொங்கல் நடைபெறும். அக்னிச் சட்டி, கவர்குத்து, மாவிளக்கு, முளைப்பாரி எல்லாம் கோயில் பொங்கலில் இடம்பெறும்.

இத் தெய்வத்தைச் சக்கிலியர்தான் வணங்குகிறார்கள். இத் தெய்வம் சக்கிலிய இனத்தைச் சார்ந்த ஒரு பெண்ணாகும். அவ் வூரில் உள்ள சக்கிலியப் பெண்ணை, நாயக்கர் ஒருவர் கடத்திச் சென்று திருமணம் செய்து கொண்டார். நாயக்கர்கள் அவர்களுக்குத் தொல்லை கொடுத்தார்கள். இரண்டு இனத்தார்களும் அவர்களை சாதியிலிருந்து விலக்கி வைத்துவிட்டார்கள். இதனால் வெறுப் புற்றுத் தீக்குழியில் பாய்ந்து தெய்வமானார்கள் (உமையன், உ., 2-9-1984).

**இடைச்சியம்மன்**

விளாத்திகுளத்திலிருந்து பெருநாழி செல்லும் சாலையில் காடல்குடிக்கு மேற்புறத்தில் உள்ளது இடைச்சியூரணி என்னும் ஊர். அங்குதான் இடைச்சியம்மன் கோயில் உள்ளது. தெய்வத் தின் பெயரால் ஊர்ப் பெயர் வழங்கப்படுகின்றது.

இத் தெய்வத்திற்குச் சிலை உண்டு. பண்டாரம் என்று சொல்லக் கூடிய புலவர்தான் இக்கோயில் பூசாரி. ஆடிமாதக் கடைசி வெள்ளிக் கிழமை இக்கோயிலில் பொங்கல் நடைபெறும். ஊர் மக்கள் எல்லோரும் சேர்ந்து இப் பொங்கலை நடத்துகிறார்கள். பொது வாக மாலைத் தெய்வத்திற்குப் பலி கொடுப்பது இல்லை. ஆனால் இக்கோயிலில் பொங்கலுக்கு மறுநாள் காலையில் ஆட்டுக்கிடா, சேவல் ஆகியவற்றைப் பலி கொடுக்கிறார்கள். இம்சைத் தாங் காது பூக்குழி இறங்கி தெய்வமானதால் இதற்குப் பலி கொடுக் கிறார்கள் போலும்.

ஊருக்கு வெளியில் இக்கோயில் இருக்கிறது. இத் தெய்வத்தைப் பற்றி வழங்கும் வரலாறு: கோனார்-இடையர் குலப் பெண் ஒருத்தி (திருமணமாகாதவள்) நாள்தோறும் பால் விற்பதற்காக அவ்வழியே வந்து கொண்டிருப்பாள். இதைச் சிலர் கவனித்துக்

கொண்டிருந்தார்கள். தனியே வருவதைப் பார்த்து கொண்டிருந் தார்கள். ஒருநாள் அப்பெண் அவ்வழியே வரும்போது, அவ்வூர ணியில் தங்கியிருந்த அவர்கள் அவளை மறித்து, நகைகளைப் பறித்து, அவமானப்படுத்திவிட்டார்கள். இதைப் பொறுக்காத அப்பெண் உயிரை மாய்த்துக் கொண்டாள். தெய்வமானாள்; அவ் வூரணிப் பகுதியில்தான் இன்று ஊர் இருக்கிறது (பாரதி, வி., 15-8-1984). இடைக்குலப் பெண்—இடைச்சியின் பெயரால் இடைச்சியூரணி என்று அவ்வூர் வழங்கி வருகிறது. இன்றும் அவ்வூரில் கோனார் இனத்தவர்கள் குடியிருப்பதில்லை. ஒருசில குடும்பங்கள் அவ்வூரில் குடியிருந்து பார்த்தன. விருத்திக்கு வரவில்லை என்று குடிபெயர்ந்து போய்விட்டனர். இப்போது பொங்கல் சமயம் மட்டும் கோனார்கள் வந்து வழிபட்டுச் செல்கிறார்கள்.

**முத்துமாலையம்மன்**

விளாத்திகுளத்திலிருந்து தூத்துக்குடி செல்லும் சாலையில் இருப்பது குளத் தூர். இவ்வூரில் முத்துமாலையம்மன் என்ற இக் கோயில் இருக்கிறது. இது ஆதி திராவிடர்களுக்குரிய கோயிலாகும். பூசாரி ஆதிதிராவிட இனத்தைச் சேர்ந்தவர். கற்சிலை இருக்கிறது. ஆனி மாதம் கடைசி செவ்வாய்க் கிழமை இதற்குப் பொங்கல் நடை பெறும். இத்தெய்வத்திற்குப் பலி கொடுக்கிறார்கள். ஆதிதிரா விட இனத்தைச் சேர்ந்த ஒரு பெண் தீக்குழி பாய்ந்து தெய்வமான தால் இக்கோயில் முத்துமாலையம்மன் கோயில் என்று வழங்கு கிறது (அய்யாத்துறை, எம். , 9-9-1984).

இங்குக் கூறப்பட்டவைகளிலிருந்து பின்வரும் செய்திகள் புலப் படுகின்றன:

திருமணம் செய்துகொண்ட பெண்கள், திருமணம் உறுதி செய்யப்பட்டிருந்த பெண்கள், தீக்குழி பாய்ந்து இறந்து தெய்வ மாவதே மாலைத்தெய்வம் ஆகும் என்பது பெறப்படுகிறது: ஆந்திராவில் இத்தகைய தன்மை கொண்ட தெய்வத்தைப் 'பெறந் தாளு' என்று அழைக்கின்றனர்.

# 8. சமாதித் தெய்வங்கள்

உலகில் உள்ள பெரும்பான்மையான இனத்தார், இறந்தவர்களைச் சுடுவதில்லை; மாறாகப் பூமியில் புதைத்து விடுகிறார்கள். தொன்று தொட்டு வரும் மிகப் பழைய நாகரிக இனத்தார் எல்லாம் இவ்வாறு புதைத்தே வந்திருக்கிறார்கள்; பூமாதேவியோடு உடல் ஒன்றியிருப்பதுதான் சிறப்பு என்று கருதியதேதான் காரணம். ஆரியர்கள்மட்டும் இறந்தவர்களைச்சுடுகிறார்கள்;புதைப்பதில்லை. ஆரியர்களிலும் குழந்தைகள் இறந்தால் சுடுவதில்லை; புதைத்து விடுகிறார்கள். கொள்ளி வைக்க ஆள் இருக்கும்போது மட்டும் எரிக்கிறார்கள்; குழந்தைகளுக்கு, வாரிசு இல்லாததால் புதைக்கிறார்கள்; சிறுகுழந்தைகளுக்குச் சிறு வயதிலேயே மணம் முடித்திருந்தால் அவர்களைச் சுடுகிறார்கள்; ஏனென்றால் வாரிசாகக் கணவன் வந்து விடுகிறான் என்று சொல்லப்படுகிறது (இராமன், மு.கோ., 22-11-1984). ஆக, பொதுவாகப் பார்க்கும்போது ஆரியர்கள் பிணங்களைப் புதைப்பதில்லை; எரிக்கிறார்கள். திராவிடர்கள் பிணங்களைப் புதைக்கிறார்கள்; சுடுவதில்லை.

புதைப்பது வேறு; சமாதி வைப்பது வேறு. ஆரியர்கள் சமாதி வைக்க விரும்பினால், எரித்த எலும்பை எடுத்து சமாதி வைக்க வேண்டிய இடத்தில் மீண்டும் அவ் வெலும்பை ஆகம முறைப்படி எரித்து அவ்விடத்தில் சமாதி கட்டுகிறார்கள். ஆனால் திராவிடர்கள் அப்படியே பிணத்தை உட்கார்ந்த நிலையிலேயே குழியில் வைத்து மூடி சமாதி கட்டுகிறார்கள். பொதுவாகத் தங்கள் குடும்பத்தில் இறந்தவர்களின் மேல் உள்ள மதிப்பால்—உயர்வால் சமாதி கட்டுகிறார்கள். தங்கள் வீட்டில் நடக்கும் நல்ல காரியங்களுக்கு முன் பொங்கல் வைத்து வழிபடுகிறார்கள். இது ஒரு குடும்ப வழிபாடாகத்தான் இருக்கிறது. இது தவிர, சமுதாயத் தலைவர்களோ, ஊர்த் தலைவர்களோ, துறவிகளோ இறந்தால் அவர்களுக்குச் சமாதி கட்டி எல்லோரும் வழிபடுகிறார்கள். இவ்வகையில் பெரும்பான்மையும் ஆண்களுக்கே சமாதி வைக்கப்படுகிறது. பெண்கள் தீக்குழி பாய்ந்து தெய்வமாகிறார்கள்; இது மாலைத் தெய்வ வழிபாடு; ஆண்கள் தெய்வத் தன்மையோடு இருந்து மக்களுக்குத் தொண்டாற்றி இறக்கிறார்கள்; அவர்களுக்கு சமாதி எழுப்பப்படுகின்றது. துறவிகள்—சாமியார்கள் சித்து

விளையாட்டால் தெய்வ நிலைக்கு மக்களால் உயர்த்தப்படுகிறார்கள். அவர்கள் இறக்கும்போது சமாதி வைக்கிறார்கள். இம்முறையில் வழிபடுவதை, சமாதித் தெய்வ வழிபாடு எனக் கொள்ளலாம்.

விளாத்திகுளம் வட்டத்தில் இறந்தவர்களுக்கு சமாதி கட்டியிருக்கிறார்கள். ஆனால் தெய்வ நிலைக்கு உயர்ந்த சமாதிகள் குறைவாகத்தான் இருக்கின்றன. தெய்வ நிலைக்கு உயர்ந்தவர்களை, சமாதி ஆகி விட்டார்கள்; அடங்கிவிட்டார்கள் என்றே சொல்லுகிறார்கள். அதாவது நிஷ்டையிலேயே ஆவி போய்விடுவதைத்தான் இவ்வாறு சொல்லுகிறார்கள். ரெட்டியபட்டி சுவாமிகள், கோடாங்கிபட்டி அப்பணசாமி, சிவஞானபுரம் லெக்கப்ப சாமி, அழகாபுரி முத்தையசாமி, மாவில்பட்டி சங்குச்சாமி, ஆகியோர் தெய்வநிலைக்கு உயர்ந்து சமாதி (யானவர்கள் என்று மக்கள் போற்றுகிறார்கள். திராவிடத் தெய்வ வழிபாட்டு முறையே இறந்தவர்களின் வழிபாட்டு முறைதானே. நடுகல் வழிபாடும், சுமைதாங்கிக் கல் வழிபாடும் இந்த சமாதித் தெய்வ வழிபாட்டு முறையின் அங்கமாகக் கொள்ளலாம். வயிற்றுச் சூலிகள் இறந்தால் அவர்களுக்குச் சுமைதாங்கிக் கல் வைக்கிற வழக்கம் இன்றும் இருக்கிறது. இரண்டு கல்லை நட்டு வைத்து, அவற்றின்மீது படுக்கையாக ஒரு கல்லைக் கிடத்தி வைக்கிறார்கள். இதுதான் சுமைதாங்கிக் கல் என்று அழைக்கப்படுகிறது. ஊருக்குச் செல்லும் பாதை, நீர்த்துறைக்குச் செல்லும் பாதை ஆகிய ஏதாவதொரு பாதையில்தான் சுமைதாங்கிக் கல் நடப்பட்டிருக்கும். சுமை கொண்டு செல்வோர் இளைப்பாறுவதற்காக இக்கல்மீது சுமையை வைத்து ஓய்வெடுப்பர். இவ்வாறு நாளாசரியாக நடக்கும்போது அக்கல்-அதாவது படுக்கைக் கல் கீழே விழுந்து விடும். அவ்வாறு கீழேவிழுந்தால்தான் இறந்தவர்களுடைய குடும்பத்தார்க்கு நல்லது என்ற நம்பிக்கை இன்றும் இருந்து வருகிறது. இக்கல்லிற்குக் குடும்பத்தில் நடக்கும் நல்ல காரியங்களில் பொங்கல் வைத்து வழிபடுகிறார்கள்; வழிபடாமல் இருப்பதும் உண்டு. மேலக்கல்லூரணி கிராமத்தில் இவ் வழிபாடு கவுண்டர் வீட்டில் நடக்கிறது. ஆனால் செட்டியார் வீட்டில் இச்செயல் நடக்கவில்லை.

இறந்தவர்களுக்கு கல் நடும் பழக்கம் விளாத்திகுள வட்டத்தில் பரவலாகக் காணப்படுகிறது. இறந்தவர்களுக்கு 16-வது நாளில் செய்யப்படும் இழவு சமயத்தில் கல் நடுகிறார்கள்; இக்கல்லில் இறந்தவருடைய பிறந்த தேதி, இறந்த தேதி, அவர் பெயர் ஆகிய செய்திகளைச் செதுக்கி வைக்கிறார்கள்; இச்செயல் அனுப்பக்

கவுண்டர் கம்பளத்து நாயுடு இனத்தாரிடம் காணப்படுகிறது. இதற்கும் வழிபாடு நடத்துகிறார்கள். இதையும் சமாதியின் அங்கமாகக் கொள்ளலாம்.

## ரெட்டியபட்டி சுவாமிகள்

ரெட்டியபட்டி சுவாமிகளின் சமாதிக் கோயில் நாகலாபுரத்திலிருந்து பெருநாழிக்குச் செல்லும் சாலையில், ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ரெட்டிய பட்டி எனும் ஊரில் உள்ளது. பெருநெறி மரபுக்குட்பட்ட கோபுர அமைப்போடு கூடிய கோவில் கட்டப்பட்டுள்ளது. இது சமீப காலத்தில்தான் கட்டப்பட்டது. முன்பெல்லாம் சாதாரண அமைப்போடு கூடிய ஓட்டுச் சாவடியாகத்தான் இருந்தது. தமிழ்நாடெங்கும் உள்ள சுவாமிகளின் பக்தர்கள், நன்கொடை வசூலித்து இப்போதுள்ள கோவிலைக் கட்டியிருக்கிறார்கள். கோயிலில் வழிபாடு பெருநெறி மரபின் வழியே நடைபெறுகிறது. கோயிலின் உள்ளே விநாயகர் சிலையும் உள்ளது விநாயகரைத்தான் குருமூர்த்தியாக சுவாமிகள் கொண்டிருந்தார்கள். ஆகவே விநாயகருக்கு வழிபாடு நடைபெறுகிறது. சுவாமிகள் சைவப் பிள்ளை இனத்தைச் சார்ந்தவர். அவரின் அண்ணனின் கொள்ளுப் பேரன் குருநாதனே கோவில் பூசையை நடத்துகிறார். கோவில் நிர்வாகக் குழுவிற்கென்று 'ரெட்டியபட்டி சுவாமிகள் சங்கம்' ஒன்று இருக்கிறது. இந்த அமைப்புதான் திருவிழா நடத்துகிறது. ஒவ்வொரு வாரத்தின் வெள்ளிக்கிழமையும் சுவாமிக்கு உகந்த நாளாகக் கருதப்படுவதால் மக்கள் அன்று நெரிசலாக வந்து வழிபடுகிறார்கள். சுவாமி பிறந்த புரட்டாசி மாதத்திலும் சிறப்பு வழிபாடு நடக்கிறது. சுவாமிகள் அடங்கிய ஆண்டு 12-1-1923 ஆகும். ஆகவே ஒவ்வொரு மார்கழித் திங்களிலும் அதே நாளில் குரு பூசை கொண்டாடப்படுகிறது. குரு பூசைக்குரிய செலவினங்கள் அனைத்தும் சங்கம் ஏற்றுக் கொள்கிறது. உற்சவ மூர்த்தி போன்று சுவாமி சிலையையும் விநாயகப் பெருமானையும் ஊர்வலமாக எடுத்துச் செல்கிறார்கள். இதை கிராம மக்கள் நடத்துகிறார்கள். குரு பூசையன்று மதியம் எல்லோருக்கும் உணவு பரிமாறப்படுகிறது. வேறுபாடின்றி எல்லோரும் சாப்பிடுகிறார்கள். சுவாமிகளின் சாப்பாட்டைச் சாப்பிடுவதால் தங்களுக்கு நல்லது கிட்டும் என்று நினைக்கிறார்கள். குரு பூசை தினத்தன்று தமிழகத்தில் எல்லாப் பகுதிகளிலுமுள்ள சுவாமிகளின் பக்தர்கள் திரளாக வந்திருந்து வழிபடுகிறார்கள். தென்னாற்காடு, வட ஆற்காடு, தஞ்சை, திருச்சி புதுக்கோட்டை மாவட்டங்களிலிருந்தே அதிக ஆட்கள் வருகிறார்கள்.

நேர்த்திக் கடனாக பக்தர்கள் நவதானியங்களைக் கொண்டு வந்து கொடுக்கிறார்கள். மொட்டை அடித்துக் கொள்கிறார்கள்; மாவிளக்கு எடுக்கிறார்கள்; குழந்தைகளுக்குப் பெயர் சூட்டிக் கொள்கிறார்கள். ‘குருநாதன்’ என்ற பெயரையே பெரும்பாலும் சூட்டுகிறார்கள். பணமாகக் காணிக்கை செலுத்துகிறார்கள். ஆனால் பலியிடுவதில்லை. அது சுவாமிகளுக்கு ஆகாது என்று சொல்லப்படுகிறது. சுவாமிகள் சைவக் குடும்பத்தைச் சார்ந்தவர் என்ற ஒரு காரணம். அடுத்தது, சுவாமிகள் இருக்கும்போதே பலியிடுவதைக் கண்டித்திருக்கிறார்; வாணியம்பாடி, முனியசாமி செட்டியார் வீட்டிற்கு சுவாமிகள் சென்றபோது அங்கு வழிபாடு நடந்தது. அப்போது கடா வெட்டப் போயிருக்கிறார்கள். இதைச் சுவாமிகள் மிகவும் வன்மையாகக் கண்டித்திருக்கிறார்கள். இந்த நிகழ்ச்சியை அவ்வூர் மக்கள் நினைவூட்டினார்கள்.

சுவாமிகள் அருளிய திருநெறிகளுக்குச் சட்டம் என்று சொல்கிறார்கள். இதை சுவாமிகளே சொன்னதாகச் சொல்கிறார்கள். ‘உலகில் உடலெடுத்த உயிர்கள் எந்தப் பலனை அடைந்தால் அதற்கு மேல் அடையக்கூடிய பலன் ஏதும் கிடையாது என்ற நிலை வருமோ, அந்த சிறந்த பலனைக் கூட்டுவிக்கக் கூடியது சுவாமிகளின் சட்டம்’ (சுவாமிகள், 1978:77). சுவாமிகள் அருளிய நெறி முறைகளை ஏற்றுக் கொண்டவர்கள் சுவாமிகளின் சட்டத்தை ஏற்றுக் கொண்டவர்களாகிறார்கள். இச்சுவாமிகளை வழிபடக் கூடியவர்கள் மருந்தில் நம்பிக்கை வைப்பதில்லை. நோய் நீக்கு மருந்தாக சுவாமிகளையே நினைக்கிறார்கள். அச்சட்டத்தின் படியே நடக்கிறார்கள். எந்த நோய் கண்டபோதும் தண்ணீரி லேயே குளிக்க வேண்டும். சன்னியிருந்தாலும் தண்ணீரிலேயே குளிக்க வேண்டும். மது, மாமிசம் அருந்தக் கூடாது. சுவாமிகளின் திருநீறே நோய் நீக்கும் மருந்தாகும். யாவருக்கும் தன்னால் இயன்ற உதவியைச் செய்ய வேண்டும். எதற்கும் குரு நாதனே துணை என்று இருக்க வேண்டும். இதுதான் சுவாமிகள் அருளிய சட்டமாகும். விஷக்கடிக்கும் மருந்து சுவாமிகளின் திருநீறுதான். ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் மக்கள் கூட்டம் நோய் நீக்கும் மருந்தாக சுவாமிகளை நினைத்து வந்து கொண்டிருக்கிறார்கள். நோய் குணமாவதாக சொல்கிறார்கள். தீராத நோயெல்லாம் தீர்ந்துவிட்டதாகச் சொல்கிறார்கள்; சுவாமி களின் வழிபாட்டால் தங்களுக்குத் துன்பமே இல்லை என்று பறை சாற்றுகிறார்கள்.

கோயிலைச் சுற்றிலும் பக்தர்கள் வெளியூரிலிருந்து வந்தால் தங்குவதற்கு மடம் கட்டப்பட்டிருக்கிறது. கல்யாண மண்டபம்

கட்டப்பட்டிருக்கிறது. எல்லாம் பக்தர்களால் கட்டிக் கொடுக்கப் பட்டவைகளே ஆகும். சுவாமிகள் பிறந்து வளர்ந்த வீட்டிலேயே சுவாமிகள் அடங்கியதால் அதே வீட்டிலேயே கோயில் கட்டப் பட்டிருக்கிறது. இது ஊருக்கு மத்தியில் இருக்கிறது.

**சுவாமிகள் வரலாறு**

ரெட்டியபட்டியில் வீரபத்திரப் பிள்ளைக்கும் ஆவுடை யம்மாளுக்கும் மகனாகப் பிறந்தவர்; கடைசி மகனாகப் பிறந்தவர். சிறு குழந்தை முதலே தனியாகவே இருந்து வந்திருக்கிறார்; விளையாட்டுப் பருவத்திலும் யாருடனும் சேராது தனித்தே வாழ்ந் திருக்கிறார். இறைவன்மீது நீங்காத பற்றுக் கொண்டவர். குருமூர்த்தியாக விநாயகப் பெருமானை ஏற்றுக்கொண்டவர். 16-வது வயது முதல் உழவுத் தொழிலில் ஈடுபட்டு வந்திருக் கிறார். அப்போது அவ்வூரில் கொடிய பஞ்சம். ஆகவே தூத்துக் குடிக்குச் சென்று தானியங்களை வாங்கி வந்து, வாங்கிய விலைக்கே மக்களுக்குக் கொடுத்திருக்கிறார். ஊர் மக்கள்மீது மிகுதியான அன்பு கொண்டவர். எப்போதும் இறைவனையே நினைத்துக் கொண்டிருப்பார்; அடிக்கடி நிஷ்டையில் இருப்பார். இப்படியே தன் வாழ்க்கையை ரெட்டியபட்டியில் கழித்து வந்தார். அதன்பின் மதுரைக்குச் சென்று மீரான் சாயுபு கடையில் கணக்குப் பிள்ளையாக இருந்தார். அப்போதுதான் அவருடைய வாழ்க் கையில் பெருமாறுதல் ஏற்பட்டது. அதிகாலையில் எழுந்து வைகைக் கரைக்குச் சென்று நீராடுவது, தியானத்தில் இருப்பது, குருநாதனான விநாயகரை வணங்குவது, விஷக்கடிக்கு ஜபிப்பது போன்ற வழிகளில் தன்னை ஈடுபடுத்தி முழுக்க முழுக்கத் தொண்டுள்ளம் படைத்தவராக ஆக்கிக் கொண்டார். அப்போது தான் அவருக்குத் திருமணம் நடந்தது. திருமண வாழ்க்கை அவரின் ஆன்மீக வாழ்க்கைக்கு இடையூறாக இல்லை. முன்னை விட அவருக்கு அடியவர்கள் அதிகமாக வந்துசேர்ந்தார்கள். கடை முதலாளிக்கு எவ்வித இடையூறுமின்றி தன் செயலிலும் கவனம் செலுத்தினார். எவ்வித நோய்க்கும் மந்திரித்து திருநீறு கொடுப் பார். தண்ணீரிலேயே நீராட வேண்டும் என்று பணிப்பார். அப்போது அவர் தந்தை இறந்துவிட்டார். அச் செய்தியும் அவரைப் பாதிக்கவில்லை. மீரான் சாயுபு கடையின் முன் திண்ணையில் அமர்ந்து பேசா நோன்பு கொண்டார். ஒரு மண்டலம் வரை இருந்தார். கடைக் கணக்குகளையும் தவறாது எழுதி வந்தார். வந்த அடியவர்கள் கேட்பதற்கு எழுத்தில் பதில் அளித்தார். அடியவர்கூட்டம் பெருகவே அவரை அப்படியே

எடுத்து வேறு இடத்தில் வைத்தார்கள். இதனால் அவர் யாருக்கும் இடைஞ்சலாக இருக்கக் கூடாது என்று தனியாக யாருக்கும் தெரியாது பொதிகை மலைச் சாரலுக்குச் சென்று செண்பகமாதேவி கோயிலுக்கருகில் உள்ள குகையில் தவமேற் கொண்டார். அப்போது அவருடைய மனைவியும் அண்ணன் மகள் பிச்சாண்டிப் பிள்ளையும் மதுரையிலிருந்து ரெட்டியபட்டிக்கு வந்து சேர்ந்தார்கள். பொதிகைச் சாரலில் சுவாமிகள் தீவிரமாகத் தவத்தில் ஈடுபட்டார்கள். முன்னையவிட உருவத்தில் மாறுபாடு ஏற்பட்டது. அப்போது அவருக்கு வயது 35 ஆகும். அவருடைய தாய், நோய்வாய்ப்பட்டார். அவரைக் கண்டு வருவதற்காக ரெட்டியபட்டிக்கு வந்து சேர்ந்தார். தாய்க்குப் பாதபூசை தினமும் செய்து அருகிலேயே இருந்தார். அது தாய்க்குத் தெம்பாக இருந்தது. அப்போது இவரைக் காண்பதற்காக அடிய வர்கள் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வந்தார்கள். வீட்டில் அவர் களோடு அளவளாவுதற்கு இடம் போதாததால் சுவாமிக்கு மனக் குறை ஏற்பட்டது. இதனால் என்ன செய்யலாமென்று மனத்தில் யோசித்தவாறு ஒருநாள் அதிகாலையில் நீராடுவதற்குக் கண்மாய்ப் பக்கம் போனார். போகும் வழியில் ஒரு கருங்கல் தென்பட்டது. அது என்னவென்று பார்க்கும்போது விநாயகர் சிலையாகத் தென் பட்டது. ஆகவே அதைக் கொண்டுவந்து புளியந்தோப்பில் வைத்துப் பிரதிஷ்டை செய்தார்கள். அன்றிலிருந்து அவ்விடத்தி லேயே அடியவர்களைக் கண்டு வந்தார்கள். சித்திவிநாயகர் என்று பெயர் சூட்டப் பட்டது. மக்கள் கூட்டம் சுவாமிகளின் பெருமையைக் கேட்டு வந்த வண்ணமிருந்தனர். எல்லா நோய்க்கும் குருமூர்த்தி விநாயகனை நினைத்து நோய் தீர்க்கும் மருந்தாக திருநீற்றைக் கொடுத்தார்கள். நோய் நீங்கி குணமடைந்து சுவாமிகளின் நீங்காத அடியவரானார்கள். விஷக்கடிக்கும் திருநீறு கொடுத் தார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக தண்ணீரிலேயே குளிக்கச் சொன்னார்கள்; வெந்நீர் கூடக் குடிக்கக் கூடாது என்று சொன் னார்கள். இதை அடியவர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

இந்த சமயத்தில் அவருடைய தாய் இறந்துவிட்டார். அவரை எரிககக்கூடாது என்றும புதைக்க வேணடும என்றும சுவாமிகள் சொல்லிவிட்டாாகள். அவர்கள சைவப் பிள்ளைகள் வழக்கப்படி பிணத்தை எரிக்க வேண்டும. ஆனால் அவருடைய தாயைப புதைததார்கள. அதன்பின் வட்டில சாய்வு நாற்காலியில் அமர்ந்து தயானம மேறகொண்டார்கள. ஒரு மண்டலம்வரை இருந்தார்கள். இதைக் கண்டவர்கள் பயந்துவிட்டார்கள். உரக்கக் கத்திப் பேசி

எழுப்பினார்கள். இதனால் இடையூறு நேர்ந்தது என்று நினைத்து யாருக்கும் தெரியாது சுவாமிகள் பொதிகை மலைக்குச் சென்று தவம் மேற்கொண்டார்கள். அதன்பின் தமிழகத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் சென்று அடியவர்களுக்கு நல்லது செய்தார்கள். இறுதிக் காலத்தில் ரெட்டியபட்டிக்கு வந்து தான் பிறந்து வளர்ந்த வீட்டிலேயே திருக்காப்பிட்டுக் கொண்டார்கள். அச்செய்தி எல்லா அடியவர்களுக்கும் தெரிவிக்கப்பட்டது. அவர்கள் வருவதற்கு மூன்று தினங்கள் ஆகிவிட்டது. அதன்பின் சுவாமிக்கு அவ்வீட்டிலேயே சமாதி வைத்தார்கள் (சேது, இரா., 13-9-1984).

**அப்பணசாமி**

நாகலாபுரத்திலிருந்து விளாத்திகுளம் செல்லும் சாலையில் ஜமீன் கோடாங்கிபட்டி என்ற ஊர் இருக்கிறது. இங்குதான் அப்பணசாமி கோவில் இருக்கிறது. இதைக் கோவில் என்று சொல்வதை விட மடம் என்றே சொல்கிறார்கள். அப்பணசாமி மடம் என்றே அழைக்கிறார்கள்.

அப்பணசாமி ஜமீன் கோடாங்கி பட்டியில் வாழ்ந்தவர்; ராஜ கம்பளநாயுடு (சில்லவார்) இனத்தைச் சேர்ந்தவர்; துறவியாக வாழ்ந்தவர்; குறி சொல்லி மக்களுக்கு நேர்ந்த, நேரும் இடையூறுகளைச் சொல்லி அவற்றைப் போக்கப் பரிகாரமும் கூறி வந்தவர்; சித்து விளையாட்டில் தேர்ந்தவர். ஒருநாள் தான் அடங்கப் போவதாகக் கூறிவிட்டு உயிரை விட்டார்; கோடாங்கிபட்டியிலுள்ள அவருடைய வீட்டில்தான் உயிர் பிரிந்தது. ஆவணி மாதம் 25-ஆம் தேதி உயிர் பிரிந்தது. ஆவி, மனித உருவத்தில் அருகிலுள்ள மகராஜபுரத்திற்கு சென்றது. வாணியச் செட்டியார் வீட்டிற்குப் போய், 'கோடாங்கிபட்டியில் என் வீட்டில் ஒரு விஷேசம்; அதற்கு எண்ணெய் கொண்டுபோய்க் கொடு' என்று சொல்லிவிட்டு நாகலாபுரத்திற்குச் சென்றது; அங்கு பண்டாரத்திடம் பூமாலை கொண்டு போய் வீட்டில் கொடுக்கவும்; அங்கு விசேஷம் என்று சொல்லிவிட்டு வடக்கு நோக்கிப் போய்க் கொண்டே இருந்தது. வாணியச் செட்டியாரும், பண்டாரமும் ஆவி சொன்னபடி எண்ணெயும் பூவும் கொண்டு போய்க் கொடுத்தார்கள். வீட்டில், யார் சொன்னது என்று கேட்டார்கள்; இவர்கள் நடந்ததைக் கூறினார்கள், உடனே கோடாங்கி பட்டியிலிருந்து மக்கள் மனித உருவில் செல்லும் ஆவியைப் பின் தொடர்ந்தார்கள். பந்தல்குடிக்கு அருகில் ஆவியைக் கண்டார்கள்; தங்கள் ஊருக்குத் திரும்ப வேண்டுமென்று கெஞ்சினார்கள்; அதற்கு ஆவி மறுத்து விட்டது. பாதரட்சையை எடுத்துக்

கொண்டுபோய் வணங்குமாறு சொல்லிவிட்டது. அவ்வாறே அவர்களும் செய்தார்கள் (சீனிவாசன், நு., 3-9-1984).

இன்று மடம் உள்ள இடத்தில்தான் அப்பணசாமியை சமாதி வைத்தார்கள். அங்கு எப்போதும் வழிபாடு நடக்கும்; வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் மக்கள் திரளாக வந்து வழிபடுகிறார்கள்; குறி கேட்டுச் செல்லுகிறார்கள்; பூசாரிதான் சுவாமியை நினைந்து குறி சொல்லுகிறார்; பேய் பிடித்தவர்களுக்குப், பேய் விரட்டத் தாயத்துக் கட்டிவிடுகிறார்கள். அவர் அடங்கிய—சமாதியான ஆவணி மாதம் 25-ஆம் தேதி குருபூசை நடத்தப்படுகிறது; சிறப்பு வழிபாடு நடத்தப்படுகிறது. இரவில் யாருக்கும் தெரியாமல் ஆட்டுக்கிடா காவு (பலி) கொடுக்கப்படுகிறது. பொங்கல் வைக்கப் படுகிறது. அவரவர்கள் நேர்த்திக் கடனாகவும் வழிபாடு நடந்தி, பலி கொடுக்கிறார்கள்; மொட்டை எடுக்கிறார்கள்; அப்பணசாமி என்று பெயர் சூட்டுகிறார்கள்.

ஒரு வீட்டில் ஒருசமயம், மனைவி பன்றியை அப்பணசாமிக்கு நேர்ந்துவிட்டிருக்கிறார்; கணவன் எப்போதுவென்றான் சோலை சாமிக்கு நேர்ந்துவிட்டிருக்கிறார். குறிப்பிட்ட நாள் வந்தவுடன் அந்த மிருகத்திற்கு மாலை போட்டு, கணவன், மனைவி ஓட்டிக் கொண்டு சென்றார்கள்; ஆனால் பன்றி, அப்பணசாமி கோயில் வந்தவுடன் நின்றுவிட்டது. ஆகவே கணவன் மட்டும் சோலைசாமி கோயிலுக்குச் சென்றார். நடந்ததைக் கூறினார்; கோவில் பூசாரி, அம் மிருகம் அந்தக் கோயிலிலேயே இருக்கட்டும் என்று சொல்லி விட்டார் (முத்துச்சாமி, 2-10-1984).

இன்று அப்பணசாமி மடத்தை அப்பய நாயக்கர், முத்துச்சாமி நாயக்கர் ஆகிய இருவரும் நிர்வகித்து வருகிறார்கள். விளாத்திகுள வட்டாரத்தில் அப்பணசாமி கோயிலுக்கு, மக்கள் மத்தியில் செல் வாக்குப் பெருகி வருகிறது.

**லெக்கப்பசாமி**

விளாத்திகுளம் எப்போதுவென்றான் சாலையில் உள்ள சிவ ஞானபுரத்தில் லெக்கப்ப சுவாமி கோயில் உள்ளது. இது ஒரு சமாதிக் கோயில் ஆகும். அவ்வூரில் துறவியாக வாழ்ந்தவர் லெக் கப்ப சாமி; அவர் மக்கள் சேவையில் ஈடுபாடு கொண்டிருந்தவர்; சித்து வேலை செய்தவர்; தெய்வ நிலைக்கு உயர்ந்தவர். அவர் இறந்தவுடன் அவருக்குச் சமாதி வைத்து வழிபடுகிறார்கள்.

வைகாசி மாதம் திருவோண நட்சத்திரத்தில் சுவாமிகள் அடங்கினார்; ஆகவே அந்த நாளில் அதே நட்சத்திரத்தில் சுவாமிகளுக்குச் சிறப்பு வழிபாடு நடத்துகிறார்கள். ஆரம்பப் பள்ளி ஆசிரியர் ஏ. சந்திரசேகர் என்பவர்தான் இச்சமாதிக் கோயிலுக்குப் பூசாரி; இவர் ஐயர் இனத்தைச் சார்ந்தவர். இக்கோயிலில் பலி கொடுப்பதில்லை; மற்றபடி பொங்கல் வைத்து ஊர் மக்கள் அனைவரும் வேறுபாடின்றி வழிபடுகிறார்கள்.

### சங்குச்சாமி

வெம்பூரிலிருந்து சாத்தூர் செல்லும் சாலையில் உள்ள ஊர் மாவில்பட்டி. இவ்வூரில் சங்குச்சாமி என்ற சமாதிக் கோயில் உள்ளது.

நாயக்கர் இனத்தில் பிறந்த சங்குச்சாமி துறவறம் மேற்கொண்டு மக்கள் தொண்டு செய்து வந்தவர். அவர் சமாதியானவுடன் கோயில் கட்டி வழிபடுகிறார்கள்; இந்தக் கோயிலுக்குப் பிள்ளை இனத்தைச் சேர்ந்தவர் பூசாரியாக உள்ளார். சிலை இல்லை. வெறுமனே பீடம் மட்டும் கட்டியிருக்கிறார்கள். பங்குனி மாதம் உத்ராட நட்சத்திரமும் நவமியும் கூடிய நேரத்தில் சுவாமிகள் அடங்கியதால், அதே நாளில் சுவாமிகளுக்குக் குருபூஜை நடத்துகிறார்கள். பொங்கல் வைத்து வழிபடுகிறார்கள். பலி கொடுப்பதில்லை.

### முத்தையசாமி

வெம்பூர் பந்தல்குடி சாலையில் இருப்பது அழகாபுரி என்ற கிராமம். இங்கு முத்தையசாமிக்குச் சமாதிக் கோயில் உள்ளது. கற்சிலை இருக்கிறது. விஷக்கடிக்கு நேர்த்திக் கடன் போட்டு மக்கள் வழிபடுகிறார்கள். பொங்கல் வைக்கிறார்கள். சேவல், ஆட்டுக்கிடா ஆகியவற்றைப் பலியிட்டு வழிபாடு நடத்துகிறார்கள். இச்சுவாமிகள் நாடார் இனத்தைச் சேர்ந்தவர். நாடார் இனத்தைச் சார்ந்தவரே பூசாரியாக உள்ளார் (பாண்டியராசன், மு., 15-9-1984).

### குப்புசாமி

நாகலாபுரம் பெருநாழிச் சாலையில் இருப்பது காடல்குடி ஊர். இவ்வூரில் குப்புசாமிக்குச் சமாதிக் கோயில் இருக்கிறது. இதை முகமதியர்களும் இந்துக்களும் வணங்குகிறார்கள். பலி கொடுத்து வணங்குகிறார்கள். குப்புசாமி என்பவர் பிள்ளை

இனத்தைச் சார்ந்தவர்; காடல்குடி ஊரினர். அவர் வெளியூர் சென்றபோது முகமதிய மதத்திற்கு மாறினார்; பின் சொந்த ஊருக்கு வந்து, இறந்து விட்டார்; தெய்வ நிலைக்கு உயர்ந்தவர். ஆகவே அவருக்குச் சமாதி கட்டினார்கள். இச்சமாதிக் கோயிலை இந்துக்களும் மகமதியர்களும் வணங்குகிறார்கள். ஊர்த்திரு நாள் சமயம், பொங்கல் வைத்து ஊர்மக்கள் வணங்குகிறார்கள்; மிருக பலி கொடுக்கிறார்கள். இப்பொங்கல் முடிந்தவுடன் மதுரையிலிருந்து முஸ்லீம்கள் வந்து தர்கா வழிபாடு நடத்துகிறார்கள். எந்தவிதச் சச்சரவும் இல்லாது—சமய வேறுபாடு கருதாது வழிபடுகிறார்கள். இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்கு எடுத்துக் காட்டாக இருக்கிறது.

இங்குக் கூறிய செய்திகளிலிருந்து திராவிடத் தெய்வங்களை வணங்குபவர்களாகிய திராவிடர்கள் இறந்தவர்களைப் புதைத்து வந்தார்கள் என்பது தெரிகிறது; அவர்களில் தெய்வ நிலைக்கு உயர்ந்தவர்களைச் சமாதி கட்டி வணங்கி வருகிறார்கள் என்றும் தெரிகிறது. தாமாகவே அடங்கிச் சமாதியானவர்களும் உண்டு. இவ்வாறு சமாதியானவர்களை—முன்னோர் வணக்கமாகக் கொண்டு வழிபடுகிறார்கள் என்றும் தெரிகிறது; இச்சமாதி வழிபாடு திராவிடத் தெய்வ வழிபாடேயாகும்.

# 9. துணைத் தெய்வங்கள்

மக்களைக் காக்கத் தெய்வங்கள் இருக்கின்றன; அதேபோல் தெய்வங்களைக் காக்க, முதன்மைத் தெய்வத்திற்கு மக்களைக் காக்கும் பணியில் உறுதுணையாக இருக்கத் துணைத் தெய்வங்கள் உதவுகின்றன. மக்கள் கொடுக்கும் நேர்த்திக் கடன்களைத் தாம் பெற்று முதன்மைத் தெய்வங்களுக்கு கொடுக்கும் வழிமுறையாகத் துணைத் தெய்வங்கள் இருக்கின்றன. இதை எல்லாச்சமயக் கடவுளரின் கோயில்களிலும் காணலாம். இயக்கி, இந்து, பௌத்த, சமணக் சமயக் கடவுளரின் துணைத் தெய்வமாக விளங்குவதைக் காணலாம்.

நாட்டுப்புறத் தெய்வங்களின் துணைத் தெய்வங்களாக கருப்ப சாமி, முனியசாமி, வைரவன் ஆகியவையே பெரும்பான்மையாக இருக்கின்றன. வைரவன் அம்மன் தெய்வத்திற்கும் ஆண் தெய்வத் திற்கு கருப்பசாமி, முனியசாமி, மதுரை வீரன் ஆகியவைகளும் துணைத் தெய்வங்களாக இருந்தபோதிலும் சில இடங்களில் தனித் தெய்வங்களாகவும் இருக்கின்றன. வைரவன் சிவஞானபுரத்தில் மட்டும் முதன்மைத் தெய்வமாக வழிபடப்படுகிறான். இதேபோல் காளியம்மன் குளத்தூரில் மட்டும் உச்சினிமாகாளி கோயிலில் துணைத் தெய்வமாக இருக்கிறாள். பெண் தெய்வக் கோயில்களில் ஆண் தெய்வங்களாக இருக்கின்றன; ஆனால் ஆண் தெய்வக் கோயில்களில் பெண்களும் ஆண்களும் துணைத் தெய்வங்களாக இருக்கின்றன. இது பெரும்பான்மை பற்றியே சொல்லப்பட்டது. ஆனால் விதி விலக்கான செய்திகளும் உண்டு.

கருப்பசாமிக் கோயிலில் கருப்பசாமியே துணைத் தெய்வமாக இருக்கிறது. சமயக் கருப்பு, சங்கிலிக் கருப்பு போன்ற தெய்வங்கள் இருக்கின்றன. உத்தண்டசாமி, சமயக்கருப்பு அங்காள ஈசுவரியின் துணைத் தெய்வங்கள்.

**கருப்பசாமி**

அய்யனார் கோயில்களில் கருப்பசாமிதான் துணைத் தெய்வம்; கருப்பசாமியே பலி வாங்குகிறார். அய்யனார் வேட்டைக்குச்

செல்லும்போதும், மக்களைக்காக்கும் பணியில் ஈடுபடும்போதும் பக்க பலமாக இருக்கிறார். புதூர் மாதா கோவில், வீர காளியம்மன் கோவில், அங்காள ஈசுவரி கோயில்களில் துணைத் தெய்வமாக இருக்கிறது. வைப்பார் மல்லம்மாள் கோயிலிலும் துணைத் தெய்வமாக இருக்கிறது.

### முனியசாமி

தமிழ்நாட்டின் பிற பகுதிகளில் அம்மன் கோயில்களில் துணைத் தெய்வமாக இருந்தபோதிலும் விளாத்திகுள வட்டத்தில் துணைத் தெய்வமாக இல்லை; அதே போன்றுதான் ஆண் தெய்வக் கோயில் களிலும் துணைத் தெய்வமாக இல்லை.

### வைரவன்

அம்மன் கோயில்களில் மட்டும் துணைத் தெய்வமாக இருக்கக் கூடிய அம்சத்தைப் பெற்ற ஒரே தெய்வம் வயிரவனாகும். காளி யம்மன் வடக்கு வாய்ச்செல்வி, பத்ரகாளி, சந்தன மாரியம்மன், காமாட்சியம்மன் ஆகிய கோயில்களில் இவ்வட்டத்தில் துணைத் தெய்வமாக இருப்பது வயிரவனே ஆகும்.

### சப்பாணி

இதைச் சப்பாணிக் கருப்பு என்றும் கூறுகிறார்கள். தாப்பாத்தி காளி கோயிலில் வைரவனுக்குத் துணையாக காளிக்குத் துணைத் தெய்வமாக இருக்கிறது.

### குப்பையாண்டி

வைப்பார் அய்யனார் கோவிலில் கருப்பசாமியும் குப்பையாண்டி யும் துணைத் தெய்வங்களாக இருக்கின்றன.

### ஊர்க்காவலன்

புதூர் வீரகாளியம்மன் கோயிலில் கருப்பசாமி வைரவன் துணைத் தெய்வமாக இருப்பது போன்று ஊர்க்காவலனும் துணைத் தெய்வமாக இருக்கிறது; ஊரைத் தீய சத்திகளிலிருந்து காக்கும் தெய்வமாக ஊர்க்காவலன் இருக்கிறது.

### சன்னாசி

லாடசன்னாசி முருகன் கோயிலில் துணைத் தெய்வமாக இருக்கிறது; வைப்பாறு மல்லம்மாள் கோயிலில் சன்னாசி துணைத்

தெய்வமாக இருக்கிறது. மல்லம்மாள் கோவில் ஒரு குலத் தெய்வக் கோயில்; மாலைக் கோயில். இங்கு சன்னாசி தவிர, சித்தாண்டி பெருமாள், கருப்பசாமி, சங்கிலிக் கருப்பன், சின்னக் கருப்பன், பேச்சி, ராக்காச்சி, பட்டாணி ஆகிய தெய்வங்களாக இருக்கின்றன. பட்டாணி என்பது சாயபு ஆகும். பேச்சி, ராக்காச்சி, பெத்தனாட்சியம்மன் கோயிலிலும் துணைத் தெய்வமாக இருக்கின்றன. ராக்கு, இருளாயி, கூடாரச் செல்வி ஆகியவை முருகன் கோயிலில் துணைத் தெய்வங்களாக இருக்கின்றன; அக்னி வீரனும் இங்கு துணைத் தெய்வம்தான்.

துணைத் தெய்வங்கள் ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி, எல்லாம் எல்லாக் கோயில்களிலும் துணைத் தெய்வங்களாக இருக்கின்றன. அந்தந்தக் காலக் கட்டங்களில் மடிந்த நல்லவர்களை ஊர்மக்கள் துணைத் தெய்வங்களாக்கி இருக்கிறார்கள் என்பது உண்மைச் செய்தி. அவரவர்களுக்கு விருப்பப்பட்ட மக்கள் தலைவர்களை அவர்கள் வாழும் காலத்தில் துணைத் தெய்வங்களாக ஆக்கி வைத்துள்ளார்கள் என்பது தெரிகிறது.

# 10. நாட்டுப்புறத்தெய்வங்களின் தோற்றமும் வளர்ச்சியும்

இந்துத் தெய்வங்களினின்றும் வேறுபட்டன திராவிடத் தெய்வங்கள் என்றும், தென்னிந்தியாவில் வழங்கும் நாட்டுப்புறத் தெய்வங்கள் என்பது திராவிடத் தெய்வங்களே என்றும் முன்னைய பகுதிகளில் சொல்லப்பெற்றது; தென்னிந்தியாவில் வாழும் மக்களில் 80 விழுக்காடு மக்கள் திராவிடத் தெய்வங்களையே தம் தெய்வங்களாக வழிபட்டு வருகிறார்கள். இத் தெய்வங்கள் அம்மக்கள் தோன்றி வளர்ந்ததிலிருந்து அவர்களோடு அவர்களாகவே கலந்து வந்திருக்கின்றன. இத் திராவிடத் தெய்வங்கள் அவர்கள் வாழ்விலிருந்து பிரிக்க முடியாத அளவில் இருக்கின்றன என்பதும் சொல்லப் பெற்றது.

திராவிட மக்கள் - பெரும்பான்மையோர் கிராமவாசிகளாக இருந்த காரணத்தால் படிப்பறிவில்லாதவர்களாக இருந்தார்கள்; இருக்கிறார்கள். ஆகவே அவர்கள் தம் தெய்வங்களைப் பற்றிய தத்துவங்களை,வரலாறுகளை எழுத்து வடிவில் பாதுகாக்கவில்லை. மாறாகத் தம் நினைவுகளிலே தேக்கி வைத்திருந்தார்கள்-இருக்கிறார்கள்; இதனால்தான் அவர்கள் தெய்வங்களைப் பற்றிய செய்திகளை இலகுவில் படித்தவர்க்கம்-சொகுசுப் பேர்வழிகள் இந்துச் சமயத் தெய்வங்களோடு இணைத்து அவதாரமாக்கிவிட்டார்கள். இந்த நிலை எப்படி ஏற்பட்டது; இந்துத் தெய்வம் திராவிடத் தெய்வங்களின்மேல் ஆதிக்கம் செலுத்தியதா, திராவிடத் தெய்வங்கள் ஆதிக்கம் செலுத்தியதா, என்பதையும் இங்குக் காணலாம்; எவ்வாறு திராவிடத் தெய்வங்கள் தோற்றம் கொண்டு வளர்ந்து நிற்கின்றன என்பதையும் காணலாம்.

## திராவிடத் தெய்வங்களின் தோற்றம்

திராவிடத் தெய்வங்கள் மக்களின் முன்னோர்களே என்றும் இறந்தவர்களின் ஆவியையும் வணங்கி வந்தார்கள் என்றும், நடுகல்லையும் தெய்வமாக்கினர் என்றும், முன்னைய பகுதிகளில் சொல்லப்பெற்றன; மேலே கண்ட முறைகளில்தான் திராவிடத் தெய்வங்கள் தோன்றின. சமாதியை வணங்கி வருகிறார்கள்;

சுமைதாங்கிக் கல்லையும் தெய்வமாக்கினர்; தீக்குழிப் பாய்ந்த பெண்களையும் வழிபட்டு வருகிறார்கள். இவர்களைப் பற்றிய கதைகள் இன்றும் கிராமங்களில் வழங்கி வருகின்றன; பல வற்றிற்குக் கதைகள் இல்லாது வெறுமனே இருக்கின்றன; முன் னோர் வழிபட்டு வந்த முறையிலேயே வணங்கி வருகின்றனர். இக்கதைகள் திராவிடத் தெய்வங்களைப் பற்றி அறிந்து கொள்ளப் பயன்படும் முக்கியச் செய்திகளாகும்; வரலாற்று அம்சங்கொண்ட வையாகும்.

பூச்சம்மா என்ற பெண் ஆந்திர நாட்டில் வாழ்ந்து வந்தவள்; அவள் கம்மவார் வகுப்பைச் சார்ந்தவள்; அவள் கணவன் வெளியூருக்கு வாணிபம் செய்யச் சென்றிருந்தான்; அவன் இறந்துவிட்டதாகச் செய்தி வந்தது; நம்ப மறுத்தாள் அப்பெண்; ஆனால் மீண்டும் செய்தி வந்தது; நடந்தது உண்மையே உடலை எரிக்க ஏற்பாடு செய்தனர்; ஆனால் அவள் எரிக்க விடவில்லை. தீக்குழி ஏற்பாடு செய்து கணவன் உடலுடன் தானும் இறங்கி இறக்க முடிவு செய்தாள்; ஊரார் உடன்படவில்லை; இறுதியில் அவள் முடிவுக்கு உடன்பட்டனர்; பூச்சம்மாவும் தீக்குழி யிறங்கி தன்னை மாய்த்துக் கொண்டாள்; நான்கு நாட்கள் கழித்து அவ் வழியே சென்ற பையன் ஒருவன் அப்பெண்ணின் தந்தையிடம் வந்து ஒரு செய்தி சொன்னான்; தீக்குழியில் தாலிப் பொட்டும், சேலையின் ஒரு பகுதியும் கருகாது இருக்கக் கண்டதாகக் கூறினான். உடனே அவர் அவ்விடத்திற்குச் சென்று அவைகளை எடுத்து ஒரு பானையில் வைத்து வழிபட்டார்; இதில் ஏதோ அதிசயம் இருக்கவேண்டும்; அவள் தெய்வமாகிவிட்டாள் என்று ஊரார் நினைத்து வழிபடலாயினர் (எல்மோர், டபிள்யூ. டி., 1984 : 59 - 60).

இதே கதையைத்தான் தமிழ்நாட்டில் சீலைக்காரி அம்மன் கதையாகவும் கூறுகிறார்கள்; சீலைக்காரியம்மன் மதுரை மாவட் டத்தில் மூன்று இடங்களில் சிறப்பாக இருக்கிறது; திருமங்கலம் அருகில் மேலக்கோட்டை என்ற ஊர் உள்ளது. இங்கு ஜமீன் குடும்பத்தைச் சேர்ந்த பெண், சேர்வை இனத்தைச் சேர்ந்த ஒரு போர் வீரனைக் காதலித்தாள்; ஜமீந்தார் அனுப்பக் கவுண்டர் இனத்தைச் சார்ந்தவர்; ஆகவே அவர் தடை விதித்தார்; யாருக்கும் தெரியாது போர்வீரனைக் கொன்றுவிட்டார். இதைக் கேள்விப் பட்ட ஜமீந்தார் மகள் அப்பிணத்தைப் பார்க்கச் சென்றாள்; தீ வளர்த்து அப்பிணத்துடன் தானும் பாய்ந்து மடிந்தாள்; மறுநாள்

பார்க்கும்போது கருவளையலும், சேலைத் துண்டும் கருகாது இருந்தன; அதைப் போர்வீரனுடைய வீட்டார் எடுத்து புனிதப் படுத்திக் கோவில் கட்டி வைத்து வணங்கிவருகின்றனர் (சித்த மல்லு, கோ., 23-8-1984). இதுவும் ஒரு மாலைத் தெய்வ வணக்கம்தான். ஆந்திராவில் கோயில்கொண்ட பூச்சம்மாவும் மாலைத் தெய்வம்தான்; இதை அங்கு பெறந்தாளு என்று அழைக்கின்றனர். இக்கதை போன்றுதான் தமிழ்நாட்டில் ஆங்காங்கே உள்ள சீலைக்காரியம்மனைப் பற்றியும் கதை வழங்கி வருகினறன. விளாத்திகுள வட்டத்தில் கோவில் குமாரெட்டையாபுரத்தில் சீலைக்காரியம்மன் கோயில் இருக்கிறது. இதைப் பிள்ளைமார் வணங்கி வருகின்றனர். இது ஒரு பிடிமண் கோயிலாகும்; இதன் மூலக் கோயில் நெல்லை மாவட்டச் செய்துங்க நல்லூரில் உள்ளது.

ஆந்திராவில் உள்ள நெல்லூர் மாவட்டத்தில் தர்சி வட்டத்தில் முப்பரமுவரி பாளையம் என்ற ஊரில் லிங்கமமா என்ற பெண் தன் கணவனுடன், அதே இனத்தைச் சார்ந்த ஒருவர் வீட்டில் வேலை செய்து வாழ்ந்து வந்தாள்; அவர்கள் ஏழைகள்; ஒரு சமயம் முதலாளி வீட்டில் திருடு போய்விட்டது; அப்பெண் எடுத்ததாகச் சந்தேகப்பட்டு போலீஸில் வழக்குக் கொடுக்க இருந்தார்கள்; அப் பெண் திருடவில்லை; மானத்திற்கு அஞ்சி கிணற்றில் குதித்து இறந்து விட்டாள்; இந்த துக்க நிகழ்ச்சி நடந்த சில நாட்களில் முதலாளி வீட்டில் சில தொல்லைகள் நிகழ ஆரம்பித்தன; அதன் பின் லிங்கம்மா முதலாளியின் கனவில் தோன்றி, தனக்குத் தொல்லை கொடுத்த காரணத்தால் இவ்வித நிகழ்ச்சிகள் நடக்கின் றன; தன்னைச் சரியாக வழிபட்டு வந்தால் இத்தொல்லைகள் எல்லாம நீங்கும் என்று சொன்னது. அதன்பின் முதலாளியும் ஊராரும் அப்பெண்ணிற்கும் அவள் கணவனுக்கும் கோயில் கட்டி வழிபட்டு வருகிறார்கள் (எல்மோர், டபிள்யூ.டி., 1984:61-61).

இதே போன்றுதான் கீழக்கல்லூரணியில் கோணம்மாள் என்ற ஒரு கவுண்டர் இனத்தைச் சேர்ந்த பெண் வாழ்ந்து வந்தாள்; அவளுடைய கணவன் வீட்டில் தொல்லைக் கொடுத்ததால் கிணற்றில் விழுந்து மடிந்தாள்; அவள் பேய் வடிவில் திரிவதாகச் சொல்லப்பட்டது; அவளுக்குக் கண்மாய்க் கரையில் கோயில் வைத்து வழிபடுகிறார்கள்; அவளுடைய உறவினராகிய ஒரு பெண் ணுக்குச் சாமி வந்து சொன்னது; தன்னை வழிபட்டால் துன்பம் நீங்கும்; சுகம் கொடுப்பேன் என்று கூறியது. ஒவ்வொரு வெள்ளிக் கிழமை தோறும் அதை வழிபடுகிறார்கள்; சாமி அப்பெண்ணிற்கு

வருகிறது; மந்திர வேலை செய்யப்படுகிறது; திருநீறு, கற்கண்டு வரவழைத்துப் பிரசாதமாகக் கொடுக்கப்படுகிறது.

இவ்விரண்டு கதைகளும் பேய் பற்றியனவே; இருவரும் கணவன் இருக்க இறந்தவர்கள்; ஆனால் தீக்குழி பாய்ந்து இறக்கவில்லை; சுமங்கலியாக இறந்தவர்கள்; ஆகவே அவர்களை மாலைத் தெய்வமாக—பெறந்தாளுவாகக் கொள்ளலாம். ஆகத் திராவிடத் தெய்வங்களின் தோற்றம் பேயாகவும்—ஆவியாகவும் இருக்கிறது.

**இந்துக் கோவில் திராவிடக் கோவிலாதல்**

பழனிக்கருகில் ஒரு வனத்தில் பேச்சியம்மன் கோவில் இருக்கிறது; இது ஒரு வனதேவதைக் கோவில்; ஒரு சமயம் ஒரு பிராமணனும் ஒரு திராவிட இனத்தைச் சார்ந்தவனும் வந்திருக்கிறார்கள்; மற்றக் கதைகளிலுள்ளது போன்று பிராமணன் ஒரு பெண்ணால் வஞ்சிக்கப்பட்டு இறந்துவிடுகிறான்; ஆகவே அவன் நண்பனும் இறந்து விடுகிறான்; இருவர்க்கும் அங்கே பேச்சியம்மன் கோவிலுக்குப் பக்கத்தே கோவில் எழுப்பப்பட்டது; பிராமணன் கோவில் நாட்டராயன் கோவில் என்றும் அடுத்தது வீரபத்திரன் கோவில் என்றும் அழைக்கப்பட்டன. வீரபத்திரனை முனியப்பன் என்றும் பல பகுதிகளில் அழைக்கிறார்கள்; வீரபத்திரன், சிவனுடைய கோபத்திலிருந்து பிறந்தவன்; அவதாரம் என்றும் சொல்லுகிறார்கள். ஆக, இங்கு வீரபத்திரக் கோவில் இந்துக் கோவிலாக இருந்திருக்க வேண்டும்; அல்லது திராவிடக் கோவிலாக இருந்திருக்க வேண்டும்; பின் மாற்றப்பட்டிருக்க வேண்டும்; இவ்வாறுதான் பலவிடங்களில் திராவிடக் கோயில்களை இந்துக் கோவிலாக மாற்றியிருக்கிறார்கள்; அதுபோலவே இந்துக் கோவிலைத் திராவிடக் கோவில்களாக ஆக்கியிருக்கிறார்கள்; இங்கு இந்துக் கோவிலைச் சிறந்த கொடூரமான மகா முனியாக—முனியப்பனாக—திராவிடத் தெய்வமாக ஆக்கியிருக்கிறார்கள்.

**திராவிடத் தெய்வக் கோயில் இந்துக் கோயிலாதல்**

ஆந்திராவில் பெஸ்வாடா என்ற ஊரில் கனகதுர்க்கம்மா என்ற கோவில் இருக்கிறது. இக்கோவிலைப் பற்றிய கதை: கனகம்மா ஒரு வணிகருடைய மகள்; அவள் நோய்வாய்ப்பட்டாள்; அவளுக்கு இறைச்சி சாப்பிடவேண்டும் என்று கொள்கை ஆசை; ஆனால் கொடுக்கப்படவில்லை; பின் அவள் இறந்துவிட்டாள்; உடனே அவ்வூரில் கால்நடைகளுக்கு நோய் வந்து இறக்க ஆரம்பித்தன; கனகம்மாதான் அவ்வாறு ரத்தப் பலி கேட்டிருக்கிறாள்; ஆகவே

அவளுக்கு மிருகப் பலி கொடுத்து வழிபட்டால் சரியாகிவிடும் என்று சொல்லப் பட்டது; அதன்படி செய்தார்கள்; கால்நடைகள் நோயி னின்றும் தப்பின. கனகம்மா இந்து சக்தியாகக் கருதப்பட்டதால் அவளுக்குக் கனகதுர்க்காஎன்று பெயர் கொடுக்கப்பட்டது(எல்மோர், டபிள்யூ.டி., 1984:64). இங்கு திராவிடத் தெய்வம்-திராவிட சக்தி-ஆவியானது, இந்துத் தெய்வமான சிவசக்தியாக ஆக்கப்பட்டிருக் கிறது. இதனால்தான் தமிழ்நாட்டில எல்லாக் கிராமங்களிலும் உள்ள துக்கையம்மன் இந்துத் தெய்வமான சிவசக்தியாக ஆக்கப் பட்டிருந்தாலும் அது முழுக்க முழுக்க திராவிடத் தெய்வமான திராவிடச் சக்தியே என்பதில் சந்தேகமில்லை; இக்கோவில்களில் திராவிட முறையில்தான் வழிபாடு நடக்கிறது; மிருகப் பலீ கொடுக்கப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

### மாலைக் கோயில்கள்

தமிழ்நாட்டின் பல பகுதிகளில் மாலைத்தெய்வ வழிபாடு நடந்து கொண்டிருக்கின்றன; அந்தந்தக் கிராமங்களில் இருந்து தீக்குழியிறங்கி தெய்வமானவர்களைத்தான் மாலைத் தெய்வங் களாக வணங்கி வருகிறார்கள்; இவர்களைப் பற்றியக் கதைகள் முன்னைய பகுதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன; இந்த மாலைத் தெய்வங்கள் திராவிடச் சக்திகளாகும்; அதாவது ஆவிகள் தெய்வ நிலைக்கு உயர்ந்த தன்மையைக் குறிப்பதாகும்.

மனிதர்களில் நல்லவர்களாக வாழ்ந்து மடிந்தவர்களுக்கும் நினைவுச் சின்னங்கள் எழுப்பியிருக்கிறார்கள்; அவற்றைத் தெய்வ நிலைக்கு உயர்த்தி வணங்கி வருகிறார்கள். நடுகல் வணக்கம் இவ்வாறு ஏற்பட்டதுதானே; சில கோயில்களில் உள்ள துணைத் தெய்வங்களும் இவ்வாறு இருந்து தெய்வமானவர்களே என்பது பற்றி முன்னைய பகுதியில் சொல்லப்பட்டது.

### சமாதிக் கோயில்கள்

கீழக்கல்லூரணியில் சண்முகநாதன் கோவில் என்று ஒரு கோவில் இருக்கிறது. இது இந்துக் கோவிலா, அல்லது திராவிடக் கோவிலா என்ற ஐயத்தைக் கிளப்பும். சிலை ஒன்றும் இல்லை; கோவில் கட்டிடமும் இல்லை, கண்மாய்க்குள் ஒரு கிணறு இருக் கிறது அந்தக் கிணறு தோண்டும்போது ஒரு வேலும் சில பூசை சாமான்களும் கிடைத்தனவாம்; அவற்றை வைத்துத்தான்-வேலை வைத்துத்தான் பூசை செய்கிறார்கள். வைகாசி மாதம் விசாக

நட்சத்திரத்தில் இதற்குக் குருபூசை நடத்துகிறார்கள்; கிணற்றங் கரையின் கீழ்ப்பகுதியில்தான் இப்பூசை நடத்தப்படுகிறது.

சண்முகநாதன் என்று ஒருவர் இருந்திருக்கலாம்; அவர் இறந்து சமாதியாகி இருக்கலாம்; அதற்குக் குருபூசை நடத்தியிருக் கலாம்; கிணறு தோண்டும்போது வேல் கிடைத்ததால் அதையே தெய்வமாக்கி இதனோடு தொடர்புபடுத்தியிருக்கலாம்; அருகில் கோவில் குமாரெட்டையாபுரத்தில் சுப்பிரமணிய சுவாமி கோவில் இருக்கிறது; இதற்கு மாசி மகத்தில் திருவிழா. இக்கோவில் இவ் வூர் மக்கள் நினைப்பிற்கு வர, போட்டியாக இங்கு திருவிழா நடத்துவதற்காக சமாதிக் கோவிலை சுப்பிரமணியக் கோவிலாக்கிப் பூசை நடத்தியிருக்கலாம். இதனால்தான் இந்துக் கோவில் வழக் கப்படி சப்பரம் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகிறது. இவ்வாறு பல ஐயப்பாடுகளைக் கிளப்பும் வகையில் இக்கோவில் இருக்கிறது.

மேலக்கல்லூரணியில் ஒரு மாலைக் கோவிலுக்குக் குருபூசை நடத்துகிறார்கள்; வைகாசி மாதத்தில்தான், அதுவும் விசாக நட்சத்திரத்தில்தான் நடக்கிறது; ஆகவே போட்டியாக இந்துக் கோவிலாக இருந்ததில் குருபூசை நடத்தியிருக்கலாம். ஆனால் சரியாகச் சொல்லமுடியாதநிலை; ஊர் மக்களும் மழுப்பலான பதிலைத்தான் கூறுகிறார்கள்.

மேற்கண்ட செய்திகளை வைத்துப் பார்க்கும்போது இது ஒரு சமாதிக் கோவிலாக இருந்து குருபூசை நடத்தி, திராவிடத் தெய்வ மாயிருக்க வேண்டும்; ஆனால் பின் அருகிலுள்ள ஊர்க் கோவிலை நினைத்து இதற்கு இந்துக் கோவில் நிலை கொடுத்து இந்து முறைப்படியும் வழிபாடு நடத்தியிருக்க வேண்டும்; பொங்கல்—ஊர்ப் பொங்கல் வைத்து வழிபடுகிறார்கள்; ஆனால் கிடா வெட்டுவது இல்லை. ஆக இந்த முறையிலும் சமாதிகள் திராவிடக் கோவில்களாக ஆகியிருக்க வேண்டும்.

## புராணங்களில் திராவிடத் தெய்வங்கள்

இதுவரை திராவிடத் தெய்வங்களின் தோற்றம் பற்றி ஊர்களில் வழங்கும் கதைகளை அறிந்தோம். இனி புராணங் களில் இந்து தெய்வங்களைப் பற்றிய கதைகளில் திராவிடத் தெய்வங்கள் பற்றிய செய்திகள் எவ்வாறு கலந்துள்ளன என்பது பற்றிக் காணலாம்.

8

புராணங்களில் இந்து தெய்வங்களைப் பற்றிய கதைகள் சொல்லப்பட்டிருக்கின்றன; அவை, கோயில்களிலும், வெளிச் சொற்பொழிவுகளிலும் சொல்லப்படும்போது, நிகழ்ச்சி நடத்துப வர்களின் வசதிக்கேற்பத் திரித்துக் கூறப்படுகின்றன; அப்போது, அவர்களுக்குத் தேவைப்பட்ட—விருப்பப்பட்ட திராவிடத் தெய் வங்களின் கதையைக் கூறிக் கலந்துவிடுகிறார்கள். இவ்வாறு இந்துத் தெய்வங்களின் கதை திராவிடத் தெய்வக்கதைகளின் கலப்பால் புது உருப் பெறுகின்றது. இக்கதைகள் எல்லாம் வாய் மொழியாகவே சொல்லப்பட்டு, பின் ஏட்டுச் சுவடிகளில் தஞ்சம் புகுந்தன.

இந்தக் கதைகள் எல்லாம் மேல்நிலை ஆக்கத்தை (Sanskritization) சார்ந்தவை; திராவிடத் தெய்வங்களை இந்துத் தெய்வங் களோடு இணைக்கும் பாலமாகச் செயல்படுகின்றன; இந்துச் சமயத்தில் திராவிடச் சமயத்தை ஏற்றுக் கொள்ளும் முயற்சி யாகவும் செயல்படுகின்றன; சில சமயங்களில் திராவிடத் தெய் வங்கள் மேல்நிலை ஆக்கம் பெற வேண்டி, விரும்பியே, இந்துச் சமயக் கதைகளோடு இணைத்தும் விடுகின்றனர்.

### சிவபுராணக் கதைகளில் திராவிடத் தெய்வம்

திராவிடத் தெய்வங்களை யெல்லாம் இலகுவில் சிவனோடு தொடர்புப் படுத்தி கதை சொல்லுகிறார்கள். ஆனால் விஷ்ணு வோடு அவ்வாறு சொல்வதில்லை. ஒரு சமயம் நூற்றி ஒன்று அசு ரர்கள் சேர்ந்து சிவனிடம் தவமிருந்து வரம் பெற்றனர்; சாகா வரம் பெற்றனர்; யாரும் தங்களை அழிக்க முடியாதபடி வரம் பெற்றனர். அவர்கள் அனைவரும் ஒருங்கே சேர்ந்து போரிட்டனர். எல்லோரையும் வென்றனர்; மக்களுக்குத் தொல்லை கொடுத்தனர்; இதனால் துயரப்பட்ட மக்கள் சிவனிடம் சென்று முறையிட்டனர். சிவன் தானே மனிதவடிவில் சென்று போரிட்டான்; ஆனால் வெல்ல முடியவில்லை; மடியும் நிலைக்கு வந்துவிட்டான். இதைக் கண் ணுற்ற விஷ்ணு சிவனுக்கு ஒரு யோசனை சொன்னான்; இவர்களை அழிக்க முடியாது; இதற்கு ஒரு வழி கூறுகிறேன். இவர்களுடைய மனைவியர் உத்தம பத்தினியர்; அவர்களால்தான் இவ்வசுரர்கள் வெல்ல முடியாதவர்களாக இருக்கிறார்கள். நாள்தோறும் ஒரு குளத்தில் சென்று குளிப்பார்கள்; குளித்துவிட்டு மணலைச் சேர்த்து வெங்கலப் பானையாக்கி, தண்ணீர் கொண்டு வருவார்கள். அதனைக் கொண்டு சோறாக்கித் தம் கணவன்மார்களுக்குக் கொடுப்பர். இதனை உண்ட கணவன்மார் வெல்லமுடியாத

நிலையை அடைகிறார்கள். அப்பெண்களுக்குக் குழந்தைப் பேறு இல்லை; அதனால் வருந்துகிறார்கள். நீ அக்குளக்கரையில் அரச மரமாக இரு; நான் முனிவராக இருக்கிறேன். குளித்தவுடன் என்னிடம் வருவார்கள்; நான் மரத்தை அணைக்கச் சொல்வேன். நீ அப்போது அவர்களைக் கெடுத்துவிடு; அதன்பின் அவர்கள் கணவன்மார்கள் பலத்தை இழப்பர் என்று சொன்னான்.

இதற்கு சிவன் ஒத்துக் கொண்டான். சொன்னபடியே எல்லாம் நடந்தன; மரத்தை அணைத்தபின், அவர்கள் வழக்கப்படி மணலைக் கொண்டு பானையாக்கினர்; ஆனால் பானை உடைந்து உடைந்து விழுந்தது; ஆகவே வீட்டிற்குச் சென்று பானை எடுத்து வந்து தண்ணீர் கொண்டு போய் சோறாக்கினர்; அதைக் கொண்டு போய் அசுரர்களிடம் கொடுத்தனர்; அவற்றை உண்ட அசுரர்கள் பலமிழந்தனர்; சிவனால் அழிக்கப்பட்டனர்.

அதன் பின் எல்லாப் பெண்களும் பெண்குழந்தைகளைப் பெற்றெடுத்தனர். சிவன்தான் இதற்கு வழி சொல்ல வேண்டு மென்று அவர்களை அனுப்பி வைத்தனர்; சிவன் இந்த பூமிக்கு அவர்களைச் சக்திகளாக அனுப்பி வைத்தான்; மக்களைத் துன்புறுத்துங்கள்; உங்களுக்கு வேண்டிய உணவைக் கொடுப் பார்கள் என்று அனுப்பி வைத்தான். பூமியில் புதுத் தெய்வம் தோன்றும்போது இந்தச் சக்திகள் புதிய வடிவம் கொண்டன. சிவனுடைய மக்களாக இச்சக்திகள் எண்ணப்படுகின்றன; ஆனால் பரவலாக சிவனுடைய மனைவியராகத்தான் நடைமுறையில் எண் ணுகிறார்கள். இதைப் பற்றிய கதை வழங்குகிறது.

கிரிராசு என்று ஒரு அரசன் இருந்தான். அவனுக்கு ஆண் குழந்தைகள் தான் இருந்தன; பெண் குழந்தை இல்லை; ஆகவே சிவனை நோக்கித் தவமிருந்தான். சிவன் மனைவி பார்வதி அவனுக்குத் தானே மகளாய்ப் பிறக்கப் போவதாக அறிவித்தாள்; அரண்மனைக்குப் பக்கத்தில் உள்ள புற்றில் மனித உருவில் குழந் தையாகக் கிடந்தாள்; அன்றிரவு மன்னன் கனவில் இது பற்றிச் சொல்லப்பட்டது. மன்னன் மறுநாள் காலை புற்றைத் தோண்டி எடுக்க உத்தரவிட்டான்; பெண் குழந்தை கண்டெடுக்கப்பட்டது. பார்வதி மனித உருவில் ரேணுகாவாக இருந்தாள்; பலவித பரிசுகள், பலிகள் கொடுத்து அரண்மனைக்குக் குழந்தையைக் கொண்டு வந்தார்கள்.

இந்த ரேணுகாதான் நூற்றி ஒன்று சக்திகளாக மாறியிருப்ப தாகச் சொல்லப்படுகிறது; அவைதான் கிராம தேவதைகள் என்றும்

கூறப்படுகிறது. இக்கதையில் ரேணுகா பார்வதியின் அவதார மாகக் காட்டப்படுகிறது; காளிக்கு நிகராகச் சொல்லப்படுகிறது. இக்கதை, சக்திகளுக்கு மதிப்பும் மரியாதையும் கொடுக்கிறது; திராவிடர்களுக்குத் திருப்தியளித்தற்குச் சான்றாக இருக்கிறது. திராவிட வழிபாட்டின் பலவகைப்பட்ட அம்சங்கள் இதில் சொல்லப் பட்டன; மேலும் திராவிடர்கள் பரவலாகப் புற்றை வணங்கி வரு கிறார்கள்; இப்புற்றுதான் ரேணுகா தோன்றிய இடமாக இருக்கிறது.

தேவதைகள் எல்லாம் சிவனுடைய மனைவியர் என்று சொல்வது உலகம் ஒப்பும் செய்தியாக உள்ளது; திராவிடத் தேவதைகளை இந்துச் சமயத்தில் தொடர்புப் படுத்தி, சிவனுடைய திருமணத்தோடு இணைப்பதும், சிவனுடைய அவதாரத்தோடு இணைத்துப் பேசுவதும் நடைமுறையாக உள்ள பேச்சாகும்; இத்தகைய முக்கிய நிகழ்வாக மதுரை மீனாட்சிக் கல்யாணத்தை எடுத்துக் கொள்ளலாம்.

இன்று மதுரைக் கோயில் சைவ வைணவர் வழிபடும் கோவிலாக இருக்கிறது; கோவிலுக்கு உண்மையிலேயே உரிய தெய்வம் சொக்கலிங்கம்; அவருடைய பெயரிலிருந்தும், வழிபாட்டி லிருந்தும் அவர் முதலில் அவ்வூரைச் சேர்ந்தவரின் ஆவியாக இருந்திருக்க வேண்டும்; பிராமணர்கள், மேல்நிலை ஆக்கத்தால் அத்தெய்வத்தை சிவனுடைய அவதாரமாக்கிக் கொண்டனர் என்று டபிள்யூ. டி. எல்மோர் (1984:83) தம் நூலில் குறிப்பிடுகிறார். திராவிடர்களின் தெய்வ வழிபாட்டில் சிலை அம்சம் இல்லை, குத்துக்கல்தான். இங்கும் குத்துக்கல்-லிங்கம்தான் வழிபாட்டுப் பொருள். இவற்றை வைத்துப் பார்க்கும்போது இத் தெய்வம் திராவிடத் தெய்வமாக-நாட்டுப்புறத் தெய்வமாக இருக்க வேண்டும்.

இதற்கடுத்து, மதுரைக் கோயிலின் முக்கிய தெய்வம் மீனாட்சி ஆகும்; இதுவும் ஒரு சக்தியாகக் கூறப்படுகிறது; திராவிடச் சக்தியாக இருந்த மீனாட்சி இந்து சக்தியாக உருவாக்கப்பட்டிருக்க வேண்டும். இம் மீனாட்சி சொக்கலிங்கத்தைவிடச் சிறப்புப் பொருந்தியவளாக மதிக்கப்படுகிறாள் இச்சக்தித் தெய்வமான மீனாட்சியின் உயர்வை எண்ணி அவளை மேல்நிலை ஆக்கக் கடவுளாக்க நினைத்தனர்; ஆகவே மீனாட்சியை-திராவிடச் சக்தியைச் இந்துச் சக்தியோடு தொடர்புபடுத்தி மீனாட்சிக்கும் சொக்கலிங்கமாகிய சிவனுக்கும் திருமணம் நடத்தி வைத்துவிட்டனர்.

திராவிடத் தெய்வமாகிய மீனாட்சியும் சொக்கலிங்கமும் கணவன் மனைவியாக இருந்து இறந்து, தெய்வ நிலைக்கு உயர்ந்தவர்களாக இருந்திருக்கலாம்.

இம்மீனாட்சி சொக்கலிங்கம் கதையில் இன்னொரு சுவையான செய்தியும் கலக்கப்படுகிறது; நாயக்கமன்னனான திருமலை நாயக்கர் மதுரையை ஆண்டவர்; அவர் வைணவர்; மீனாட்சியை வணங்கி வந்தவர்; மீனாட்சி கோவிலின் சில பகுதிகளை அவர் கட்டியதாகக் கூறுவர்; அழகர் மலையிலுள்ள அழகரை இத் தெய்வங்களோடு தொடர்புபடுத்தி வைணவர்கள் வணங்கும்படியாகச் செய்ய நினைத்தார், அழகர், கள்ளர் இனத்தைச் சேர்ந்தவர்; இறந்த அவர் ஆவி தெய்வமாகி இருக்கிறது; இது திராவிடத் தெய்வம்; அவரை இந்துத் தெய்வமாக்கினர்; மேனிலை ஆக்கமாக்கி மீனாட்சியின் மூத்த சகோதரனாகக் கதைகட்டினர்; தன் சகோதரியின் திருமணத்தில் கலந்து கொள்வதற்காக மலையிலிருந்து வருகிறார்; வரும் வழியில் இரண்டு நாட்கள் தாமதமாகிவிடுகிறது. மீனாட்சி சொக்கலிங்கம் திருமணம் நடந்துவிடுகிறது; ஆகவே கோபித்துக் கொண்டு வைகையின் வடகரை வழியே வண்டியூர் வரை சென்று துலுக்க நாச்சியார் வீட்டில் தங்கி யிருந்துவிட்டு, மீண்டும் திரும்பி மலைக்குச் சென்று விடுகிறார்; இங்கு வைணவர்கள் சைவர்கள் ஒருங்கே இருந்து வழிபடுகிறார்கள்; அழகர் கோவில் ஒரு திராவிடத் தெய்வக் கோயில் என்பதற்கு அடையாளமாக பதினெட்டாம்படி கருப்பசாமி இருக்கிறார்; கோவிலைப் பூட்டிவிட்டு இவரிடம்தான் சாவி கொடுக்கப் படுகிறது. இம் முறை இன்றும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

இந்த மதுரை மீனாட்சி பாண்டிய மன்னனின் மகள்; திருமணத்திற்குப் பின் மன்னன் துறவறம் கொண்டு ஒரு சோலையில் தவமிருந்தார்; தவக் கோலத்துடனே சமாதி ஆகிவிட்டார்; அந்த முனிவர் தான் இப்போது பாண்டி முனியாண்டி; மதுரைக்கருகில் உள்ள பாண்டி முனியாண்டி சாமிக்கோவில் இதன் அடிப்படையில் எழுந்தது தான்; அந்தக்கோயில் கொண்டுள்ள இடம் தான் பாண்டிய மன்னன் தவமிருந்த சோலையாகும்; அங்குள்ள முனியாண்டி சாமி சிலை தவக்கோலத்தில் தான் இருக்கிறது (கோபால்சாமி, எம். ஆர்., 5-11-84) இச்சிலை சமண முனிவர் கோலத்தில் இருப்பதாக தொல்பொருள் ஆய்வுத் துறையைச் சார்ந்தவர்கள் கூறுகிறார்கள்; எது எப்படியாயினும் பாண்டி முனியாண்டி கோவில் ஒரு சமாதிக் கோவில் என்பது தெளிவாகிறது; இக்கோவில் பூசாரிகள், பரம்பரை பரம்பரையாக ஒரு குடும்பத்தைச் சார்ந்தவர்களாகவே இருக்கிறார்கள்; முதலில் சமாதி ஆகும் தருணத்தில் அருகே இருந்தவரின்

வழித் தோன்றல்களே இப்போதும் பூசாரிகளாக இருக்கிறார்கள்; இக்கோவில் அக்குடும்பங்களைச் சேர்ந்தவர்களுக்குக் குலத்தெய்வக் கோவிலாகவும் இருக்கிறது.

மதுரை பாண்டி முனியாண்டியும் மதுரை மீனாட்சியும் அழகரும் திராவிடத் தெய்வங்களாக இருந்து புராண வரலாற்றில் இந்துத் தெய்வங்களாக ஆக்கப்பட்டிருக்கிறார்கள்.

**விஷ்ணுபுராணக் கதைகளில் திராவிடத் தெய்வம்**

திராவிடத் தெய்வங்களை சிவபுராணக்கதைகளோடு மட்டும் தொடர்பு படுத்தவில்லை;விஷ்ணு புராணக் கதைகளோடும் தொடர்பு படுத்தினார்கள். சிவனோடு இணைத்துப் பேசப்பட்ட ரேணுகா இப்போது வைணவக் கடவுளோடு இணைக்கப்படுகிறாள். வைணவக் கதைகளில் ரேணுகா, விஷ்ணுவின் அவதாரமான பரசு ராமனின் தாய்; ஜமதக்கினியின் மனைவி; இங்கேயும் ரேணுகா சக்தி வடிவாகத்தான் காட்டப்படுகிறாள்; ஆகவே அவதாரமான பரசுராமனாகிய விஷ்ணு மகனாகிறான்.

ஒரு காட்டில் அரக்கர்கள் மிகுதியாக வாழ்ந்தார்கள்; அட்டூழியம் மித மிஞ்சியிருந்தது; இதே சமயம் தந்திகிரிராசு என்ற பலம் பொருந்திய மன்னன் அப்பகுதியை ஆண்டு வந்தான்; உலகிலுள்ள எல்லாக் கடவுளர்களையும் முனிவர்களையும் வணங்கி வந்தான்; எப்படியாவது அந்த அரக்கர்களைக் கொன்றொழிக்க வேண்டு மென்பதே அவனது எண்ணம்.

தேவ தூதனான நாரதர் தந்துகிரி ராசுவிடம் வந்தான்; எப்படியாவது அரக்கர்களைக் கொன்றுவிடு; இல்லையென்றால் உனக்கு அழிவு நேரிடும் என்று சொன்னான்; யார் முன்னின்று போரை நடத்தி அவர்களோடு சண்டை போடுவது என்று தந்து கிரிராசு கேட்டான்; அதற்கு நாரதர் உன் மகள் ரேணுகா இதற்குத் தகுதியானவள்; அவளையே போருக்கு அனுப்பி வை என்று நாரதர் கூறினான். பெண்ணை அனுப்பக் கூடாது; நானே போருக்குச் செல்லுகிறேன் என்று கூறிப் படையெடுத்துச் சென்றான். அரக்கர் இவனோடு கடுமையாகப் போரிட்டு சாகடிக்க இருந்தார்கள்; ஆகவே தப்பி ஒரு குகைக்குள் சென்று ஒளிந்துகொண்டான். இதைத் தன் அனுமானத்தால் ரேணுகா புரிந்துகொண்டாள்; தான் சென்று தன் தந்தையை விடுவிக்க வேண்டுமென்று எண்ணினாள். அனுமதிக்காகத் தன் மாமியாரிடம் சென்றாள்; அவள், தந்துகிரி

என்னுடைய தம்பி; மேலும் என் மருமகளுடைய தந்தை; இருந்த போதும் அவன் நல்லவனில்லை; என்னை இம்சைப் படுத்தியவன்; ஆகவே நான் உன்னை அனுமதிக்க முடியாது என்று கூறி, தன் மகன் ஜமதக்கினியிடம் கேட்கச் சொன்னாள். ஆகவே ரேணுகா தன் கணவனை நாடிச்சென்றாள்; அவன் ஒரு காட்டில் தவமிருந்து கொண்டிருந்தான்; தலையில் ஏழு பானைகளைச் சுமந்து கொண்டு சென்றாள்; அவற்றில் அரிசியும் தண்ணீரும் கலந்திருந்தன; அவளுடைய பானைகளிலுள்ள தண்ணீர் கொதித்து அரிசியைச் சோறாக்கியது.

ரேணுகா இவ்வாறு தனி வழியே போய்க் கொண்டிருந்தாள்; விஷ்ணு நாரதரிடம் ரேணுகாவின் கற்பின் மகிமையைச் சொல்லிக் கொண்டிருந்தான்; நாரதர் அவள் கற்பைக் கெடுக்க வேண்டும் என்று சொன்னான்; விஷ்ணுவும் ஒத்துக் கொண்டான். அதன்படி நாரதர் பிச்சைக்காரனாக, ரேணுகாவின் முன் தோன்றினான், உணவு கேட்டான்; பரிதாபப்பட்டு ரேணுகாவும சோறு போட்டாள். அதன்பின் நாரதர் ஒரு குழந்தை வடிவில் தோன்றினான்; மினுக்கும் ஆபரணங்கள் அணிந்த குழந்தையைக் கண்டு ரேணுகா குலுங்கிக் குலுங்கி உள்ளூரச் சிரித்தாள்.

ஜமதக்கினி இதை தன் தவ வலிமையால் கண்டார்; இது மோசமான செய்கை; அவன் தவமிருப்பதைக் கெடுக்கும் செயல் என்று எண்ணி அவளைத் தண்டிக்கத் தீர்மானித்தான். உடனே தன் மூத்த மகனை நினைத்தான்; அவன் வந்து நின்றான். அவன் எல்லைக்குள் யாராவது குற்றம் செய்தால் என்ன தண்டனைக் கொடுப்பது என்று கேட்டான். அதற்கு மகன், மூன்று முறை மன்னிபபுக் கொடுக்கலாமென்றான்; மன்னிப்புக் கடங்காத குற்றம் செய்திருந்தால் என்ன செய்வது என்று கேட்டான். அதற்கு மகன், அவனுடைய தலையை எடுத்துவிட வேண்டியதுதான் என்று பதிலளித்தான்.

உடனே ஜமதக்கினி நல்லது; அதோ உன் தாய் வந்துகொண்டிருக்கிறாள்; என்னை நோக்கி வரும்போது ஒரு குழந்தையைப் பார்த்துச் சிரித்தாள்; ஆகவே நீ அவளுடைய தலையை எடுத்து விடு என்று ஆணையிட்டான். அதற்கு அவன், அவள் என்னை வளர்த்து ஆளாக்கிய தாய்; ஆகவே நான் அவளைக் கொல்ல மாட்டேன் என்று மறுத்தான். உடனே ஜமதக்கினி 'நான் உன்னைச் சபிப்பேன்' என்றான்; அதற்கு அவன் 'என்ன வேண்டு

மென்றாலும் செய்துகொள்; நான் மட்டும் அந்தப் பாவத்தைச் செய்யமாட்டேன்' என்றான்.

ஜமதக்கினி மூத்த மகனுக்குச் சாபம் கொடுத்துவிட்டு, இளைய மகன் பரசுராமனை நினைத்தான். உடனே அவன் வந்து நின்றான்; மூத்த மகனிடம் சொன்னதைச் சொன்னான்; பரசுராமன், நெருங்கிவரும் தன் தாயைக் கொல்லச் சென்றான்; வாளை உருவினான்; ஒரே வீச்சில் தலையைக் கொய்தான்; அப்போது வாள் அவன் கையினின்றும் வானோக்கிப் பறந்தது. தன் வலக்கையைச் சபித்துக் கொண்டான்; நொடிப் போதில் வீழ்ந்த வாள் வலக்கையை அரிந்தது; இதனால் மிக்கக் கோபத்தோடு தந்தையைப் பார்த்தான்; இந்த இரு நிகழ்ச்சிகள் நடந்ததற்காகக் குற்றம் சாட்டினான்; தன் தாயின் உயிரும் தன் கையும் மீண்டும் வரவேண்டும் என்று வேண்டினான்; அவையிரண்டும் வரவில்லையென்றால் உன் உயிருக்கு உலை வைப்பேன் என்று கொதித்துக் கூறிவிட்டு, அவ்விடத்தை விட்டு அகன்றான்.

ஜமதக்கினி மகனுடைய கோபத்திற்கு ஆளாகாமல், ரேணுகாவிற்கு உயிரும் பரசுக்குக் கையும் கொடுத்தான்.

உயிர் கொண்டெழுந்த ரேணுகா தன் கணவனிடம் போருக்குச் செல்ல அனுமதி கேட்டாள்; யாருடன் சண்டைக்குச் செல்கிறாய் என்று யோசித்தாயா? அரக்கர்கள் உன்னை நொடிப் போதில் கொன்று விடுவார்கள் என்று எச்சரித்தான்; 'அன்பார்ந்த கணவரே, என் வலிமையைத் தாங்கள் கண்டால், இப்படியெல்லாம் பேசமாட்டீர்கள்; தாங்கள் பயப்படமாட்டீர்கள்' என உத்தரவாதம் கொடுத்தால் நான் என்னுடைய வலிமையைக் காட்டுவேன் என்று சொன்னாள்.

நான் யாரென்று நினைத்தாய்; மிகப்பெரிய முனிவர்; நாவை அடக்கிப் பேசு என்றான்.

'சரி நான் சொல்லும்போது திரும்புங்கள்' என்று சொல்லி கணவனை வேறு பக்கம் பார்க்கச் சொன்னாள். ஜமதக்கினியும் உடன்பட்டான்; நொடிப் பொழுதிற்குப்பின் திரும்பச் சொன்னாள்; அவனும் திரும்பினான்; ஆயிரம் கைகளோடு கூடிய சக்தியைக் கண்டான்; ஒவ்வொரு கையிலும் ஒரு சூலம் இருந்தது; அந்தச் சூலத்தில் குத்தப்பட்ட மனிதன் இருந்தான். இந்தக் கோலத்தைக் கண்டவுடன் ஜமதக்கினி மிகவும் நடுங்கிப் போனார்;

பூமிக்குக் கீழே போய்விட்டார்; அவர் மீண்டும் திரும்ப மாட்டாரோ என்ற நினைப்பில் தலைமயிரைப் பிடித்து இழுத்து, பூமிக்கு மேலே கொண்டுவந்தாள். இந்தக் கொடூரமான சக்தி கொர்லபடி அங்கம்மாவாகும் என்று ரேணுகா சொன்னாள் (எல்மோர், டபிள்யூ.டி., 1984-90).

இப்போது ரேணுகா, தன் கணவனிடமிருந்து அனுமதி பெற்றாள்; அரக்கர்களோடு போரிட்டாள்; பல அரக்கர்கள் கீழே சாய்ந்தார்கள்; ஆனால் பூமியில் சிந்திய ரத்தத்திலிருந்து ஆயிரக் கணக்கான அரக்கர்கள் எழுந்தார்கள்; ஆகவே போரை வெல்ல முடியாது ரேணுகா மயங்கினாள். இப்போது தன் தம்பி போத்தி ராசாவை நினைத்தாள்; அவன் வந்து நின்றான். இச்சமயத்தில் எனக்கு உதவி செய்தால் உனக்கு வானளாவ உள்ள ஆடும், பனையளவு உயரக் குவியல் சோறும் கொடுப்பேன் என்று கூறினாள். இத்தகைய தூண்டுதல் போத்திராசுவுக்கு மனமகிழ்ச்சியைக் கொடுத்தது; என்ன செய்யச் சொன்னாலும் செய்வேன் என உறுதி கூறினான். ரேணுகா அவனுடைய நாக்கைப் பூமியில் பரப்பச் சொன்னாள், சிந்திய இரத்தம் கீழே விழாது குடிக்கச் சொன்னாள்; ஒரு சொட்டு ரத்தம்கூட பூமியில் விழக்கூடாது என்று கேட்டுக் கொண்டாள்; போர் நடந்தது. அரக்கர்களும் ஒழிக்கப்பட்டார்கள்; தந்தை தந்துகிரிராசும் விடுவிக்கப்பட்டார். இவ்வாறுதான், போத்தி ராசுக்கு பலி கொடுக்கும் முறைமை வந்தது. ரத்தத்தில் சோற்றைத் தோய்த்து, திரளைக் கொடுக்கும் விதமும் எழுந்தது; இதே முறையில் தான் தமிழ்நாட்டில் மாடசாமி, கருப்பசாமிக்குப் பலியும் கொடுக்கப்படுகிறது என்று சொல்லப்பட்டது. கிராம தேவதைகள் வழிபடப்படும் போதெல்லாம் போத்திராசு போன்ற தெய்வங்களுக்கு இதனால் பலி கொடுக்கப்பட்டு வருகிறது.

இங்குக் கூறப்பட்ட ரேணுகா, விஷ்ணு அவதாரத்திற்குத் தாயாகிய சக்தி வடிவம்; இந்துத் தெய்வத்தோடு தொடர்புபடுத்தப் பட்ட சக்தி. இராமாயணத்திலும் தொடக்ககால மனிதர்களாக அரக்கர்கள் பேசப்படுகிறார்கள். திராவிடர்களில் ஒரு பிரிவினர் ஆரியர்களுக்கு அக்காலக் கட்டத்தில் உதவியாக இருந்தார்கள்; அரக்கர்களை வெல்வதற்குத் துணை போனார்கள். ஆகவே இந்தக் கதை திராவிடச் சக்திகளுக்கு மதிப்பளிக்கும் வகையில் உள்ளது என்று குறிப்பிடுகிறார்.

இந்தக் கதையில் வரும் கொரலபடி அங்கம்மா திராவிடச் சக்தி; கிராமதேவதை. ஆந்திராவில் கிராமங்களில் கொண்டாடப்படும்

தேவதை, கொரலபடி அங்கம்மாவின் உருவில்தான் ரேணுகா சக்தியானாள்; அங்கம்மா திராவிடத் தெய்வங்களில் முக்கியமானது: இவளைப் பற்றிய கதைகள் ஏராளம். ஆனால் புராணங்களில் சொல்லப்படவில்லை; பிற்காலத்தவை; ஆகவே சொல்லப் படவில்லை.

இந்து மதம் திராவிட மதத்தைத் தனதாக்கிக் கொள்ள முயன்ற போது, திராவிட மதத்தில் மாறுபாடு அதிகம் நிகழவில்லை; மாறாக இந்து மதத்தில் சிறிது மாற்றம் ஏற்பட்டது. இந்துமதம் ஒரு கலவைச் சமயம் என்பது தெரிந்ததே. பிராமணீயம், திராவிடம் என்ற இருவேறு பண்பாடுகளைத் தன்னுள் உள்ளடக்கும்போது ஒவ்வொரு பண்பாட்டின் வழிபாட்டில் சிற்சில மாற்றம்தான் ஏற் பட்டது. திராவிடத் தெய்வத்தை ஏற்றுக்கொள்ள மறுத்த அசல் இந்துக்கள்கூட பயத்தின் காரணமாகத் திராவிடத் தெய்வங்களை ஏற்று அவற்றை அமைதிப்படுத்தும் வழியில் இறங்கினர்(எல்மோர், டபிள்யூ, டி., 1984:113).

எது எவ்வாறாயினும் இந்துச் சமயச் சடங்குகளில், திராவிடத் தெய்வங்களின் இணைப்பால் பெரும் மாறுபாடு ஏற்படவில்லை. இந்துத் தெய்வக் கோயில்களில் பிராமண பூசாரி இதுநாள் வரை பூசை செய்து கொண்டுதான் வருகிறார்; ஒழுங்காகப் பூசை நடத்து கிறாரா என்று உள்ளூரக் கவனம் செலுத்தாது இருக்கிறார்கள்; ஆனால் தங்கள் திராவிடத் தெய்வக் கோயில்களில் ஒட்டுமொத்த மாக இருந்து வழிபடுகிறார்கள்; சடங்குகளில் எவ்விதம் மாற்றம் செய்யாது, தங்களுக்கு நினைவாற்றல் இல்லாத நாளிலிருந்து வழிபட்டுவருகிறார்கள் (எல்மோர், டபிள்யூ. டி., 1984:134).

இந்து சமயத்தின் வழிபாட்டு முறைகளில் திராவிடத் தெய்வங் களின் ஆதிக்கம் சிறிதளவென்றால், திராவிடத் தெய்வங்களின் வழிபாட்டில் இந்துச் சமய ஆதிக்கம் அதைவிடச் சொற்பமே. திரா விடர்கள் பிராமணர்களின் மதத்தில் மாற்றம் செய்துகொண்டு வழிபட்டு வந்தார்கள்; ஆனால் தங்கள் திராவிடச் சமயத்தில் எவ் வித மாற்றம் செய்யாது, தங்கள் முன்னோர்கள் எவ்வாறு வழிபட்டு வந்தார்களோ, அம்முறையிலேயே தங்கள் தெய்வத்தை வணங்கி வந்தார்கள்; அவர்களுடைய வழிபாட்டிற்கு இந்துப் பெயர்களைக் கொடுத்தனர்; ஆனால் செயலளவில் அவை திராவிடமாகத்தான் இருந்தன.

நடைமுறை வழிபாட்டுச் சடங்குகளில் மாற்றம் அடையாத இந்துச் சமயம், திராவிடத் தெய்வங்களினால் ஆதிக்கம் அடையாது இருந்தது. சாதாரண இந்துத் தெய்வம்கூட அவதாரமாகத்தான் இருந்தது; ஆனால் சாதாரண திராவிடத் தெய்வம் மானிட வாழ்க்கையில் உழன்ற மனிதனாக இருந்தது இங்குக் குறிப்பிடத் தக்க அம்சமாகும். பின்வரும் நிகழ்ச்சிகளிலிருந்து திராவிடத் தெய்வங்களின் ஆதிக்கம் இந்துத் தெய்வக் கோயில்களில் எவ்வாறு இருந்தது என்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

ஆந்திராவிலுள்ள நெல்லூர் மாவட்டத்தில் தெட்டு என்ற ஊருக்கருகில் ஒரு மலைப்பகுதி இருக்கிறது; இங்கு ஒரு கோவில் இருக்கிறது; தெய்வம் மலகொண்டசுவாமி ஆகும்; வழிபாடு இந்து முறைப்படியே நடக்கிறது; திராவிடத் தெய்வங்களுக்கு நடக்கும் வழிபாட்டுச் சடங்கு ஏதும் அங்கு நடந்ததாகத் தெரியவில்லை. ஆனால் அத் தெய்வத் தோற்றம் பற்றிய கதை, திராவிடத் தெய்வம் பற்றியதாகவே இருக்கிறது. அக்கதை பின்வருமாறு:

ஒரு பிராமணப் பையன் மலைப்பகுதியிலுள்ள புல்வெளியில் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தான்; மற்றப் பையன்களோடு விளையாடிக் கொண்டிருக்கும்போது ஒரு கருங்கல்லைக் காலால் மிதித்து உருட்டி விட்டான். அன்றிரவு வீட்டில் வழக்கமாகக் குளித்து விட்டு படுக்கச் சென்றான்; ஆனால் உடனே அவனுக்குக் காய்ச்சல் கண்டது; வீட்டிலுள்ளவர்கள் நடுங்கிவிட்டனர்; ஆனால் காலையில் அவன் சரியாகிவிட்டான். அடுத்த நாள் காய்ச்சல் மிகுதியானது; பையன் உரக்கக் கத்தினான்; ஆடுகள் பயந்து நடுங்கின; தாம்புக் கயிற்றினின்றும் தப்பிக் காட்டிற்கு ஓடின என்று சொன்னான். எல்லா மந்திரங்களும் ஓதினார்கள். காலையில் சரியாகிவிட்டது.

மூன்றாம் நாள் இரவில் பையன் கனவு கண்டு அரற்றினான்; 'நான் மலகொண்டசுவாமி; நீ என்னை உதைத்துத் தள்ளினாய்; என்னை மதிக்கவில்லை; இழிவாகப் பேசினாய்; ஆகவே நீ இப்போது துன்பப்படுகிறாய். நீ வேகமாகக் குணப்பட வேண்டுமானால் என்னை மதிக்க வேண்டும்; கோவில் கட்டி வழிபட வேண்டும்; அவ்வாறு செய்தால் உன் வீட்டிற்கும் நல்லது; இதைச் செய்யவில்லை என்றால் நீ அழிவாய்' என்று கனவில் தெய்வம் சொன்னது. இதைக் கண் விழித்துப் பையன் சொன்னான்; ஊரார் காய்ச்சல் நோயினால் பிதற்றுகிறான் என்று சொன்னார்கள்; உடனே மந்திரவாதியைக் கூப்பிட்டுக்கேட்டார்கள்; அவன்,பையன்

சொல்வது சரிதான் என்றான். ஆகவே எல்லோரும் மலைக்குச் சென்று கருங்கல்லை எடுத்து உருவம் செய்து கோயில் கட்டிவழி பட்டனர். அப்பையனுடைய வம்சாவளியினரே பூசாரியாக இருந்து வருகின்றனர்.

இக்கதை திராவிடத் தெய்வக் கதை போன்று இருக்கிறது; ஆனால், பையன் இதில் கடவுளாக மாறவில்லை.

ஆனால் பின்வரும் கதையில் திராவிடத் தெய்வ ஆதிக்கம் இருப்பதைக் காணலாம். கொகிலும்படு என்ற ஊரில் நாராயண சாமி என்று இந்துப்பெயர் கொண்ட கோவில் ஒன்று இருக்கிறது. ஒரு காலத்தில் நாராயணசாமி என்று சொல்லப்பட்ட ஒரு பையன் வாழ்ந்து வந்தான். அடுப்பு எரிப்பதற்காகச் சுள்ளி பொறுக்குவதற் காக அவன் மற்ற சிறுவர்களுடன் காட்டிற்குச் சென்றான். காட் டில் புற்றைக் கண்டவுடன் இவன் மட்டும் நின்று விட்டான். அவர் கள் திரும்பி வரும்போது நாராயண சுவாமியைக் கூப்பிட்டார்கள்; ஆனால் இவன் புற்றுக்குள் இருந்தான்; அழைப்புக்குப் பதில் குரல் கொடுத்தான்; தான் வரவில்லை என்று சொல்லிவிட்டான். மற்றப் பையன்கள் வந்து வீட்டில் சொன்னார்கள். நாராயணசுவாமியின் தாய் உடனே காட்டிற்குச் சென்று கூப்பிட்டாள்; புற்றுக்குள் இருந்து, நான் வரமுடியாது என்று பதில் வந்தது. சிறிது நேரத்தில் தந்தையும் வந்தார். மூன்று நாட்கள் அங்கேயே இருந்தார்கள். நாராயண சுவாமி புற்றிலிருந்து வெளிப்பட்டான்; கையில் பாம்பு களோடு காட்சியளித்தான். ஊருக்கு வந்தான்; வீட்டிற்குப் போக வில்லை. தெருவில் நின்று சொன்னான்; யாருக்காவது பாம்பு கடித் தால் உடனே தலையில் ஒரு கல்லை வைத்துக் கொண்டு காட்டி லுள்ள புற்றுக்கு வந்து நாராயணசாமி என்று கூப்பிடுங்கள், உங்க ளுக்கு விஷம் இறங்கிவிடும் என்று சொன்னான். பின் புற்றுக்குச் சென்று மறைந்துவிட்டான். அதன்பின் அவன் வரவே இல்லை. நாட்கள் சில கழிந்தன; கிராமத்திலுள்ள குழந்தைகள் எல்லாம் நோய்வாய்ப் பட்டனர்; மந்திரவாதி 'நாராயணசுவாமி' யால்தான் இவ்வாறு நடக்கிறது என்றான். ஆகவே கோயில் கட்டப்பட்டது; முறையாக வழிபாடு நடத்தினர்.

இதில் நாராயணசாமி பாம்பு கடித்து இறந்திருக்க வேண்டும்; அவன் ஆவி வந்து இவ்வாறு சொல்லியிருக்க வேண்டும். அதை மக்கள் வேறுவிதமாகத் திரித்துக் கூறுகிறார்கள்; வழிபாட்டில், சில பழக்க வழக்கங்கள் கிராம தெய்வ வழிபாடுகள் போன்றிருக்கின்றன. ஒரு ஆட்டுக்கிடா மட்டும் பலி கொடுக்கப்படுகிறது; மற்ற வழிபாட்டு

முறையெல்லாம் இந்து முறைப்படியே இருக்கின்றது. எல்லா சாதியினரும் வழிபடுகிறார்கள். பாம்பு பற்றியது இந்து வழிபாட்டுக்குரியது. இந்து திராவிட பண்பாடுகள் கலந்த வழிபாடாக இத் தெய்வ வழிபாடு இருக்கிறது.

அடுத்து குண்டூர் மாவட்டத்தில் நரசராவுபேட்டை என்ற ஊரில் கொடப்பகொண்டசுவாமி என்ற கோவில் இருக்கிறது. இது இந்துக் கோவிலாக வழிபடப்படுகின்றது; ஆனால் தலவரலாறு திராவிடத் தெய்வ வரலாறு போன்றிருக்கிறது; திராவிடத் தெய்வச் சக்தியின் ஆதிக்கம் இங்கு இருப்பதைக் காணலாம்.

நூறாண்டுகளுக்கு முன் எல்லமந்தகொடையா என்று ஒருவன் வாழ்ந்து வந்தான்; காட்டில் ஆடுகளை மேய்த்து வந்த இடையனுடைய மனைவியைக் கெடுத்துவிட்டான்; இச்செய்தி இடையனுக்குத் தெரிந்தது. அவன் இவனைப் பழிவாங்க நினைத்தான்; ஆகவே காட்டில் பதுங்கியிருந்தான்; எலமந்தகொடையா அவன் வரவை எதிர்நோக்கி யிருந்தான்; இடையன் அவன்மீது பாய்ந்து குத்திக் கொன்றுவிட்டான்; அதன்பின் தன் மனைவியையும் கொன்றுவிட்டான்.

இது நடந்த பிற்பாடு, அவன் குத்திக் கொலை செய்யப்பட்டு ரத்தம் சிந்திய இடத்திலிருந்து ஒரு குரல் எழுந்தது; ஊர் மக்களை அது பயமுறுத்தியது; அழித்து ஒழித்து விடுவதாகச் சொல்லியது; கோவில் கட்டி வணங்கினால் அது ஒன்றும் செய்யாது என்றும் சொல்லியது. அதனால் மக்கள் அவன் இறந்த இடத்தில் கோவில் கட்டி, வழிபட்டார்கள்; அதற்குப் பக்கத்திலேயே இறந்த இடையனின் மனைவிக்கும் கோயில் எழுப்பினார்கள்; இது சக்தியாகப் போற்றப்படுகிறது. கொடையாத் தெய்வக் கோயில் இந்து முறைப்படியே வழிபாடு நடத்தப்படுகிறது; ரத்தப் பலியெல்லாம் கொடுப்பதில்லை. சிவராத்திரி சமயம் வழிபாடு நடத்தப்படுகிறது.

தமிழ்நாட்டில் இடைச்சியூரணியில் உள்ள இடைச்சியம்மன் கதையும் ஓரளவுக்கு இதைப் போன்றே இருக்கிறது; இங்கு, தயிர், நெய் விற்கப் போகும் வழியில் காட்டில் இடைக்குலக் கன்னிப் பெண், தீயவர்களால், கெட்டச் செய்கையால், மருட்டப்பட்டவள், தானே இறந்துவிடுகிறாள்; அவள் சக்தியாக ஆக்கப்படுகிறாள், ஆனால் ரத்தப்பலி இங்குக் கொடுக்கப்படுகிறது; திராவிடச் சக்தியாகவும் திராவிட வழிபாடாகவும் இருக்கிறது.

ஆந்திராவில் வழிபடப்படும் கொடையா சுவாமி வழிபாடு சிவ வழிபாடாக ஆக்கப்பட்டிருக்கிறது; கொடையா சிவனின் அவதார மாக எண்ணப்படுகிறது; அதனால் சிவராத்திரி விழா கொண்டாடப் படுகிறது; இங்குக் கொலை செய்யப்பட்ட மனிதன் கடவுளாக ஆக்கப் பட்டு, பின், இந்துத் தெய்வமாக மதிக்கப்பட்டுள்ளான்.

அடுத்து, திராவிட இந்து தெய்வங்களின் ஒருங்கிணைப்பில், முதலில் தெய்வம் இந்துவாக இருந்து, திராவிடத் தெய்வக் கதை யாகப் பின்னப்பட்டு மாறியிருக்கும் வகையைக் காண்போம்.

நெல்லூர் மாவட்டத்தில் உலவப்பாடு என்று ஒருகிராமம்; அங்கு கொடம்மா என்று ஒரு விதவைப் பெண்மணி இருந்தாள்; அவள் வேணுகோபால சுவாமி என்ற ஒரு கோவிலைக் கட்டினாள். பிராமண குருமார்களை ஆதரித்து வந்தாள்; வைணவ முறையில் வழிபாடு இருந்தது.

அப்பெண் வாழ்ந்த காலத்திலேயே ஒரு கதையைக் கட்டி விட்டார்கள்; அதுவே உண்மையாக நம்பப்பட்டது.

கொடம்மா வீட்டில் ஒரு வேலைக்காரன் இருந்தான்; அவன் ஒரு பிராமணன்; அவன் அவளுக்குத் திருப்தியான முறையில் நடக்க வில்லை; ஆகவே, அந்த பிராமணச் சமையல்காரன் இன்னொரு வீட்டில் வேலை பார்த்தான்; அவ்வீட்டு முதலாளிக்கு இவள் அவனைப் பற்றித் தப்பாக எழுதி வேலை இழக்கச் செய்தாள்; அந்த பிராமணன் தன்னைப் பற்றிய வரலாற்றை ஒரு ஓலைச் சுவடியில் எழுதி அவன் இடுப்பில் கட்டி வைத்துக்கொண்டு, கிணற் றில் வீழ்ந்து மாண்டுவிட்டான்.

கொடம்மாவின், பள்ளியில் படித்துக் கொண்டிருந்த பையன் நோய்வாய்ப்பட்டான்; ஒரு பேய் அவனுடைய கனவில் தோன்றி 'நான் பிராமணன்; உன் தாய் எனக்குத் தொல்லை கொடுத்து இறக்கச் செய்தாள்; என்னை விரைவில் நீக்க முடியாது; உன் தாய் செய்த குற்றத்திற்காக உன் உயிரை எடுப்பேன் என்று சொல்லியது. மகன் இறந்துவிட்டான்; இதே நிலையில் மருமகனும் இறந்தான், ஆகவே கொடம்மா மிகவும் வருந்தினாள்; பயந்தாள். இவற்றி லிருந்து மீள்வதற்காகக் கோவில் கட்டியிருக்கிறாள்; பிராமணர் களுக்கு உணவு படைக்கிறாள் என்று மக்கள் சொல்லுகிறார்கள்.

கொடம்மா அவளுடைய சமையல்காரனோடு தகராறு செய்து கொண்டாள்; அதனால் மகனும் மருகமனும் இறந்தார்கள்;

ஆனால், கோவில், இறந்த பிராமணனுக்காகக் கட்டப்படவில்லை; அவள் வேணுகோபால சுவாமிக்காகக் கட்டினாள்; நாளடைவில கதையை மாற்றிச் சொல்லிவிட்டார்கள்; ஊர்மககள் இந்துக் கோவிலுக்கு, தங்கள் திராவிடக் கதையைக் கூறி, தமதாக்கும் எண்ணத்தில் செய்துவிட்டார்கள்.

இச் செய்திகளையெல்லாம் தொகுத்து நோக்குங்கால், திராவிடத் தெய்வங்கள், மனிதர்கள் இறந்தபின் நிலவும் ஆவியை அடிப்படையாகக் கொண்டது என்பது தேற்றமாகிறது; மாலைத் தெய்வமாகவோ, சமாதித் தெய்வமாகவோ ஆவி நிலை கொண்டிருக்கிறது; பயங்கருதியே திராவிடத் தெய்வங்கள் வழிபடப் பெறுகின்றன; நோய் நொம்பல் தீரவேண்டும் என்ற நோக்கில் வழிபடப் பெறுகின்றன என்பதை அறியமுடிகிறது. திராவிடத் தெய்வங்கள் வளர்ச்சி நோக்கில் இந்துத் தெய்வங்களாகின்றன; இந்துத் தெய்வங்கள் திராவிடத் தெய்வங்களாகின்றன; இக்கலப்பால் திராவிடச் சமயம் இந்துச் சமயமாகி, திராவிடக் கடவுளரும் இந்துக் கடவுளாகிவிட்ட நிலை. புராணக்கதைகளில், காலப்போக்கில் திராவிடத் தெய்வக் கதைகள் கலக்கப் பெற்று இந்துச் சமயத்தில மாற்றம் பெற உதவின; சிவ விஷ்ணு புராணக் கதைகளில் திராவிடச் சக்தி போன்றகதைகள் இடம்பெற்று, எது திராவிடச் சக்தி, எது இந்துச் சகதி என்று அறியமுடியாத நிலையை உண்டு பண்ணியது. இவ்வாறு இருந்த போதும் திராவிடத் தெய்வங்கள் அழிக்கப் பெறாது, வழிபாட்டிலும் தனித்துவம் பெற்று இருக்கின்றன.

# 11. நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டின் அடிப்படைக் கருத்துக்கள்

திராவிடத் தெய்வ வழிபாட்டைப் பற்றிய முறையான செய்திகள் இதுவரை தொகுக்கப்படவில்லை; அவற்றிற்கு ஆதாரமான எழுத்து வடிவங்களோ வேறு சான்றான ஆவணங்களோ கிடைக்கப் பெறாமையே இதற்குக் காரணமாகும்; மிகப் பழமையான அழிவுச் சின்னங்களும் நம்மிடையே இல்லை. ஆரியர்கள் திராவிடர்களைப் படையெடுத்து ஆதிக்கம் செலுத்தும்போது, திராவிடர்களை, பைத்தியக்காரக் கடவுளர்களை வணங்கி வழிபடக் கூடியவர்கள் என்று இகழ்ச்சியாகப் பேசினார்கள். அதன் பயன் ஆரியர்கள் தென்னகத்தில் நிலைகொண்டபோது, இந்த மதத்தோடு திராவிடமதக் கலப்பு ஏற்பட்டு, இந்து சமயம் என்றே இரண்டையும் இணைத்துப் பேசப்படுகிற நிலை வந்தது; இருந்தபோதும் திராவிடத் தெய்வ வழிபாடு இந்து வழிபாடோடு ஒட்டி உறவாடாது தனியே நிற்கிறது; ஆரியர்கள் வருவதற்குமுன் எவ்வாறு திராவிடத் தெய்வ வழிபாடு இருந்ததோ, அதே போன்றே இன்றும் மாறுபாடு இல்லாமல் இருக்கிறது.

வழிபாட்டின் வரலாற்றில் ஈடுபாடு கொள்ளாமல் செயற்பாட்டில் நாட்டங்கொண்டு வழிபாட்டின் பொருளை-நோக்கத்தைக் காண விழையலாம். சடங்குகளைத் தோற்றுவித்த எண்ணத்திற்கும் நம்பிக்கைக்கும் காரணங்கள் யாவை? வழிபாட்டின் பின்னணியில் உள்ள கருத்துக்கள் என்ன? எப்போது இக்கருத்துக்கள் எழுந்தன? இந்து சமயத்தில் இக் கேள்விகளை எழுப்பத் தேவையில்லை. வேதங்களில், மிகுதியான ஈடுபாட்டால் இயற்கையை ஆரியர்கள் தெய்வமாக்கப்பட்டதும் பேசப்படுகிறது; இன்று இந்த இயற்கை வழிபாடு வளர்ந்து இருக்கிறது. திராவிடச் சமயத்தைப் பற்றிப் பேசக் கட்டுக் கதைகளும் வாய்மொழி இலக்கியங்களுமே ஆதாரமாக இருக்கின்றன.

இத்தகைய திராவிடத் தெய்வ வழிபாட்டின் அடிப்படைக் கருத்துக்கள் என்னவாக இருக்கும் என்று எண்ணும்போது டபிள்யூ.டி., எல்மோர் தம் நூலில் சொல்லும் அடிப்படைக் கருத்துக்கள் சரியாய் இருக்கும் என்ற நினைப்பில் எழுந்ததே இப்பகுதி.

திராவிடத் தெய்வ வழிபாடு,

(1) இனமரபுச் சின்ன முறைமை(TOTEMISM),(2) உயிரற்ற போலி வழிபாட்டுப் பொருள் வழிபாடு, (3) ஆவியுலகக் கோட்பாடு, (4) பேய் பற்றிய பயம், (5) உருவ வழிபாட்டின் பொருள், (6) பலி கொடுப்பதன் பொருள், (7) திராவிடத் தெய்வங்களின் தோற்றம், (8) திராவிடச் சமயத்தின் நெறிமுறை ஆகியவற்றின் வழியே உள்ளது என்று கொள்ளலாம்.

**திராவிடத் தெய்வ வழிபாட்டில் இனமரபுச் சின்ன முறைமை**

திராவிடத் தெய்வங்களுக்கு மிருகப் பலி கொடுப்பதை இன மரபுச் சின்ன முறைமையாகக் கொள்ளலாமா என்று பிஷப் வொய்ட்ஹெட் கேள்வி எழுப்பி அதற்கு விளக்கமும் கூறுகிறார். (1983 : 145). இப்புதுமையான முறைமையை ஒரு கருதுகோளாக (Hypothesis) ஏற்றுக் கொள்ளலாம் என்றும் கூறுகிறார்.

இனமரபுச் சின்னமுறை என்றால் என்ன? தொடக்க காலத்தில் மனிதன், எல்லா இனத்தாரோடும் உறவாடி, சகோதரனாகவே இருக்க விரும்பினான். மனித இனத்தோடு மட்டுமின்றி, விலங்கினத்தோடும் உடன் பிறப்பாக இருக்க நினைத்தான். அதன் விழைவே இன மரபுச் சின்ன முறைமை; அதாவது, இரத்தத்தைப் பரிமாறிக் கொள்ளும் விதத்தில் இது அமைந்தது; திராவிடத் தெய்வங்களுக்குப் பலி கொடுக்கப்படும் மிருகங்களை வணங்கி மாலையிடுகின்றனர்; பன்றி, எருமை, ஆடு போன்ற மிருகங்களைக் கோயில்களில் வெட்டும் முன் மாலையிட்டு பூசை செய்கிறார்கள்; தெய்வங்களின் முன்னிலையில் மக்கள் அவற்றின் இறைச்சியை விருந்தாக உண்கிறார்கள். பலியிட்ட மிருகங்களின் இரத்தத்தை வழிபடுவோர்க்கும் வீட்டார்க்கும் கால்நடைகளுக்கும் கொடுக்கும் பழக்கம் இருக்கிறது; சில இடங்களில் ரத்தத்தை சோற்றுத் திரளையோடு பிசைந்து எல்லைக் கற்களில் எறிகிறார்கள்; வீதிகளிலும் அவ்வாறே செய்கிறார்கள். குடலை உருவி மாலையாகப் போட்டுக்கொண்டு ஊர் எல்லைக்குப் போகும் பழக்கம் ஆந்திராவில் இன்றும் இருக்கிறது. இதன் நோக்கம், உயிரினங்களுக்கும் மனிதனுக்கும் உள்ள உறவை நிலைப்படுத்துவதே என்று டபிள்யூ. டி. எல்மோர் குறிப்பிடுகிறார் (184:128). இனமரபுச் சின்ன முறைமைக்கு எருமை மாடு பலிகொடுப்பது மிகவும் பயனுள்ளதாக இருக்கிறது என்கிறார்; திராவிடத் தெய்வ வ

நாட்டில் எருமைப்பலி மிகவும் சக்தி வாய்ந்ததாகும் என்றும் கூறுகிறார்; ஆடு, மாடு, கோழி போன்றவற்றைப் பலி கொடுத்தாலும் எருமைப் பலியில் ஏதோ ஒரு சக்தி இருப்பதாக எண்ணப்படுகிறது; மாட்டை வெட்டி முன்னங்கால்களை வெட்டி அதன் வாயில் வைப்பது, கொழுப்பை எடுத்து கண்ணில் வைத்துவிடுவது போன்ற முறைகளிலிருந்து இதில் ஏதோ ஒன்று இருக்க வேண்டுமென்ற எண்ணத்தைத் தூண்டுகிறது; ஆட்டுக் கிடாயையும் இவ்வாறுதான் செய்கிறார்கள்.

இந்த எருமைப்பலி எதனால் கொடுக்கப்படுகிறது என்ற கேள்வியை ஊர்களில் வழங்கும் நாட்டுப்புறக் கதைகள் தீர்த்து வைக்கும் நிலையில் உள்ளன; ஆந்திராவில் இவ்வாறு வழங்கும் கதை.

ஒரு காலத்தில் பிராமணன் தன் மகளுடன் வசித்து வந்தான்; ஒரு இளைஞன் இவனை நாடி வந்தான்; தான் பிராமண வகுப்பைச் சேர்ந்தவன் என்றும் தனக்குப் பாடம் சொல்லித்தர வேண்டுமென்றும் வேண்டிக் கொண்டான். பிராமணனும் சம்மதித்தான். இளைஞன் பறையர் வகுப்பைச் சார்ந்தவன். நாட்கள் சென்றன; இளைஞனின் மோக வலையில் பிராமணன் மகள் வீழ்ந்தாள்; பின் திருமணம் செய்து கொண்டாள். சில ஆண்டுகள் கழித்து அவனுடைய தாய் வந்தாள்; தன்னுடைய தாழ்ந்த இனத்தைக் காட்டிக் கொடுத்து விடாதே என்று எச்சரித்தான்; அவளுக்கு மொட்டை அடித்து வெள்ளைச் சேலை கட்டச் செய்தான்; ஊமையாகவும் செவிடாகவும் நடிக்கச் சொன்னான். எல்லாம் நல்லபடியாக நடந்தது. ஒருநாள் மருமகள் ஒரு பலகாரம் செய்வதற்காக மாவைப் பிசைந்து கொடி போன்று உருவாக்கினாள்; இதைக் கண்ட இளைஞனின் தாய், இது என்ன மாட்டுக் குடலா என்று கேட்டுவிட்டாள்; ஆவல் மிகுதியால்-கறிமீது உள்ள ஆவலால் கேட்டுவிட்டாள்; எனக்குக் குடல்கறி சாப்பிட்ட பழக்கமிருக்கிறது என்றும் சொல்லிவிட்டாள். மருமகளுக்கு சந்தேகம் எழுந்தது, கணவனும் தான் தாழ்ந்த இனத்தைச் சார்ந்தவன் என்று ஒத்துக் கொண்டான். ஆகவே தன் தந்தையிடம் சென்றாள். பானையை நாய் நக்கிவிட்டது; அதற்கு என்ன செய்யலாம் என்று கேட்டாள். அதற்கு, அப்படியென்றால் அதனைத் தீயில் போட்டுவிடு என்று தந்தை பதிலளித்தான்; அவன் செய்தி அறிந்துதான் இவ்வாறு கூறியதாக மகள் நினைத்தாள். குழந்தைகளையும் மாமியாரையும் வெளியே இருக்கச் சொல்லிவிட்டுக் கதவைச் சாத்தித் தன்னையும்

வீட்டையும் நெருப்பு வைத்துக் கொளுத்திவிட்டாள். இறந்தவளுடைய ஆவி, ஊரின் நடுவீதியில் தோற்றம் கொண்டது. பறையனைத் தான் மணக்க இருந்தபோது ஊரார் தடுக்கவில்லை என்பதற்காகப் பழி வாங்கித் தீர்வதாகவும், இதைத் தடுக்கத் தன்னை வழிபடவேண்டும் என்றும் கூறினாள்; கணவன் தலையை வெட்டவேண்டும்; அவனுடைய முன்னங் கைகளில் ஒன்றை வெட்டி அவன் வாயில் வைக்க வேண்டும்; கொழுப்பை எடுத்து கண்களில் வைக்கவேண்டும்; அதன்மீது விளக்கு ஏற்றி வைக்க வேண்டும் என்றும் கூறினாள்; ஊரார் அப்படியே செய்தார்கள்; அதன்பின் குழந்தைகளை அவளுக்கு முன் கொண்டு வந்தனர்; அவைகள் பறையனுடைய குழந்தைகள்; ஆகவே அவைகளையும் வெட்டி விடுங்கள் என்றாள்; அப்படியே செய்தார்கள். கணவன் எருமையாகவும், குழந்தைகள் ஆடுகளாகவும் எண்ணப்பட்டுப் பலி கொடுக்கப்படுவதாகச் சொல்லுகிறார்கள். இக்கதை எல்லா ஊர்த் தெய்வங்களோடும் தொடர்புபடுத்தப் படுகிறது. இக்கதையில் எருமை மாடு பலி கொடுக்கப்படுவதில் இனமரபுச் சின்னமுறைமை இல்லை என்று டபிள்யூ. டி. எல்மோர் குறிப்பிடுகிறார் (1984:129). இக்கதை பிராமணப் பெண் சம்பந்தப்பட்டது; ஆகவே இது திராவிடத் தெய்வ வரலாற்றில் இடம் பெற்றிருக்க நியாயமில்லை. இது, பிற்காலத்துக் கட்டுக் கதையாக இருக்கவேண்டும்.

அடுத்து இன்னொரு கதை வழங்குகிறது. பொலேரம்மாவை வணங்காத ஒரு அரசன் இருந்தான்; அவனைத் தன்னை வணங்குமாறு ஆணையிட்டாள்; அவன் ஒரு கருத்தைக் கூறினான். தன்னுடைய எருமை மாட்டொடு சண்டையிட்டு வெற்றி கொண்டால், பொலேரம்மாவை வணங்குவதாக ஒத்துக் கொண்டான்.

பொலேரம்மா மனித உருவெடுத்து சண்டையிட்டாள்; வெல்ல முடியாத நிலையில் மலைக்குச் சென்று ஒளிந்துகொண்டாள். ஒரு புற்றுக்குள் சென்று மறைந்து விட்டாள். எருமை மாடு தேடிச் சென்றது; காட்டில் மேயும் ஆடுகள் பொலேரம்மா செல்லும் வழியைக் கூறின. மலைக்குச் சென்று முன்னங்காலால் புற்றைச் சிதைத்தது; காணாது திரும்பி விட்டது. இதற்குள் சண்டைப் போட்டிக்கான நேரம் முடிந்துவிட்டது; அதன்பின் பொலேரம்மா மன்னன்முன் தோன்றி, தான் வென்றதாகச் சொன்னாள்; தன்னை, ஒப்பந்தப்படி வணங்கச் சொன்னாள். எருமையைப் பலி கொடுத்து வணங்கச் சொன்னாள்; புற்றைச் சிதைத்த முன்னங் காலை வெட்டி வாயில் வைக்க வேண்டும் என்றாள்; கண்கள்

பயமுறுத்துகின்றன; ஆகவே அவற்றின் மீது கொழுப்பை எடுத்து வைத்து விளக்கு எரிக்க வேண்டுமென்றாள்; மன்னனும் ஒத்துக் கொண்டான்; அதன்படியே நடப்பதாகச் சொல்லப்படுகிறது.

இக்கதையிலும் இனமரபுச் சின்னமுறைமை இருப்பதாகத் தெரியவில்லை; எருமைமாடு வெற்றி கொண்ட பகை; அவ்வளவே. இந்து புராணங்களில் எருமை மாடு அதிகமாகப் பேசப்படுகிறது; ஒவ்வொரு நிலையிலும் இது பகைவனாக கருதப்பட்டு அழிக்கப் படுகிறது. இராமாயணத்தில் துந்துபி என்னும் எருமை அவதார மாகக் காட்டப்படுகிறது; வாலியினுடைய குகையைக் கொம்பு களால் சிதைத்து அழித்துவிடுகிறது, வாலி இதனுடைய கொம்பு களைப் பிடித்து இழுத்து, அதனைக் கொன்றுவிட்டான்.

மார்க்கண்டேய புராணத்திலும் எருமை மாடு சொல்லப்படு கிறது. இறைவனோடு செய்த போரில்அசுரர்களின் தாய் திட்டி, தன்னுடைய எல்லாக் குழந்தைகளையும் இழந்துவிட்டாள்; இன் னொரு குழந்தை பிறந்தது. எருமை மாடு வடிவில் அது இருந்தது; தெய்வங்களை ஒழிக்க அது பிறந்தது; அவன்தான் மகிடாசுரன்; துர்க்கைக்கும் எருமைக்கும நடந்த போரைப் பற்றி விளக்கிச் சொல்லுகிறது இக்கதை; துர்க்கை எருமையை வென்றாள்; தலையை வெட்டி ரத்தம் குடித்தாள்.

ஆக இக்கதைகளிலிருந்து எருமை மாடு ஏதோ ஒரு காரணத் திற்காக பலி கொடுப்பதில் முக்கிய இடத்தைப் பெற்றிருக்கிறது; அவ்வளவே. மற்ற மிருகங்களைப் போன்று இதையும் உண்பதற் காகப் பயன்படுத்தினர். முன் காலத்தில் ஆதிகால மனிதன்-திரா விட இனத்தைச் சார்ந்த மனிதன் எருமையை விரும்பி உண்டிருக்க வேண்டும்; ஆகவே இனமரபுச் சின்ன முறைமைக்கு எருமையைத் தேர்ந்தெடுத்திருக்க வேண்டும்.ஆகவே இனமரபுச் சின்ன முறைமை யில்தான் மிருகங்களைத் திராவிடத் தெய்வ வழிபாட்டிற்குப் பயன் படுத்துகிறார்கள் என்று தெரிகிறது.

## திராவிடச் சமயத்தில் உயிரற்ற போலி வழிபாட்டுப் (Fetishism) பொருளைப் பயன்படுத்தல்

திராவிடச் சமய வழிபாடு பெரும்பாலும் மூட நம்பிக்கையைக் கொண்டது; வழிபடு பொருள், உயிரற்ற போலி வழிபாட்டுப் பொருளாகவே இருக்கிறது. வழக்கத்துக்கு மாறான,வினோதமான எந்தப் பொருள் கிடைத்தாலும் அதை எடுத்து வழிபடு பொரு

ளாக்கி விடுவது ஆப்பிரிக்காவிலுள்ள உயிரற்ற போலி வழிபாட்டுப் பொருளை வணங்கும் அன்பர்களின் நிலை; அந்தப் பொருள் அவர்களுக்கு உதவவில்லையானால், அதில் ஆவி நீங்கிவிட்டது என்று சொல்லித் தூர எறிந்துவிடுவார்கள். திராவிடர்கள் வணங்கும் பொருட்களும் ஒரு வகையில் ஆப்பிரிக்கர்களின் வழிபடு பொருட்கள் போன்றே இருக்கின்றன. சிலைகள் உருவமில்லாத கல்லாகவே இருக்கின்றன; ஆப்பிரிக்கர்களைப் போன்றே திராவிடர்களும் தங்கள் வழிபடு தெய்வத்தை, ஊர் எல்லையிலோ, குப்பை மேட்டிலோ வைத்து விடுகிறார்கள். இருந்தபோதிலும், ஆப்பிரிக்கர்களுக்கும் திராவிடர்களுக்கும் உள்ள கருத்தில் அடிப் படை வேறுபாடு இருக்கிறது. ஆப்பிரிக்கர்களுடைய உயிரற்ற வழிபடுபொருள், அதனுடைய ஆவியைத் தானே வைத்துக் கொள் கிறது; அதனை வழிபடக் கூடியவர்களுக்குப் பயனைக் கொடுக்கும் என்ற நோக்கில் அந்த ஆவி வழிபடப்படுகிறது. அந்த வழிபடும் பொருள் நீண்ட காலத்திற்கு உதவவில்லையென்றால், அப்பொருள் உதவாக்கறை என்று நினைத்து—ஆவி நீங்கிவிட்டது என்று கொண்டு தூக்கி எறியப்படுகிறது.

திராவிடர்களின் சிலையும் ஆவியைத் தன்னகத்தே கொண் டுள்ளது. வழக்கமாகப் பேய் போன்ற ஆவி தங்கும் இடமாக— சாதாரணமாக இருக்கிறது. திராவிடர்கள் அதிர்ஷ்டத்திற்காகவும் மேன்மையான வளமைக்காகவும் சிலையை வணங்குவதில்லை. தீயவை நேராது இருப்பதற்காகவே வழிபடுகிறார்கள்; இருக்கும் வளமை கெட்டொழியக் கூடாது என்பதற்காக வழிபடுகிறார்கள். வளமையைப் பாதுகாக்க வேண்டியே வழிபாட்டின் இறுதி நோக்கம் இருக்கிறது; ஆனால் கடவுள் தனக்கு வளத்தைக் கொண்டு வந்து கொடுப்பார் என்று ஒருபோதும் நினைத்ததில்லை. வளமையான வாழ்வில் ஊடாடித் தடுக்கக் கூடாது என்றுதான் தெய்வத்தை வணங்குகிறார்கள்; திராவிடர்கள் தாங்கள் வழிபட்ட சிலையைத் திருப்தியில்லாததால் தூக்கி எறியவில்லை; அது அதன் பயனைக் கொடுத்துவிட்டது; இப்போது அது தேவையில்லை; அதில் கடவுள் இப்போது இல்லை. ஆகவே எறியப்படுகிறது. ஊர் எல்லையில் அச்சிலையை வைக்கும் போதும் அதன் கௌரவமும் மரியாதையும் ஒருபோதும் கெடுவதில்லை; ஊருக்குள் திரும்ப வராது என்ற நோக்கில் வைக்கப்படுகிறது.

திராவிடச் சமயத்தில் உயிரற்ற போலி வழிபடுபொருளைப் பற்றிய கருத்தும் இருந்தது என்பது ஐயமற தெளிவாகிறது

திராவிடத் தெய்வக் கதைகளிலும், வழிபாட்டிலும் காட்டப்பட்ட செய்திகளிலிருந்து, தொன்மைக்கால மக்களின் சமயத்திலுள்ளது போன்று திராவிடச் சமயத்தின் அடிப்படைக் கருத்துக்களில் ஓரளவுக்கு உயிரற்ற போலி வழிபாட்டுப் பொருளை வணங்கும் செயலும் இருக்கிறது என்பது புலப்படுகிறது.

## ஆவியுலகக் கோட்பாடு (Animism)

திராவிடர்களின் சமயக் கருத்துக்களைக் குறிப்பிடுவதற்கு சென்னை மக்கள் தொகைக் குறிப்பேடு (Madras cencus Report 1891:88) 'அனிமிஷம்' (Animism) என்ற சொல்லைக் கையாள் கிறது. இந்துச் சமயத்தின் தீவிரமான பழமை வாதத்தில்கூட சேராமல் இருக்கும் பழங்குடி மக்களின் சமயத்தைக் குறிப்பிட இச்சொல் கையாளப்பட்டிருக்கிறது; முதலில் இந்துச் சமயத்தில் சேராத, பழங்குடி மக்கள் சமயத்தைக் குறிப்பிடப் பயன்படுத்தப் பட்டது; திராவிடச் சமயத்தின் அம்சங்களும் தனித்திருப்பதைக் கொண்டு, பழங்குடி மக்கள் சமயக் கொள்கை போன்றிருப்பதால் 'அனிமிசம்' என்று அழைக்கப்பட்டது; ஆவி என்று சொல்லப்படும் ஆத்மா நிலவுவதாக நம்புவதைக் குறிப்பிடவும், இறப்புக்குப் பின் இந்த ஆத்மா அருகிலேயே மறுபிறவி எடுக்கும்வரை நல்லதாகவும் கெட்டதாகவும் வாழ்வதைக் குறிப்பிடவும் இச்சொல் பயன்படுத்தப் பட்டதாக அந்த அறிக்கைக் கூறுகிறது. இச்சொல், திராவிடர் களின் சமயக் கொள்கையைக் குறிப்பாகப் புலப்படுத்துவதாக அமையவில்லை என்ற கருத்தும் நிலவுகிறது. மனிதனோடோ அல்லது வாழும் ஆன்மாவோடோ உரிமை ஆக்கப்பட்டுவிட்ட உயிரற்றப் பொருட்களையும் இயற்கையின் புதுமைகளையும் நம்பும் நம்பிக்கையாகும் என்று டெய்லர் இச்சொல்லிற்கு விளக்கம் கூறுகிறார். இது உயிரற்ற போலி வழிபாட்டுப் பொருளை வணங்கும் மூட பக்தியைப் பெரும்பாலும் ஒக்கும் முறையில் இருக் கிறது. அனிமிசத்திற்கும் பெட்டிஸிஸத்திற்கும் உள்ள வேறு பாட்டைப் புலப்படுத்துவது அவ்வளவு எளிதல்ல. அனிமிசம் பெட்டி ஸிஸத்தினின்று வேறுபடுகிறது; அதாவது பயப்படப்படும் ஆவி யைக் (Spirit) குறிப்பிடுவது அனிமிசம்; விநோதமான இயற்கை இறந்த நிகழ்ச்சிகளையுடைய பொருள், பெட்டிஸிஸம் என்று கூறுகிறார்கள் (எல்மோர், டபிள்யூ, டி., 1984:140).

இந்திய மக்கட்தொகை கணக்கெடுக்கும் குழுவே திராவிடச் சமயத்தைக் குறிப்பிட 'அனிமிசத்'தைப் பயன்படுத்தியது. ஆகவே

நாமும் திராவிட அனிமிசம் என்று சொல்வதில் தப்பில்லை என்று எல்மோர் குறிப்பிடுகிறார்.

திராவிடச் சமயம் ஆவியுலகக் கோட்பாட்டைப் பற்றியது; ஆவியை வணங்கி வருபவர்கள்; தம் முன்னோர் இறந்தபின் நிலவும் ஆவியை வழிபட்டு வருபவர்கள் திராவிடர்கள் என்பது தெளிவாகிறது.

## திராவிடர்களின் பேய்பற்றிய கொள்கையே தெய்வ நிலைக்கு ஆதாரம் (Demonolatry)

திராவிடர்களின் அனிமிசத்தில் இரு முக்கிய தன்மைகள் இருக்கின்றன. பொருட்களில் ஆவி இல்லாமல் பொருட்களுக்கு வெளியே ஆவியிருப்பது ஒரு தன்மை; இந்த ஆவி மனிதனுடையது. திராவிடர்களின் இந்த பேய் பற்றிய எண்ணத்தைக் குறிப்பிட்டுச் சொல்லவே demonolatry என்ற சொல் பயன்படுத்தப்பட்டது; பேய் வழிபாட்டை மட்டும் இங்குத் தெரிந்துகொள்வதில்லை. கெட்ட ஆவிகள் தான் மனிதனை மிகவும் கவர்கின்றன; கெட்டவர்களைக் கண்டு பயப்படுவதுபோல - கெட்ட ஆவிகளைக் கண்டு மனிதன் பயப்படுகின்றான். ஆகவே கெட்ட ஆவிகளுக்குத்தான் பூசை மரியாதை எல்லாம் நடக்கின்றன; அதாவது கெட்ட ஆவிகளை (evil spirits) சாந்தப்படுத்துவதற்காகப் பூசை வழிபாட்டுச் சடங்குகள் நடக்கின்றன. இதனால்தான் திராவிடர்களின் தெய்வ வழிபாடு பேய் பற்றிய வழிபாடாகவும் இருக்கிறது.

கண்களுக்குக் கெட்ட ஆவிகளின் தன்மை இருப்பதாக நம்பப் படுகிறது. அதனால்தான் கண் திருஷ்டிப் பட்டுவிட்டது என்று சொல்கிறார்கள். பேய் போன்றே, புதியவர்களின் கண்ணையும் பயத்தோடு பார்க்கிறார்கள். புதியவர்கள் கண்பட்டால்; பேயடித்ததுபோல, நோய் தாக்கும் என்று அஞ்சுகிறார்கள்.

கெட்ட ஆவிகள் எப்போதும் மனிதனைச் சூழ்ந்து காத்துக் கொண்டிருக்கிறது; வாய்ப்புக் கிட்டும்போது தாக்க இருக்கிறது. அதுவும் மனிதனுடைய கண்கள் மூலம் தாக்குகிறது; நாக்கு மூலம் தாக்குகிறது; மனிதக் கண்ணும் நாக்கும் கெட்ட ஆவிகளுக்குத் துணைபோகின்றன. நல்லதை - அழகைப் பார்த்து விட்டுப் போனாலே அது கெட்டுவிடும்; நாவால் புகழ்ந்தாலும் கெட்டுவிடும். ஆகவேதான் அழகான குழந்தையையும் நால்வர் இருக்கும் இடத்தில் கொண்டு வரமாட்டார்கள். குழந்தைக்குக் கறுப்புப் புள்ளி

வைப்பது, கண்திருஷ்டி பட்டுவிடக் கூடாது என்பதற்காகவே; அதாவது கெட்ட ஆவி தாக்காது இருப்பதற்காக கரும்புள்ளி அழகான ஓவியங்கள், வீடுகள் ஆகியவற்றில் இடப்படுகின்றன. தோட்டத்தில்-வயல்களில் பயிர்கள் நன்றாக வளர்ந்து செழித்து இருக்கும் போதும் கெட்ட ஆவிகள் வந்து - மனிதக் கண் உருவில் வந்து தாக்காது இருப்பதற்காக ஓட்டில் கரும்புள்ளி வைத்துத் தொங்கவிடுவார்கள்; அல்லது பெரிய கோமாளி பொம்மை செய்து வைப்பார்கள்; முன் காலத்தில் எலும்புக்கூடு வைத்திருந்தார்கள்; கெட்ட ஆவிகள் வரும்போது, அவற்றைக் கண்டு,மயானம் என்று தெரிந்து போய்விடுமாம். ஆகவேதான், இப்போது எலும்புக் கூட்டிற்குப் பதில் கோமாளி உருவம் செய்து கரும்புள்ளி வைத்து தொங்கவிடுகிறார்கள். துர்நாற்றமுள்ள இடங்களை நாடிக் கெட்ட ஆவிகள் நெருங்கா; ஆகவேதான் நல்ல சுத்தமான பகுதிகளில் ஒரு மூலையில் குப்பையைக் கொட்டி வைத்து விடுகிறார்கள்; குறையான பகுதிகளிலும் கெட்ட ஆவிகள் புகுவதில்லை. ஆகவேதான் சிறப்பாகக் கட்டப்பட்ட கட்டிடங்களிலும், வீடுகளிலும் ஒரு பகுதியில் ஒரு செங்கல்லையாவது எடுத்துக்குறையோடு வைத்திருப்பார்கள்; அழகான ஓவியத்திலும் ஒரு பகுதியில் சிதைத்து வைத்திருப்பார்கள்; தேர், கோவில் கோபுரம் போன்றவற்றில் கெட்ட செய்கையோடு கூடிய சிற்பங்களைச் செதுக்கி வைத்திருப்பார்கள்.

மனிதர்களில் நல்லவர்களைக் கண்டால்-அதிலும் பெண்களைக் கண்டால் பேய்களாகிய ஆவிகள் இழுத்துச் சென்று கொன்றுவிடும். ஆகவே அழகானவர்கள் தனி வழியே போகும்போது, துர்நாற்றமுள்ள பொருட்களையோ, இரும்பையோ எடுத்துச் செல்ல வேண்டுமென்கிறார்கள். குழந்தைகள் அடுத்தடுத்துப் பிறந்து இறந்து விட்டால், கெட்ட ஆவிகள்தான் இவ்வாறு செய்கின்றன என்று நினைக்கிறார்கள். ஆகவே அடுத்துப் பிறக்கும் குழந்தைகளுக்குப் பிச்சையாண்டி, குப்பையாண்டி, திப்பையா போன்று பெயர் சூட்டுகிறார்கள்; முதல் இரண்டும் இறந்த பிறகு, பிறக்கும் குழந்தை நிலைத்து நிற்கவேண்டுமென்ற நினைப்பில் மூக்கையா, மூக்காண்டி, மூக்கம்மாள் என்று பெயர் வைக்கிறார்கள். இதெல்லாம் கெட்ட ஆவிகள் வந்து அழிக்காது என்று நம்புவதால் வந்த வினைகள்.

ஊரில் நோய் நொடியைக் கொண்டு வருவது கெட்ட ஆவிகள் என்று நம்பப்படுகிறது. ஆகவே அவைகளுக்குப் பூசை நடத்தப்படுகிறது; அவைகள் பலிகொடுத்தால் வெளியேறும் என்பதற்காகப் பலி கொடுக்கப்படுகிறது.

நோயைக் கொடுக்கும் கெட்ட ஆவிகள் ஊரில் நுழையக்கூடாது என்பதற்காக வீடுகளின் வாசல்களில் வேப்பிலையைச் செருகி வைப்பார்கள்; இந்த வேப்பிலையைக் கண்டவுடன் இது பாலை வனப் பகுதி, இங்கு யாரும் இருக்கமாட்டார்கள் என்று நோயைக் கொடுக்கும் கெட்ட ஆவிகள் சென்று விடுமாம். சில வீடுகளில் கள்ளை ஊற்றிச்சிறு கலயத்தைத் தொங்க விடுவார்கள்; இதனைப் பார்த்து கள்ளைக் குடிக்கும் மனிதர்கள் இருந்தால் கள் இருக்காது. ஆகவே இங்கு மனிதர்கள் இல்லைபோலும் என்று நினைத்துக் கெட்ட ஆவிகள் திரும்பிவிடும் என்று நம்பப்படுகிறது; சில சமயம் கள்ளைக் குடித்துவிட்டுக்கெட்ட ஆவிகள் திரும்பிவிடும்; அதற்காக இவ்வாறு செய்கிறார்கள் என்று சொல்லிவிடுகிறார்கள்.

ஆகவே, திராவிடத் தெய்வ வழிபாட்டில், கெட்ட ஆவிகள் (demonolatry) பற்றிய கருத்தும் இருக்கிறது; அடிப்படைத் தெய்வ வழிபாட்டில் கெட்ட ஆவிகளும் அங்கம் வகிக்கின்றன.

### உருவ வழிபாட்டின் பொருள் (The meanings of the idols)

கரடுமுரடான, உருவம் பதிக்காத கற்களிலும், படிமங்களிலும் திராவிடத் தெய்வமான ஆவி இருப்பதாக நம்பப்படுகிறது; இதனால் ஐரோப்பிய நாடுகளில், திராவிடர்கள் கற்களையும் குவியல்களையும் வணங்குவார்கள் என்று சொல்லுகிறார்கள். இது உண்மைச் செய்தி இல்லை. இந்துக்கள்தாம் இவ்வாறு வணங்குகிறார்கள். அவர்களுக்குத் தெய்வம் எல்லாப் பொருள் களிலும் இருக்கிறது என்ற நம்பிக்கை இருக்கிறது; கல், மண் போன்ற பொருள்களிலும், உயிருள்ள, உயிரற்ற பொருள்களிலும் இறைவன் இருப்பதாக அவர்கள் எண்ணுகிறார்கள். இறைவன் எங்குமிருக்கிறார் என்பதால், எந்தப் பொருளையும் உருவமாக ஏற்றுக் கொள்கிறார்கள்; ஆகவே வசதிக்கேற்ப விருப்பத்திற்கேற்ப எந்த பொருளையும் அவர்கள் இறைவனாக ஏற்றுக் கொள் கிறார்கள்.

திராவிடர்கள் அவ்வாறு இல்லை. ஆவியுள்ள-தங்கியிருக்கிற பொருட்களைத் தான் வணங்கி வருவார்கள் என்பது பற்றி முன்னைய பகுதிகளில் கண்டோம். தற்காலிகமாகவோ, நிரந்தர மாகவோ வெளியுள்ள ஆவி தங்கிய பொருட்களைத்தான் வழிபட்டு வருகிறார்கள்; ஒரு சமயம் வழிபட்ட தெய்வம் தங்கிய பொருளை ஒரு சமயம் எறிந்து விடுவது திராவிடர்களின் பழக்கம். இதனால்

அவர்கள் தெய்வத்தைத் தூக்கி எறிவதாகப் பொருளில்லை; அப் போது அந்தப் பொருளில் தெய்வம் இல்லை என்ற நோக்கிலேயே அவற்றை வெளியே வைத்து விடுகிறார்கள். ஒருநாள் அவைகளை மாடு, ஆடு மிதித்துச் சிதைக்கவும் செய்யலாம். மரங்களில்கூட சிலர் பொட்டு வைத்து வழிபடுவார்கள். மரங்களை வழிபடுவ தாகப் பொருள் இல்லை. அப்போது அம்மரங்களில் தெய்வம் இருப்பதாக நம்பப்படுகிறது. மரங்களை வழிபடுவது இந்து முறை, திராவிட மரபல்ல.

ஆகவே குவியல்களையும் கற்களையும் வணங்குபவர்களல்ல திராவிடர்கள்; ஆவிகளை வணங்குபவர்கள்தாம் திராவிடர்கள் என்று டபிள்யூ. டி.,எல்மோர் குறிப்பிடுகிறார் (1984:148). ஆவி களுக்குத் தொடர்பில்லாத வடிவமில்லாத படிமங்களையும் கற்களை யும் ஏன் வழிபடவேண்டும் என்ற கேள்வி எழலாம். இனமரபுச் சின்ன முறைமை இதற்குப் பதில் சொல்லும் முறையில் இருக்கிறது. அதாவது முதன் முதலில் ஆவி தோன்றிய இடத்தைக் குறிப்பிடப் பலி கொடுத்து ரத்தம் சிந்திய இடத்தையே தெய்வம்-அதாவது ஆவி குடிகொண்ட இடமாக்குவர்; அந்த இடம் மக்கள் வணங்கும் இடமாக மாறும்; அப்போது அவ்விடத்தைக் குறிப்பிட்டுக் கூற கல்லை நடுவார்கள்; நாளடைவில் அந்தக்கல் தெய்வமாகிறது.

ஆகவே கல்லில் வெளியிருந்த ஆவி குடிகொண்டுவிடுகிறது; பின் அது தெய்வமேறிய கல்லாகிறது; அதை வழிபடுகிறார்கள்; அக்கல் இடமாற்றப்பட்டால் வேறொரு கல் நடுவார்கள்; இப் போது நடப்பட்டக் கல்லில் தெய்வம் இருக்கும்; வீசப்பட்டக் கல்லில் தெய்வம் இருக்காது. இவ்வாறே திராவிடத் தெய்வ வழிபாடு இருக்கிறது.

## திராவிடத் தெய்வ வழிபாட்டில் மிருகப் பலி பெறும் இடம் (The meaning of the Sacrifices.)

பலி கொடுப்பதன் அடிப்படை நோக்கமே, தெய்வத்தைத் திருப்திப் படுத்துவதே யாகும்; ஆவியாகிய தெய்வங்கள் ரத்தத் தாகங் கொண்டவை; ஆகவே தான் மிருகங்களைப் பலி கொடுத்து ரத்தம் சிந்த விடுகிறார்கள்; பல இடங்களில் அந்த ரத்தத்தைப் பூசாரி குடிப்பார்; பூசாரியே கடவுளாக மதிக்கப்படுவதால்-பிரதிநிதி யாக ஆக்கப்படுவதால் அவ்வாறு ரத்தத்தைக் குடிக்கிறார்; பூசாரி மூலமாக தேவதையின் ரத்தத் தாகம் அடங்குகிறது. சில இடங் களில் சக்திக் கோயில்களில் ரத்தத்தை வாயில் ஊற்றுகிறார்கள்;

ரத்தத்தில் தோய்ந்த அரிசிச் சோற்றை அல்லது அரிசியைத் தங்கள் வயல்களில் விவசாய மக்கள் தூவுகிறார்கள்; கெட்ட ஆவிகள் வந்து விளைச்சலைப் பாதிக்காமல் இருப்பதற்காக இவ்வாறு செய்கிறார்கள்; இதிலிருந்து கெட்ட ஆவிகள் ரத்தம் விரும்பிகள் என்பது தெளிவாகிறது (எல்மோர், டபிள்யூ.டி., 1984;50).

தெய்வங்களுக்குப் பலி கொடுக்கும்போது, ரத்தத்தைத் தெய்வம் ஏற்றுக் கொள்கிறது; உடற்பகுதியாகிய கறியை மனிதன் சாப்பிடுகிறான்; அதாவது வழிபடும் மனிதன் உணவாக ஏற்றுக் கொள்கிறான்; இக்கருத்து ரோமன் கத்தோலிக்கச் சமயத்திலிருந்து வந்ததாக இருக்கலாம் என்று பிஷப் வொய்ட் ஹெறட் குறிப்பிடுகிறார் (Madras government MuseumsBulletin3:179)ரத்தம் கேட்டதால் ஆவிக்கு ரத்தம் கொடுக்கப்பட்டது; ரத்தம் இங்கு உயிருக்கு அடையாளம்; உயிரை ஆவிக்கு-தெய்வத்திற்குக் கொடுப்பதாக ஆகிறது; ஆவி கேட்டது உயிரையே என்பது உறுதிப்படுகிறது.

ஆவி ஏன் உயிரைக் கேட்க வேண்டும்; ஆவிகள் பூமியில் மனிதர்களாக இருந்தவர்களே;ஆகவே அம்மனிதர்களை புதைக்கும்போது, அவர்கள் விருப்பம் இதுவாக இருக்கும் என்று நினைத்து, ஆயுதம், தின்பண்டம், கறி போன்றவற்றையும் சேர்த்துப் புதைக்கிறார்கள். இவைகள் ஆவிக்கு அடுத்த உலகில் பிறக்கும்போது தேவையாக இருக்கலாம் என்று எண்ணப்படுகிறது. சில சமயம் மனிதப் பலியும் ஆவிக்குக் கொடுத்திருக்கிறார்கள்;ஆவி தன்னுடைய மனைவியையே ஏற்றுக் கொள்கிறது. பெண்ணாக இருந்தால் கணவனை ஏற்றுக் கொள்கிறது. இது கெட்ட ஆவிகளின் செய்கையாக இருக்கிறது.

தேவதைகளுக்கு உணவு படைத்து வழிபடுவோர் பொதுவாக இருந்து விருந்து உண்பது இன்றும் காணும் செய்தியாகும்; கடா வெட்டிச் சோறாக்கிப் படைத்து உண்கிறார்கள்; முதலில் படைத்ததைப் பூசாரி உண்கிறார்; தேவதையே பூசாரி உருவில் உண்பதாக எண்ணப்படுகிறது; குருபூசையிலும் இக்கருத்துப்படியே உணவு பரிமாறப்படுகிறது. கூட்டமாக இருந்து உண்ணும் பழக்கம் ஆதி கால மனிதர்களிடையே இருந்த பழக்கம்தான்; இறைவனையும் நட்பாக்கிக் கொள்வதற்காக ஏற்பட்டதாகவும் இருக்கிறது.

இறந்தவர்களுக்குக் கருமாதி செய்யும்போது நடுகல் நட்டு, காகத்திற்குச் சோறு படைக்கிறார்கள்; கல்லிற்கும் சோறு படைக்கிறார்கள். ‘சோறு சாஸ்திரம்’ என்றே கருமாதியை சில சாதியினர்

(கவுண்டர் போன்றோர்) சொல்லுகிறார்கள்; காகத்திற்கும் கல்லிற்கும் சோறு வைப்பது எதற்கு? கல்லில் ஆவி தங்குவதாக எண்ணப்படுகிறது; ஆவியே சாப்பிடுவதாக நினைக்கிறார்கள். ஆனால் காகத்திற்குச் சோறு ஏன் வைக்க வேண்டும்? வானம் முழுவதும் ஆவிகளே நிறைந்து இருக்கின்றன; இறந்தவருடைய ஆவி அவைகளோடு கூட்டமாகி விடுவதன் அடையாளமாக இருக்கலாமா? அப்படி இருந்தால் காகத்திற்கு ஏன் சோறு படைக்க வேண்டும்; வெறுமனே திறந்த வெளியில் படைக்கும் சோறு, காகத்திற்கென்று ஏன் சொல்ல வேண்டும். காகம் கொத்திய பிறகுதான் இறந்த வீட்டார் திருப்திப்படுகிறார்கள். காகத்தை ஆவியுலகத்தினரின் பிரதிநிதியாகக் கொள்ளலாமா? இனமரபுச் சின்ன முறைமைப்படி காகம் மனிதன் தோழனாகிறதாகக் கொண்டால் இக் கேள்விக்குப் பதில் சரியாக இருக்கும்.

**திராவிடத் தெய்வங்களின் தோற்றம்**

திராவிடத் தெய்வங்களோடு தொடர்புடைய புராணக்கதைகள், திராவிடத் தெய்வங்களை இந்துச் சக்திகளின் அவதாரமாக்கி விட்டன; இந்துத் தெய்வத்தின் பலமாகிய அவனுடைய மனைவியின் உருவே இந்துச் சக்தியாகும்; ஆனால் திராவிடச் சக்தி என்பது கெட்ட சக்திகளை யுடைய பெண் ஆவியே (female ghost) ஆகும்; ஆகவே இந்துச் சக்தி வேறு; திராவிடச் சக்தி வேறாகும்.

பொதுவாகத் திராவிடத் தெய்வங்களில் பெண் தெய்வங்கள், எல்லாம் இந்துச் சக்தியோடு தொடர்புப் படுத்தப்படுகின்றன; இரண்டு பண்பாடுகளிலும் பெண் தெய்வங்களின் வளர்ச்சிக் காரணங்கள் ஒன்றாகவே இருக்கின்றன. திராவிடத் தெய்வங்கள் பெண்களாக இருப்பதற்குரிய காரணம் என்ன? இதற்கு சிறப்பான காரணங்கள் ஒன்றுமில்லை. யாரும் விரும்பாத குணங்களையே இப் பெண் தெய்வங்கள் கொண்டிருக்கின்றன; பொறாமை, சச்சரவு செய்யும் மனப்பான்மை போன்ற குணங்களையே கொண்டிருக்கின்றன.

தென்னிந்தியாவில் வாழும் திராவிடப் பெண்கள் தாம் ஆண்களைவிடக் கெட்ட வார்த்தைகளையும் வசை மொழிகளையும் பேசுபவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் வாய் திறந்தால், ஆண்கள் அருகில் நிற்கமுடியாது. அடங்கியிருந்தவர்கள் வாய் திறந்தால் இப்படித்தான் இருக்கும் போலும். ஆரியர்களும் முகமதியர்களும் ஆதிக்கம் செலுத்தியதால் இப் பெண்கள் அடக்கப்பட்டிருந்தார்கள்.

இருந்தபோதும் அவர்கள் முன்பு நடப்பது போலவே இருந்தார்கள். அவர்களின் வசவும், சாபமும் உலகறிந்தவை. அவர்கள் விடுதலை யடைந்தவுடன் இன்னும் கொடூரமாகக் காட்சியளிக்க ஆரம்பித் தனர். இதனால்தான் ஆண்களின் ஆவியைவிடப் பெண்களின் ஆவி கொடூரமாகக் காட்சியளிக்கிறது (எல்மோர், டபிள்யூ.டி., 1984: 155). மேலும் ஆண்களை விடப் பெண்களே உணர்ச்சி வசப்படக் கூடியவர்கள்; அடக்கம் அவர்களின் உணர்வை மேலும் தூண்டி விடும்; அவர்கள் கணவனுக்கு அடங்கி, சமுதாயத்திற்கு அடங்கி யிருந்ததால்; அவ்வடக்கம் அவர்களை பழிவாங்கத் தூண்டிவிடு கிறது. இதனால்தான் அவர்கள் ஆவி கோபாவேசமாக இருக் கின்றன; பெண்கள் கோபப்பட்டால் விரைவில் அடக்கிவிட முடியாது.

சமீபத்திய ஜூனியர் விகடன் என்ற இதழில் உள்ள செய்தி. மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட குழந்தைகள் தாயின் கொடூர மான செயலால் பாதிக்கப்பட்டவர்களாக இருந்தார்கள். குடிகாரக் கணவன்; ரேஸ் பைத்தியக் கணவன்; அவன் தொல்லையால் பாதிக்கப்பட்ட பெண்; அவள் தன் கோபத்தைக் குழந்தையிடம் காட்டியிருக்கிறாள்; ஆறுமாதக்குழந்தை பாலுக்காக அழும்போதும், தூக்கத்தைக் கலைத்து அழும்போதும் விறகுக் கட்டையால் அடித்தி ருக்கிறாள்; முகத்தில் இடித்திருக்கிறாள். ஆகவே அக்குழந்தை விபத்தில் சிக்கியது போன்ற காயங்களுடன் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. அடி கொடுத்துவிட்டு அழுதிருக்கிறாள் தாய்; முட்டி மோதி புலம்பியிருக்கிறாள். நடந்ததற்காக வருந்தி யிருக்கிறாள். இவ்வாறு அவள் செய்தது ஒரு தடவை இரண்டு தடவை அல்ல. பலமுறை கோபத்தில் செய்துவிட்டு வருந்தியிருக் கிறாள். இவளுடைய செய்கையை மருத்துவர்கள், டிஸ்ப்ளேஸ் மெண்ட் ஆஃப் இமோஷன் (Displacement of Emotion) அல்லது ரியாக்ஷன் ஃபார்மேஷன் (Reaction formations) என்றும் சொல் கிறார்கள். தமிழில் இதை இடமாறிப்போன உணர்ச்சியின் வடி கால் என்று கூறலாம். இச்செய்கைக்குக் காரணங்கள் எவை? கோளாறாகிப் போன தாம்பத்தியம், விவாகரத்து, குடி, போதை மருந்துப் பழக்கம், மூளைக் கோளாறு, பணமின்மை போன்ற சூழ் நிலைகளின் கனம் தாங்கமாட்டாமல் தவிக்கும் நபர், தன்னுடைய கோப, தாப, ஏக்க, விரக்தி, பொறாமை இத்யாதி உணர்வுகளுக்குச் சரியான வடிகால் இன்றி, எதிர்க்க முடியாத, தன்னையும்விட எல்லாவற்றிலும் சிறிய, பாதுகாப்பு இல்லாத, தன்னை அண்டிய குழந்தைகளை அடித்து நொறுக்குவதன் மூலம் ஒருவித சமாதானம் அடைவது உண்டு. இக் குழந்தையும் இந்த வகையில் பாதிக்கப் பட்டதுதான் (6-2-1985).

. இந்த முறையில்தான் பெண்கள் இறந்தவுடன் அவர்கள் ஆவி கொடூரமானதாக இருக்கிறது. அதைச் சமாதானப் படுத்த முடியாத அளவில் இருக்கிறது. இதுவே திராவிடச் சக்தியாகிறது.

இறந்தவர்களின் ஆவிகளே திராவிடத் தெய்வங்களின் தோற்றமாக இருக்கின்றன என்று டபிள்யூ. டி. எல்மோர் (1984:154) கூறுகிறார். இதற்கு அடிப்படை, ஆவியுலக நம்பிக்கையே யாகும். பூமியில் மனிதன் எவ்வாறு வாழ்ந்தாலும், அவனுடைய ஆவியைப் பற்றி மக்கள் அஞ்சத்தான் செய்கிறார்கள்; இதனால் ஆவி தெய்வமாகிறது.

இறந்தவர்களுடைய ஆவி மயானத்திலிருந்து திரும்பி வரக் கூடாது என்பதற்காக மக்கள் பலவித சடங்குகளைச் செய்கிறார்கள். லம்பாடி இனத்தாரில் வீட்டுக் கொருவரை மயானத்திற்கு அனுப்புகிறார்கள்; பிணத்தைப் புதைக்க நடக்கும் கடைசி சடங்குவரை இருந்துவிட்டு திரும்பி விடுகிறார்கள். வீட்டிற்குத் திரும்பியவுடன் பலவிதங்களில் குளிக்கிறார்கள். அதன்பின் அவர்கள் தங்கியிருக்கும் கூடாரத்தை அவிழ்த்து வேறு இடத்தில் போடுகிறார்கள். அவ்வாறு செய்தால், ஆவி தொடர்ந்து வராது என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருக்கிறது. ஒருவர் இறந்துவிட்டால் அதாவது பாதத்தில் இறந்துவிட்டால், அவருடைய பிணத்தை வாசல் வழியே கொண்டு போகாது, வீட்டில் ஒரு பகுதியை இடித்து, அதன் வழியே கொண்டுசெல்வர். அதன்பின் அவ்வழியை அடைத்து விடுவர். இறந்தவர் ஆவி திரும்ப வரக்கூடாது என்பதற்காக இவ்வாறு செய்யப்படுவதாகக் கூறப்படுகிறது. கோமியம் வீடு மூழுவதும், வீதி முழுவதும் தெளிக்கப்படுகிறது; ஆவி திரும்பக் கூடாது என்பதற்காகத்தான் இவ்வாறு செய்யப்படுகிறது. உடுத்திய துணிகளை அலசிப் போடுவதும், துணிகளில் ஆவி இருக்கக் கூடாது என்பதற்காகத்தான்.

வினோதமான முறையில் இறந்தவருடைய ஆவி உடனேதெய்வமாகிறது; கெட்டவர்கள் கொலை செய்யப்படும்போது அவர்கள் ஆவி உடனே தெய்வமாகிறது; அது கொடூரமானதாக இருப்பதால் மிகவும் அஞ்சி சாந்தப்படுத்தப்படுகிறது; தெய்வமாகிறது.

கட்டாயமாக இறக்கடிக்கப்பட்டவர்களும்; பெண்களும், குறிப்பாகப் பேறு காலத்தில் இறந்தவர்களும், சமுதாயத்தில், அநியாயமாகக் கொல்லப்பட்டவர்களுமாகிய இவர்களின் ஆவிகள் உடனடியாக தெய்வமாகப் போற்றப்படுகிறது; இந்த ஆவிகள் அமைதிப்

படுத்தப்பட வழிபாடு நடத்தப்படுகிறது. மாலைத் தெய்வங்கள் வழிபடப்படும்போது பயத்தினால் வணங்குவதில்லை; அவைகள் உலகில் வாழும்போது நல்லவைகளாக இருந்ததால் வழிபடப் படுகின்ற

## திராவிடச் சமயத்தின் நெறிமுறைகள் (Morality of the Dravidian Religeion)

திராவிடச் சமயத்தின் வழிபாட்டுச் சடங்குகளை முதன் முதலில் பார்ப்பவர் யாரும் அதிர்ச்சியடையத்தான் செய்வார்கள்; இந்துச் சமயத்தோடு ஒப்பிடும்போது திராவிடச் சமயச் சடங்குகள் காட்டுமிராண்டித் தன்மையாகத் தோன்றலாம்; இந்துச் சமயச் சடங்குகள் செம்மைப்பட்டவையாகத் தோன்றலாம். ஆனால் ஆழ்ந்து உற்று நோக்கிக் காணும்போது திராவிடச் சமயச் சடங்குகள் அதிர்ச்சியூட்டும் முறையில் இருந்தாலும் அந்த முறையில், இந்துச் சமயத்தைப் போன்று ஒழுக்கக் கேடுகள் அவ்வளவாக இருக்காது என்று டபிள்யூ.டி. எல்மோர் கூறுகிறார் (1984:54)

பிராமணர்களின் இந்துச் சமயத்தில் மதிப்பைக் கெடுக்கும் பழக்கங்களை மிகுதியாகக் காணலாம்; இந்துச் சமயச் சீர்திருத்த வாதிகளுக்கு இத்தன்மைகளைக் கண்டால் வெறுப்பை மிகுதிப் படுத்தும். விழா என்ற பெயரில் நடக்கும் வரம்பு மீறிய ஒழுக்கக் கேடுகள் இந்துச் சமயத்தில் மிகுதி; புண்ணிய ஸ்தலங்கள் எல்லாம் மோசமான அருவருக்கத் தக்க இடங்களாக மாறியிருக்கின்றன; கோயில்களில் பதியிலாக் குலத்தாரின் தொடர்புகள் மிகுதியாக இருந்தன; குழந்தை வரம் கேட்டுப் பெண்கள் கோயில்களுக்கு அலைகின்றனர். இவையெல்லாம் இந்துச் சமயத்தில் உளுத்துப் போன பழக்கங்கள். இவற்றைப் பார்க்கும்போது திராவிடச்சமயம் மேலானதாகவே தோன்றும்.

மேலே கண்ட பழக்கங்களை எல்லாம் திராவிடச் சமயத்தில் இல்லவே இல்லை. இரவில் நடக்கும் ஆடல் பாடல் கூத்துக் களி யாட்டங்கள் அருவருக்கத் தக்கனவாக இருக்கலாம்; ஆனால் இரவில் நடக்கும் ஆவி வழிபாடு இவற்றை அமுக்கிவிடும். இரவில் ஒன்றாக வரும் கூட்டத்தினர் குற்றங்கள் செய்யலாம்; ஆனால் இந்துச் சம யத்தை நோக்க இது மிகச் சொற்பமே ஆகும்; இந்துச் சமயத்தை விட புனிதமானது; திராவிடப் பூசாரிகள் பிராமணப் பூசாரிகளைவிட மக்கள்மீது செலுத்தும் ஆதிக்கச் செயல் குறைவானதேயாகும்;

ஆகவே தங்களின் ஆன்மீக அதிகாரத்தை ஒழுக்கக் கேடான நோக்கத்திற்குப் பயன்படுத்துவதற்கு வாய்ப்பில்லாது போகிறது.

திராவிடச் சமயத்தில், கெட்ட நடத்தையுள்ளவன் இறந்தபின் அவன் ஆவி தெய்வமாவதாகக் காட்டப்படுகிறது; இதனால் திராவிடச் சமயத்தில் நல்லவர்களுக்கு மதிப்பில்லையா என்று தோன்றும். இந்தக் கெட்ட ஆவி உண்டாவதற்குக் காரணமானவர்கள்தான் அவற்றைக் கண்டு பயப்பட வேண்டும்.

திராவிடச் சமயம் மக்களுடைய நெறிமுறையைப் பிரதிபலிக்கிறது. அதற்காக அது பொறுப்பேற்றுக் கொள்வதில்லை.

தொகுத்துப் பார்க்கும்போது, திராவிடத் தெய்வவழிபாடு, இன மரபுச் சின்ன முறைமையால் இயங்குவது என்று தெரிகிறது; எல்லா உயிர்களையும் தன் உடன்பிறப்பாக்கிக் கொள்ள விழையும் முறையே இந்த இன மரபுச் சின்ன முறைமையாகும்; திராவிடத் தெய்வ வழிபாட்டில் உயிரற்ற போலி வழிபாட்டுப் பொருளை வழிபடு பொருளாகப் பயன்படுத்துகிறார்கள் என்றும் அது ஆப்பிரிக்காவில் பயன்படுத்தும் உயிரற்ற போலி வழிபாட்டுப் பொருளைவிட வேறானது என்றும் தெரிகிறது; திராவிடத் தெய்வம் ஆவியுலகக் கோட்பாடுடையது; திராவிடர்களின் பேய் பற்றிய கொள்கையே அவர்களின் தெய்வ நிலைக்கு ஆதாரமானது என்பதும் தெரிகிறது; திராவிடத் தெய்வ வழிபாட்டில் உருவத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப் படுவதில்லை; எந்தக் கல்லும் - ஒழுங்கற்றக் கல்லும் ஆவி நிலைகொண்டபின் வணங்கப்படுகிறது என்றும் கல்லை மாற்றும்போது மாற்றிய கல்லுக்கு முக்கியதுவம் இல்லாது புதிய கல்லுக்குக் கொடுக்கப்படுகிறது என்பதும் பெறப்படுகிறது; திராவிடத் தெய்வ வழிபாட்டில் பலிப் பொருட்கள், தெய்வமாகிய நம் முன்னோர் நம்முடன் இருந்து உணவு கொள்கிறார் என்ற கருத்துப்படியே பரிமாறப்படுகின்றன என்பது தெரிகிறது; திராவிடத் தெய்வத் தோற்றமே ஆவியிலிருந்து வந்ததுதான்; இந்த ஆவித் தெய்வவழிபாட்டில், நெறிமுறை பின்பற்றப்படுகிறது; இந்துச் சமயத்திலுள்ள ஒழுக்கக் கேடுகள் எல்லாம் திராவிடச் சமய வழிபாட்டில் இல்லை என்பதும் தெரிய வருகிறது.

# 12. நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டு முறை

திராவிடத் தெய்வங்கள் குறிப்பிட்ட செயலுக்காக வழிபடப் படுபவை; தனிமனிதன் நோய்நொடி தீர்க்க வேண்டி வழிபட்டு வருபவை; அதுவே நோக்கமாக ஊராரும் வணங்கி வருகிறார்கள்; உலகத்தை நோக்கமாகக் கொண்டு வழிபடப்படுபவை யல்ல; இவை நாட்டுப்புற மக்களின் தெய்வங்கள். ஆகவே சொந்த நலனுக்கு அப்பாற் செல்லாதவைகளாக இருக்கின்றன; ஆனால் இந்துத் தெய்வங்கள் உலகினுக்குரிய தெய்வங்களாக மதிக்கப் பெறு கின்றன. அவை ஆக்கல் அழித்தல் காத்தல் ஆகிய செயல்களைச் செய்யும் தத்துவார்த்தத் தெய்வங்கள். திராவிடத் தெய்வங்களை வழிபடவில்லை என்றால் நோய்நொடி வரும் என்பதற்காக அத் தெய்வங்களை அமைதிப் படுத்த வேண்டியே வழிபாடு நடத்தப் படுகின்றன என்பது முந்திய இயல்களில் சொல்லப்பட்டது. அநத வழிபாட்டு முறைகள் எவ்வாறு இருக்கும் என்பது இங்குச் சொல்லப் பெறுகின்றது.

திராவிடத் தெய்வங்களாகிய நாட்டுப்புறத் தெய்வங்களை வழி படுவதைக் கோயில் கும்பிடுதல் என்று சொல்லுவார்கள். இக் கோயில்களுக்கு நித்த பூசை எல்லாம் நடத்தப்படுவதில்லை. மக்கள் விரும்பும்போது பூசை நடக்கும; நாட்டுப்புறத்தில வரன் முறையிருப்பதில்லை. அதனால் வழிபாடு நடக்கும் காலத்திலும் வரன்முறையில்லாது இருக்கிறது. ஆண்டுக்கு ஒருமுறை வழிபாடு நடத்துகிறார்கள். இதைப் பெரிய கும்பிடு அல்லது பெரிய பொங்கல் அல்லது கொடை என்று சொல்கிறார்கள். அவ்வாறு கும்பிடும்போதும் இன்ன மாதத்தில்தான் வழிபடவேண்டும் என்ற நியதியில்லை. நாட்டுப்புற மக்களின் வசதிக்கேற்ற மாதங்களில் ஏதாவது ஒரு கிழமையில் நடத்துகிறார்கள். வெள்ளி, செவ்வாய் பெண் தெய்வக் கோயில் கும்பிடும்நாட்களாகும். ஆனால் ஆண் தெய்வக் கோயில்களுக்கு இந்த வரையறை யில்லை. ஞாயிற்றுக் கிழமைகளிலும் பொங்கல் நடத்துகிறார்கள். பெரும்பாலும புதன், சனிக் கிழமைகளில் இறைச்சி சாப்பிடுவதற்கு வசதியாக செவ்வாய, வெள்ளிகளில் பொங்கல் நடத்தி மறுநாள் கடா வெட்டுகிறார்கள். புதன், சனிக்கிழமைகளில் எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் பழக்கம். நாட்டுப்புற மக்களிடையே இருக்கிறது. ஆகவேதான் இறதக் கிழமைகளில் பொங்கல் நடக்கிறது என்று சொல்லுகிறார்கள்.

கோயில் கும்பிடுவதற்கு முன், ஒருநாள் ஊர் கூடி முடிவு செய்வார்கள். இந்த ஆண்டு விளைச்சல் பரவாயில்லை; ஆகவே 'கைக்கு மொய்க்கு'ப் பணம் தாராளமாக இருக்கிறது; கோயில் கும்பிடுவோம் என்பார்கள்; அல்லது, கோயில் இரண்டு மூன்று ஆண்டுகள் கும்பிடாது இருப்பதால் மழை பெய்யாதிருக்கிறது; விளைச்சலும் சரியில்லை, கோயில் கும்பிடவேண்டும் என்பார்கள்; ஊரில் கொள்ளை நோய் வந்துள்ளது; அம்மை நோய் கண்டுள்ளது; இப்போதுதான் நோய் நீங்கியுள்ளது; ஆகவே அம்மனுக்குப் பொங்கல் வைக்க வேண்டும்; மேலும் இத்தகைய நோய்நொடி வராது தடுக்க வேண்டும். இவ்வாறு பலவிதங்களில் பேசி, கோயில் கும்பிடுவதை முடிவு பண்ணுவார்கள்.

கோயில் கும்பிட முடிவு செய்தபின், இதைக் கோயிலுக்குச் சென்று உறுதிப்படுத்த வேண்டும் என்ற முடிவும் எடுப்பார்கள்; அதாவது தெய்வத்தின் முன் சென்று இந்த ஆண்டு கோயில் கும்பிட வேண்டுமா,வேண்டாமா என்று அனுமதி கேட்பார்கள்; ஒருவெள்ளி அல்லது செவ்வாய்க் கிழமை கோயிலுக்குச் சென்று அனுமதி கேட்பார்கள்; இந்த அனுமதி கேட்கும் முறை பலவிதங்களில் அமையும். பல்லி சகுனம் கேட்டலும் ஒருமுறை. கோயிலுக்குப் பூசை நடத்தி பல்லி சொல்வதைக் கேட்க ஆயத்தமாவார்கள். குறிப்பிட்ட மூலையில் இருந்து பல்லி சொன்னால் நல்ல சகுனமாகக் கொண்டு கோயில் கும்பிட முடிவு செய்வார்கள். பூக்கட்டிப் பார்க்கும் முறையும் உணடு. வெள்ளைப் பூ ஒரு இலைச் சுருளிலும் சிவப்புப் பூ ஒரு இலைச் சுருளிலும் கட்டிப் போடுவார்கள்; ஒரு சிறு குழந்தையை அழைத்து ஏதாவது ஒன்றை எடுக்கச் சொல்வார்கள். வெள்ளைப் பூ வந்ததென்றால் அந்தாண்டு பொங்கல் வைக்கலாம் என்று தெய்வம் உத்தரவு கொடுத்ததாகக் கொள்வார்கள்; ஆனால் மக்கள் முடிவுக்கு எதிராகத் தெய்வம் குறுக்கிடுவதில்லை; வெள்ளைப்பூ தான் வரும் எள்று எல்லா ஊர்களிலும் சொல்லுகிறார்கள். ஊர்க் கூட்டத்தில் சச்சரவு இருந்தால் இங்கும் வெள்ளைப் பூ வராது; சிவப்புப் பூதான் கிடைக்கும். அப்போது கோயில் கும்பிடுவது இல்லை.

இவ்வாறு முடிவு செய்தபின், தெய்வம் உத்தரவு கொடுத்ததை ஊர் மக்களுக்குச் சொல்லுவார்கள். அதைத் தோட்டி இன்ன தேதியில் ஊர்ப்பொங்கல் நடக்கப்போகிறது என்று தெருவெல்லாம் சாட்டுவான்; உரத்த குரலில் தப்பு அடித்துச் சொல்லுவான்; இதை ஊர்ச் சாட்டுதல் என்று சொல்லுவார்கள். ஊர் சாட்டிவிட்டவுடன், அக் கோயில் கும்பிடுவதற்கு அடையாளமாகக் காப்புக் கட்டுவார்கள் தோரணம் கட்டுவார்கள்; அதாவது வேப்பங் குழையை வைக்

கோலால் திரித்த கயிற்றில் கட்டித் தெருவில் தொங்கவிடுவார்கள். கோயில் கும்பிடுவதற்கு ஒரு வாரத்திற்கு முன் இந் நிகழ்ச்சி நடை பெறும்.

அதன்பின் கோயில் கும்பிடுவதற்கு வரி வசூல் செய்யத் தொடங் குவர். ஒரு குடும்பத்திற்கு இவ்வளவு என்ற விகிதத்திலும் வசூல் செய்வார்கள்; சில ஊர்களில் ஒரு குடும்பத்திற்கு இவ்வளவு என்றும் வசூலிப்பார்கள். மிகுதியான வருமானம் தேவைப்பட்டால், ஒரு ஏருக்கு இவ்வளவு என்றும் அதிகப்படியான வசூல் செய்வார்கள். அதாவது ஏர் வைத்திருப்பவர்கள், குடும்பம் என்ற கணக்கிலும் வரி கொடுக்க வேண்டும். ஏர் வைத்திருப்பவர் என்ற முறையிலும் வரி கொடுக்க வேண்டும். ஏக்கராக் கணக்கிலும் வரி வசூல் செய்வார் கள். ஒரு ஏக்கர் நிலம் வைத்திருப்பவர்கள் இவ்வளவு கொடுக்க வேண்டும் என்ற முறையில் இந்த வசூல் இருக்கும். ஊர் அம்பலக் காரர், அல்லது பெரிய தனக்காரர் என்று சொல்லப்படுகிற ஊர்ப் பெரியவர்கள் முன்னின்றுக் இவ்வசூலைக் கவனித்துக் கொள் கிறார்கள். இவர்களுக்குத் துணையாகக் கோயில் மரியாதை யைப் பெறும் ஒருவர் இருப்பார். மேலக்கல்லூரணியில் இவர்களை மானியக்காரர், எல்லைக்காரர் என்று அழைத்து வருகிறார்கள்.

வசூல் ஒரு பக்கம் நடந்து கொண்டிருக்க, பொங்கலுக்கு வேண்டிய முன்னேற்பாடுகளைக் கவனிக்க ஆய்த்தமாவார்கள்; கோவில் சாமிக்குச் சிலை செய்வதற்காக அச்சாரம் கொடுப்பர்; உள்ளூரில் வேளார் செட்டியார் இருந்தால் அவரிடம் அச்சாரம் கொடுப்பர்; வெளியூர்க் காரராயிருந்தால் அவரை அழைக்க ஆள் விடுவர்; அவர் வந்து அம்பலகாரரிடம் பேசி அச்சாரம் பெற்றுச் செல்லுவார். சிலை செய்யும்போது கண்மாய்க்கரையில் மண் ணெடுத்து, பூசை செய்து சிலையைச் செய்யத் தொடங்குவார். கோயிலுக்கு வேண்டிய பூவுக்கும் மேளக்காரர்களுக்கும் அடுத்து அச்சாரம் கொடுத்து உறுதிப்படுத்திக் கொள்வர்.

அம்மன் கோயிலாக இருந்தால் சில ஊர்களில் பொதுவில் அக்னிச்சட்டி யெடுப்பார்கள்; கோயில் கும்பிட உறுதி செய்த நாளி லிருந்து அக்னிச்சட்டி எடுப்பவர் விரதம் இருப்பார்; இவர் ஆணாக வோ, பெண்ணாகவோ இருக்கலாம்; சில ஊர்களில் கோயில் பூசாரியே அக்னிச்சட்டி எடுப்பார். கோயில் கும்பிடும் நாளுக்கு இரண்டு மூன்று நாட்களுக்கு முன் அக்னிச் சட்டி 'முத்திரி தறித்தல்' நிகழ்ச்சி நடைபெறும்; அதாவது மேளக்காரர்கள் வந்து, முழங்க, அக்னிச் சட்டி வளர்ப்பார்கள்; மண்சட்டியில் முதலில் வேப்பங்

குழையை வைத்து உமியைப் போட்டு அதன்மீது சுள்ளிகளை அடுக்குவர்; பின் எண்ணெய் ஊற்றி நெருப்பு வளர்ப்பார்கள்; சாமியாடி, பூசை நடக்கும்போது வந்து நிற்பார். அவருக்கு அருள் வந்து ஆடுவார்; சிலர் பேயாட்டம் போன்று குதிப்பர். அருகில் உள்ளவர் பிடித்துக் கொள்வார்கள், சட்டியைக் கையில் வேப்பங் குழையை வைத்துக் கொண்டபின் எடுப்பார்; ஆடிக் கொண்டே கோயிலை வலம் வருவார். நையாண்டி மேளத்திற்குத் தக்க சாமியாடிக் கொண்டே அக்னிச் சட்டி எடுத்து வருவார். இதுதான் 'முத்திரித் தறித்தல்' ஆகும். அதன்பின் ஊருக்குள் சென்று அம்பலக்காரர் என்று சொல்லப்படும் ஊர்ப் பெரியவர் வீட்டில் 'படி' வாங்குவார்கள்; அதாவது, தானியத்தையோ பணத்தையோ பிச்சையாக வாங்குவார்கள்; பின் அருகிலுள்ள ஊர்களுக்குச் செல்வார்கள்; வீட்டுக்கு ஒருவர் வீதம் வண்டிக் கட்டிக்கொண்டு செல்வார்கள்; அருகிலுள்ள மூன்று நான்கு ஊர்களில் சுற்றி படி வாங்குவார்கள்; தாராளமாகப் பணம்கொடுப்பார்கள்; அல்லது தானியம் கொடுப்பார்கள். ஊர்ப் பொது நிதியிலிருந்தும் பணம் கொடுப்பார்கள். இது 'மொய்' செய்வது போன்றதாகும். இன்று இந்த ஊர்க்காரர் சட்டி எடுத்துச் சென்றால், நாளை அந்த ஊர்க்காரர் இங்கு வருவார்; ஆகவே 'மொய்முறை' போன்று இது பழக்கமாகிவிட்டது. இவ்வாறு சுற்றி அலைந்து படி வாங்கிக் கொண்டு பொங்கலுக்கு முதல்நாள் வந்து சேருவார்கள். சாமி கொண்டாடிக்குத் துணையாக இன்னொரு துணைச்சாமியார் வைத்துக் கொள்வார்கள். அதாவது வெளியூர்களுக்கு அலையவேண்டிய நிலையில்தான் இந்த ஏற்பாடு. அக்னிச் சட்டி எடுப்பவர்க்கு ஒவ்வொரு வீட்டிலும் மஞ்சள் நீர் ஊற்றுவார்கள். பானக்கரம் குடிக்கக் கொடுப்பார்கள். கூடச் சென்றவர்களுக்கும் கொடுப்பார்கள். இப்போது பல ஊர்களில் 'காபி' போட்டுக் கொடுக்கிறார்கள். ஊர்ப் பொது நிதியிலிருந்து செலவு செய்து சாப்பாடு போட்டும் அனுப்பிவைப்பார்கள். அது அந்தந்த ஊர் நிலைமையைப் பொறுத்தது. சாமியாடிக்கு மஞ்சள்நீர் ஊற்றியவுடன் படி கொடுப்பார்கள். உடனே சாமியாடியின் காலில் வீழ்ந்து வணங்குவார்கள்; அப்போது சாமி அவர்களுக்கு ஆசீர்வாதம் பண்ணி திருநீறு கொடுப்பது பழக்கமாகி இருக்கிறது; சிலர் அக்னிச் சட்டிக்கு நெய்யோ, எண்ணெயோ ஊற்றுவார்கள். சட்டி எடுப்பவர் கூடச் செல்பவரில் ஒருவர் 'கோமியத்தை'த் தெளித்துக் கொண்டே வருவார்; தீட்டு நீங்கிவிடும் என்ற நோக்கில் அவ்வாறு செய்வதாகக் கூறுகிறார்கள், கெட்ட ஆவிகள் தடைசெய்யாமல் இருப்பதற்காகவும் அவ்வாறு செய்யப்படுகிறது என்றும் கூறுகிறார்கள்.

அக்னிச் சட்டி யெடுப்பவர்கள் ஊர் சுற்றிக் கொண்டிருக்கும் போது, இங்கு அம்பலக்காரர் முன்னின்று நடத்த, கோயிலுக்குப் பந்தல் போடுவது நடக்கும்; ஊரின் மையப் பகுதியிலும் ஒரு பந்தல் போடப்படும். கோவிலுக்கு வெள்ளையடித்து, அருகிலுள்ள புல் புதர்களை வெட்டிச் சுத்தம் செய்வார்கள். காட்டுப் பகுதியில்தான் பெரும்பான்மையான கோயில்கள் இருக்கின்றன; ஆகவே அவற்றைச் சுத்தம் செய்வதில் ஒருநாள் முழுவதும் வீணாகிவிடுகிறது. அன்று வீட்டுக்கொருவர் வந்து உடலுழைப்பைத் தானமாகக் கொடுக்கிறார்கள். கொட்டகை என்று சொல்லப்படும் பந்தல் போட்டவுடன், வண்ணான் வந்து 'மாத்து'க் கட்டுவான். தென்னங்கீற்று ஓலையாலான பந்தல் தெரியாத வண்ணம் வெளுத்த சேலை, வேட்டியால் மறைத்து மாத்துக் கட்டுவான். அவ்வூரில் இரண்டு, மூன்று வண்ணான்கள் இருந்தால் அவர்களனைவரும் தங்கள் தங்கள் பங்கிற்கு சேலை, வேட்டி கொண்டு வந்து மாத்து கட்டுவார்கள்; ஊரின் மையப் பகுதியிலுள்ள பந்தலுக்கும் அவ்வாறே செய்வார்கள். இது முதல் நாள் இரவுக்குள் முடிந்துவிடும்.

வெளியூர் சுற்றிவரும் அக்னிச் சட்டி பொங்கல் நடக்கும் நாளின் காலை வந்து சேரும்; அதன்பின் ஓய்வு எடுத்த பிற்பாடு உள்ளூரில் சுற்றிப் படி வாங்குவார்கள்; இவ்வாறு சேகரித்த தானியத்தைச் சில ஊர்களில் ஏலம் போட்டுப் பணமாக்குவர்; சில ஊர்களில் கை விலைக்கே கடைக்காரர்களுக்கு விற்றுப் பணமாக்குவார்கள். அதன் பின் அப்பணத்தை அம்பலக்காரரிடம் கொடுப்பார்கள். வரி வசூல் செய்த பணத்தோடு இப்பணமும் சேர்த்து வைக்கப்படும்.

உருவாரங்கள் (சிலை) கொண்டுவர முதல்நாள் காலையிலேயே வண்டி அனுப்பி வைத்திருப்பார்கள். வண்டி வந்தவுடன் சிலைகளை விநாயகர் கோயிலுக்குப் பக்கத்தில் போடப்பட்ட பந்தலில் இறக்கி வைப்பார்கள்; வர்ணம் தீட்டாதுதான் சிலை கொண்டு வந்திருப்பார்கள்; இங்கு வண்ணம் பூசுவார்கள். அப்போது கண்களை மறைத்தே வைத்திருப்பார்கள். பொங்கல் நாளின் பிற்பகலில் கண் திறக்கும் நிகழ்ச்சி நடைபெறும்; அதற்குப் பலி கொடுத்து, காணிக்கைச் செலுத்துவார்கள். பலிகொடுத்துப் பூசை செய்தவுடன் கண்களை மூடி வைத்திருந்த உருவங்களைத் திறப்பார்கள். இதுதான் கண் திறத்தலாகும். அதன்பின் அவற்றைச் சுமந்துகொண்டு கோயிலுக்கு வருவார்கள்; வரும்போதும் வேடிக்கை நிகழ்ச்சி நடந்துகொண்டிருக்கும். ஊர்வலத்தில் பல விதக் கேளிக்கைகள் நடக்கும். உருவங்களைச் சுமந்து வரும்

போது களைப்பு இல்லாது இருப்பதற்காக இவ்வாறு செய்கிறார்கள். கேளிக்கை நிகழ்ச்சிகளைப் பார்க்க வேண்டும் என்பதற்காக அங்கங்கே நிறுத்தி வருவார்கள். பின் கோயிலுக்கு வந்து கோயிலைச் சுற்றியபின், சிலைகளைக் கோயிலுக்குள் வைப்பார்கள்; வைக்கும்போது சக்திக்கடா வெட்டி பூசை நடத்துவார்கள்; பூசை முடிந்தவுடன் எல்லோரும் வீட்டிற்குக் கலைந்து செல்வார்கள்.

பழைய சிலைகளைக் கோயிலுக்கு வெளியே சிலவூர்களில் வைத்து விடுகிறார்கள்; சிலவூர்களில் கண்மாய் நீரில் இறக்கி வைத்து விடுகிறார்கள்; சில ஊர்களில் ஊர் மந்தையில் வைத்து விடுகிறார்கள். கோயில் பொங்கல் முடிந்தவுடனே முத்தாலம்மன் சிலையை மந்தையில் வைத்து உடைத்துவிடுவதாக முன்னைய இயல்களில் சொல்லப்பட்டது.

இரவில் பொங்கல் வைக்க ஆயத்தமாகிறார்கள்; ஊர் மையத்தில் உள்ள பந்தலில் மேளக்காரர்களின் வாத்தியக் கச்சேரி நடக்கும். உடனே மக்கள் அங்குக் கூடுவார்கள்: பெண்கள் பொங்கல் வைப்பதற்காகப் பொங்கல் பானை, அரிசி ஆகியவற்றைக் கொண்டு வருவார்கள். ஒவ்வொருவராக வந்து பந்தலில் கூடுவார்கள்; அப்போது பெண்கள் கும்மி அடிப்பார்கள். எல்லா வீடுகளிலிருந்தும் பொங்கல் வைக்கப் பெண்கள் வந்ததும், ஊர்வலமாகக் கோயிலை நோக்கிச் செல்கிறார்கள். கோயிலை வந்தடைந்தவுடன் பூசை நடத்தி, பூசாரி திருநீறு கொடுத்தவுடன் பொங்கல் வைக்கத் தொடங்குவார்கள்; ஆங்காங்கே உள்ள கற்களை எடுத்து அடுப்பாக்கி பொங்கல் வைக்கும்போது சரியாகப் பொங்கி வர வேண்டும்; சிலருக்குப் பொங்கி வராது இருக்கும்; அவ்வாறு இருப்பது சாமிக்கு ஆகாது என்று சொல்லுவார்கள்; குறையிருக்கும் அதனால்தான் இப்படி ஆனது என்று சொல்லி, சாமியை வேண்டிக் கொள்வார்கள்; பிழை பொறுக்க வேண்டும்; வரும் பொங்கலில் இரட்டைப் பொங்கல் வைத்து வழிபடுகிறேன் என்று முறையிட்டுக் குறையை நீக்க வேண்டுவார்கள். பொதுவாக வெண்பொங்கல் வைப்பார்கள்; சக்கரைப் பொங்கலும் வைப்பார்கள். பொங்கல் வைத்து முடித்தவுடன், வீட்டிற்குச் சென்று தேங்காய் பழங் கொண்டு வருவார்கள். இந்த இடைவெளியில் ஆடல் பாடல் கேளிக்கைகள் நடக்கும்; அதன்பின் பூசை நடக்கும். தேங்காய் பழங்கள் கொண்டு வந்து பூசை நடத்துவதைச் 'சிறப்பு நடத்துதல்' என்று சொல்லுவார்கள். இந்த பூசைக்கு ஒவ்வொரு பொங்கல் பானையிலிருந்தும் ஒருகரண்டிப் பொங்கல் எடுத்து சாமிக்குப்படைப்பார்கள்; இதைப் பூசாரியே வைத்துக் கொள்வார். இந்த பூசையின்

போதும் கழுப்போடுதல் உண்டு. கழுமரத்தில் சேவலைக் குத்தி வைப்பது ஆகும்; இந்தப் பூசை முடிந்தவுடன் எல்லோரும் வீட்டிற்குச் சென்றுவிடுவார்கள்.

மாவிளக்கு, முளைப்பாரி கொண்டு வருவது நடக்கும். ஊர் மையப் பந்தலில் மாவிளக்கு, முளைப்பாரி கொண்டு வந்து கூடுவார்கள். அரிசிமாவை வெல்லம் போட்டு இடித்து மாவு செய்து அதைத் தாம்பாளத்தில் வைத்து, மத்தியில் குழி செய்து எண்ணெய் ஊற்றி, அதில் திரி போட்டு விளக்கேற்றி வைப்பார்கள்; தினை மாவிலும் சில வீடுகளில் மாவிளக்கு செய்வார்கள். அதற்கு அலங்காரம் செய்தும் வைப்பார்கள். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் மாவிளக்குக் கொண்டு வந்து பந்தலில் வைப்பார்கள். முளைப்பாரி போடப் பயன்படுத்தும் தானியம், பயறு போன்றவற்றை தண்ணீரில் போட்டு ஒருநாள் முழுவதும் ஊற வைப்பார்கள்; பின் தண்ணீரை இறுத்துவிட்டு, ஒருநாள் வைத்திருந்து முளை ஏற்பட்டவுடன், முளைப்பாரி போடும் கூடையில் பசுமாட்டுச் சாணத்தைக் காயப்போட்டுப் பொடி செய்து தூவி அதன்மீது போடுவார்கள். இதற்குக் காலை மாலை நீர் ஊற்றி எட்டு நாட்கள் வளர்த்து, ஒன்பதாவது நாள் இவ்வாறு வளர்ந்த முளைப்பாரியை நன்கு அலங்கரிக்கப்பட்ட கூடைகளில் கொண்டு வந்து வைப்பார்கள். கூட்டம் கூடும்வரை அங்கு பெண்கள் கும்மி, ஆண்கள் ஒயிற் கும்மி அடிப்பார்கள். அதன்பின் எல்லோரும் வந்து சேர்ந்துவிட்டார்களா என்று சரிபார்த்தவுடன் ஊர்வலம் புறப்படும்; ஊர்வலம் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். ஊர்வலம் ஆமை வேகத்தில் நகரும்; சிலம்பாட்டம், புலி வேஷம், தேவராட்டம் போன்ற ஆட்டங்களை ஆடிக்கொண்டு வருவார்கள். ஊர்வலம் கோயிலை அடைந்தவுடன், கோயிலை மூன்று முறை வலம் வருவார்கள். அதன்பின் கோயில் பந்தலில் மாவிளக்கையும் முளைப்பாரியையும் இறக்கி வைப்பார்கள். கோயிலிலும் பெண்கள் முளைப்பாரியை வைத்து சுற்றி நின்று கும்மி அடிப்பார்கள். இதை முளைக் கும்மி என்று சொல்லுவார்கள். அந்தத் தெய்வம்பற்றிய பாட்டைத்தான் இங்குப் பாடுவது மரபாக இருந்து வருகிறது. சிலைக்கு அலங்காரம் செய்யும் வரை இந்த கும்மி நடக்கும். பின் பூசை நடக்கும். அதன்பின் நேர்த்திக் கடன் செலுத்துவார்கள்.

கண் நோய் கண்டவர்கள், உடல் உறுப்புக்களில் சிலந்தி (கட்டி) வந்து துன்பப்பட்டவர்கள் எல்லாம், அந்தந்த உறுப்புக்களின் மீது வாழையிலையில் வைக்கப்பட்ட மாவிளக்கை வைத்து

வணங்குவார்கள்; இதை மாவிளக்கு எடுத்துத் தருகிறேன் என்று நேர்ந்தவர்கள் செய்வார்கள்.

கவர் குடித்து, ஆயிரங் கண் பானை சுமத்தல், சேற்றை உடல் முழுவதும் பூசிக்கொண்டு வேப்பங் குழையைக் கையில் வைத்துக் கொண்டு ஆடும் சேத்தாண்டி வேஷம் போன்ற நேர்த்திக் கடன் களையும் செய்வார்கள். உருள் தண்டம் (அங்கப் பிரதிஷ்டம்) போட்டும் வருவார்கள். கரும்புத் தொட்டில் கட்டி குழந்தையைப் போட்டுத் தாலாட்டுப் பாடுவார்கள். மரத்தொட்டில் செய்து அதைக் கோயிலில் கொண்டு வந்து வைப்பார்கள். தவழும் பிள்ளை உருவம் செய்து கொண்டுவந்து வைப்பார்கள். நேர்த்திக் கடன்கள் எல்லாம் நோய் நீக்கும்படியான வேண்டுதல்களாகவே இருக்கும்.

ஏற்கனவே எடுத்து வந்த அக்னிச் சட்டி செலுத்துதல் நிகழ்ச்சி நடைபெறும். அப்போது, நேர்த்திக் கடனுக்காக அக்னிச் சட்டி எடுப்பவர்களும்சேர்ந்து கொள்வார்கள்; எல்லாச் சட்டிகளும் ஒன்றா கவே வழிபாடு நடத்தியபின் தெய்வத்திற்குச் செலுத்தப்படும்; ஆளாளுக்குச் சட்டி எடுத்து ஆட்டம் போடுவது சிறப்பான நிகழ்ச்சி யாக இருக்கும்.

இந் நிகழ்ச்சிக்குப் பின் பூக்குழி இறங்குவது சில ஊர்களில் நடை பெறும். கோயிலுக்கு முன் ஆறு அடி ஆழம் அறுபது அடி நீளத்தில் பள்ளம் தோண்டி 4 அடி உயரத்திற்கு விறகுக் கட்டைகளை அடுக்கி வைத்து, பூசை செய்வார்கள்; அதன்பின் கோயில் பூசாரி நெருப்பு வைப்பார்; நெருப்பு எரிந்து கட்டையெல்லாம் தீப்பிழம்பாகக் காட்சி யளிக்கும். அப்போது, பூக்குழி யிறங்கும் அன்பர்கள்-நோன்பிருந்து வந்தவர்கள் வரிசையாக நிற்பார்கள்; பூசாரி முதலில் இறங்கி நடக்க, ஒவ்வொருவராக அதில் இறங்கி நடந்து கடப்பார்கள்; இந்த நிகழ்ச்சி எல்லோருடைய கவனத்தையும் கவரும் முறையில் இருக்கும். பின் பூக்குழி யிறங்கியவர்களுக்கு வேட்டி, சேலை கொடுத்து மரியாதை செய்வார்கள்; இதுவும் செய்முறைதான்; அதாவது மொய்; இதுபோன்றுதான், அக்னிச் சட்டி, ஆயிரங்கண் பானை எடுப்பவர்களுக்கும் உறவினர் செய்முறை செய்வார்கள். இந்நிகழ்ச்சி எல்லாம் விடிய விடிய நடக்கும்.

மறுநாள் காலையில் கிடா வெட்டு நடைபெறும். இக் கடா வெட்டு நிகழ்ச்சியைச் சங்கப் பாடல் விளக்குகிறது. தலைவியின் நோய் தணிய நிலையான துறையில் இருந்த கடவுளுக்கு வெள் ளாட்டுக் கடாப் பலியிட்டும் தணியவில்லை என்று கூறுகிறது (அகநானூறு : 156). நேர்த்திக் கடனாக நேர்ந்து விட்ட கடா,

சேவல் ஆகியவற்றைக் கொண்டு வருவார்கள்; அவற்றிற்கு மஞ்சள் நீரைத் தெளித்து, பொட்டு வைத்து கோயிலின் முன் கொண்டு வந்து நிறுத்துவார்கள். கோயிலில் கடா வெட்டுவதற்கென்றே ஒரு ஆளை வைத்திருப்பார்கள்; சில இடங்களில் அவரவர்களே வெட்டுவார்கள். பூசை நடந்து திருநீறு போட்டபின், கடாமீது மஞ்சள் நீரை ஊற்றிய பின் தலையை ஆட்ட வேண்டும்; சேவல் தலையைக் குலுக்க வேண்டும். இவ்வாறு செய்தபின் தெய்வம் சம்மதம் கொடுத்து ஏற்றுக் கொண்டுவிட்டது என்று நினைத்து வெட்டுவார்கள்; தலையை அசைக்கவில்லையென்றால் கிடாயை வெட்ட மாட்டார்கள். அடுத்த முறை இரட்டைக் கடாக்கள் கொண்டு வந்து வெட்டுவார்கள். வெட்டியபின், தலையையும் அதன் வாயில் வைத்த காலையும் பூசாரிக்குக் கொடுத்து விடுவார்கள். வண்ணான், தோட்டிக்கும் இதில் பங்கு கொடுப்பார்கள். இந்த ரத்தத்தைப் பிடித்து சோற்றில் தோய்த்து, சோற்றுத் திரளையைக் காவு கொடுப்பார்கள். மாடசாமிக் கோயிலில், மயானத்தில் இந்த சோற்றை எறிவார்கள்; முட்டைக் காவும் கொடுப்பார்கள். அது கீழே விழுவதில்லை; கெட்ட ஆவிகள் தின்று விடும் என்று நம்புகிறார்கள். இது நடு யாமத்தில் மயானத்தில் நடைபெறும். மயானத்திற்கு மூன்று ஆட்கள்தாம் செல்வார்கள். அவர்களும் தம் முகங்களைப் பானை கொண்டு மூடிக் கொண்டு தான் சோற்றுத் திரளையையும் முட்டையையும் எறிவார்கள் என்று சொல்லப்படுகின்றது.

சுடலைமாடன் கோயிலில் பன்றியைக் காவு கொடுப்பார்கள்; அதன் கழுத்தை நெறித்து அதிலிருந்து ரத்தத்தைப் பூசாரி உறிஞ்சிக் குடிப்பார்; ஆட்டுக்கடாயையும் இவ்வாறு செய்வார்கள். சுடலைமாடன் கோயிலில் பொது விருந்தும் நடக்கிறது. பந்தியில் சோற்றை வைத்து, கையிலிருந்து கீறிய ரத்தத்தை ஒவ்வொரு சொட்டு 21 பந்தியிலும் விடுவார்கள். அதன் பின் உண்பார்கள்.

கடா வெட்டு நிகழ்ச்சி முடிந்தவுடன், அவற்றை வெட்டியவர்கள் வீடுகளுக்கு எடுத்துச் சென்றுவிடுவார்கள்; அங்குச் சமையல் நடக்கும்; உறவினர்களுக்கும் விருந்தினர்களுக்கும் விருந்து வைப்பார்கள். கோயில்களிலேயே வெட்டிய கடாயை அறுத்து சோறாக்கி அங்குள்ளவர்களுக்கு சில இடங்களில் விருந்து வைக்கிறார்கள். வெளியூர்களிலிருந்து வந்தவர்களே இப்போது இப்படிச் செய்கிறார்கள்.

வழிபாடு எல்லாம் முடிந்தவுடன் மேளக்காரர்களின் முழக்கத்தோடு, பொங்கல் பானைகளை எடுத்துக் கொண்டு எல்லோரும்

வீடுகள் நோக்கிச் செல்கிறார்கள்; இப்போது ஊர் மையத்திலுள்ள பந்தலுக்குப் போகும்போது அவரவர்கள் வழியில் பிரிந்து சென்று விடுகிறார்கள். பந்தல் வந்தவுடன் மேளக்காரர்கள் வாசிப்பை நிறுத்துகிறார்கள். இது முடிவதற்கே காலை 11 மணிக்கு மேலாகி விடும். அதன்பின் ஓய்வெடுத்துக் கொள்வார்கள். மேளக்காரர் களுக்கும், ஏனைய கோயில் தொழிலில் ஈடுபட்டவர்களுக்கும் ஒவ்வொரு வீட்டிலிருந்தும் விருந்து கொடுப்பார்கள்.

கடா வெட்டு நிகழ்ச்சியின்போதுதான் மொட்டை அடித்துக் கொள்ளுதல், குழந்தைகளுக்குக் காது குத்துதல், பெயர் சூட்டுதல் ஆகிய நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. இது அவரவர் விருப்பப் படி நடக்கும். குலத் தெய்வக் கோயிலாக இருந்தால் வீட்டில் பிறந்த மூத்தக் குழந்தைகளுக்குக் கண்டிப்பாக மொட்டை போட்டு பெயர் சூட்டுவார்கள். அப்போது தாய்மாமன் முறையினர், குழந்தைக்கு செய்முறை செய்வார்; அவர்களுக்கு, வேட்டி துண்டு கட்டுவார்கள். இது சம்பிரதாய முறைப்படி நடக்கிறது.

மதியம் 'கறியும் சோறு'ம் சாப்பிட்டுவிட்டு ஓய்வெடுப்பார்கள். மாலையில் வீட்டுக்கு ஒருவர் வீதம் கோயிலுக்கு வரும்படி அழைப்பு விடுப்பார்கள். பள்ளயம் பிரிக்கப்பபோவதாகக் கூறி அழைப்பர். எல்லோரும் அவ்வாறே கோயிலுக்கு வருவார்கள். அங்கு நையாண்டி மேளக் கச்சேரி நடந்து கொண்டிருக்கும்; பள்ளயம் பிரிப்பதில் மும்முரம் காட்டுவார்கள்; தேங்காய் பழங்களை எடுத்துக் கூறு வைப்பார்கள்; வீட்டுவாரியாக கூறு வைப்பார்கள். சாமி கும்பிட்டதில் எஞ்சிய பொருட்களை ஏலம் விடுவார்கள்; அந்தப் பணத்தையும் வரி வசூலோடு சேர்த்துக் கொள்வார்கள். ஊர்த் தகராறு ஏதாவது இருப்பின் அதைத் தீர்த்தபின்தான் பள்ளயம் பிரிக்க விடுவார்கள்; செலவு போக மீதம் இவ்வளவு இருக்கிறது என்று வரவு செலவுக் கணக்கை ஊர் அம்பலம் கூறுவார். உடனே அங்கேயே அந்தப் பணத்திற்கு நாடகம் போடலாம் என்று ஒருவர் சொல்லுவார்; ஒருவர் வில்லுப் பாட்டுதான் வைக்க வேண்டும் என்று கூறுவார்; இப்படியாக பலரும் பல கருத்துக் களைக் கூற, பணத்திற்குத் தகுந்த நிகழ்ச்சியை வைப்பதென்று முடிவாகும். அதுவும் இன்ன நாளில் வைக்க வேண்டும் என்று முடிவு செய்வார்கள்; சில இடங்களில் உள்ளூர்வாசிகளே நாடகம் படித்திருப்பார்கள். வாத்தியார் வைத்து படித்திருப்பார்கள்; அவ்வாறு இருப்பின் உள்ளூர்க்காரர்களின் கூத்தே நிகழ்ச்சியாகும்; கட்டபொம்மு நாடகம் ஏழுநாள் கதையாக நடத்தப்பட்டது என்று

மேலக்கல்லூரணியில் வசிக்கும் கட்டபொம்மு கே. என். உத்தண்ட ராயன் கூறுகிறார்.

நாடக நிகழ்ச்சியிலும் அந்த ஊர்த் தெய்வத்தைப் பற்றிப் பாடல் பாடுவார்கள்; நாடகம் முடிந்ததோடு கோயில் கும்பிட்ட நிகழ்ச்சியும்நிறைவுறும்.

பள்ளயம் பிரித்துக் கொடுத்தபின், பூசாரிக்குக் கோயில் தெய்வத்திற்குச் சாத்திய சிற்றாடைகளையெல்லாம் கொடுத்து விடுவார்கள்; உண்டியலில் வசூலான பணத்தின் ஒரு பகுதியையும் கொடுப்பார்கள். ஊர் மக்கள் தேங்காய் உடைத்தலில் வந்த ஒரு முடித் தேங்காயையும் கொடுப்பார்கள்.

நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டு முறை இவ்வாறுதான் இருக்கிறது. இந்த முறையில்தான் வரிசையாக இருக்க வேண்டுமென்பதில் முன்னோர்கள் வழிபட்ட பாங்கிலேயே நடத்துகிறார்கள். ஏன் இவ்வாறு நடக்கிறது என்று கேட்டால், அப்படித்தான் மாமூலம் என்று சொல்லுகிறார்கள். ஆகவே ஒரு ஊரில் நடந்த வழிபாட்டு நிகழ்ச்சிக்கும் வேறு ஊரில் நடக்கிற நிகழ்ச்சிக்கும் சடங்கு முறையில் வேறுபாடு இருக்காது; ஆனால் வரிசை முறையில் முன்னுக்குப் பின்னாக இருக்கும்

ஆண்கள் தெய்வக் கோயில்களில் பூக்குழி இறங்கும் நிகழ்ச்சி இருப்பதில்லை; அக்னிச் சட்டி எடுத்தல், ஆயிரங்கண் பானை சுமத்தல், தொட்டில் கட்டிப் போடுதல் ஆகிய நிகழ்ச்சிகள் அம்மன் கோயில்களிலே பெரும்பான்மையும் நடைபெறுகின்றன.

நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு இந்துச் சமய வழிபாட்டினின்றும் வேறுபட்டது என்பது இதன் மூலம் தெரிகிறது; திராவிடத் தெய்வமாகிய நாட்டுப்புறத் தெய்வ வழிபாடெல்லாம், முன்னோர் வழிபட்ட வழியே நடைபெறுகிறது என்பது தெரிகிறது; வழிபாடு நடத்துவதெல்லாம் நோய் நீக்கும் பொருட்டே நடைபெறுகிறது; மழை வேண்டியும் நடைபெறுகிறது. வழிபாட்டில் தெய்வத்திற்குப் படைக்கப்படும் படையல், பலி ஆகியவை தெய்வத்தைத் திருப்திப் படுத்துவதற்கே கொடுக்கப்படுகிறது. மக்கள் தங்கள் மகிழ்ச்சிக்காகத் தெய்வத்தைக் கோடை நாட்களில் வழிபட்டு வந்தார்கள் என்பதும் தெரிகிறது. மற்ற காலங்களில் வணங்குவது அப்போதைக்கப்போதைய தேவையை நோக்கமாகக் கொண்டதாகும்.

# உளவியல் நோக்கில் நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு

திராவிடத் தெய்வ வழிபாட்டின் முக்கிய அம்சங்கள் நேர்த்திக் கடனும் குறிசொல்லலும் ஆகும். இவ்விரண்டின் அடிப்படையில் தான் தெய்வ வழிபாடு அமைகிறது.

**குறி சொல்லல்**

கோயிலுக்குப் பொங்கல் வைக்க வேண்டுமானால் குறி கேட்டுத்தான் வைக்க வேண்டும்; அதாவது சகுனம் பார்த்தல். கோயிலுக்குப் பொங்கல் வைக்க வேண்டுமென்று மக்கள் தீர்மானிப் பார்கள்; இதற்கு ஊர்க் கூட்டம் போட்டு முடிவு எடுப்பார்கள். ஆனால் இதற்குத் தெய்வம் அனுமதி தரவேண்டும். அதற்காக வெள்ளி, செவ்வாய்க் கிழமையில் பெரியவர்கள் கோயிலுக்குச் சென்று அனுமதிக்காகக் காத்திருப்பர். அவ்வூர் நம்பிக்கைக்கு உகந்தவாறு, ஈசான மூலையில் பல்லி ஒலித்தால் (கெவுலி அடித் தல்) அனுமதி கிடைத்தது என்று பொருள். போனவுடன் பல்லி ஒலித்து விடும்; சில வேளைகளில் அவ்வளவு விரைவில் பல்லி ஒலிக்காது. அன்று ஒலிக்காமலே இருந்துவிடும் அதற்காக எடுத்த முடிவிலிருந்து மாறமாட்டார்கள். கோயில் கும்பிட்டே ஆக வேண்டுமென்று இருப்பார்கள். அதற்காக மூன்று நாள் தொடர்ந்து சென்று முடிவுக்காகக் காத்திருப்பார்கள். பல்லிச் சகுனம் பார்த்த லிலும், பூக்கட்டி பார்ப்பதிலும், முதல் தடவையில் சாதகமான உத்தரவு இல்லையென்றால் மூன்று முறை பார்ப்பார்கள். இறுதி யில் சாதகமான முடிவே கிடைத்துவிடும். இவர்களும் பொங்க லுக்கு முடிவு செய்து விடுவார்கள்.

இங்கு மக்களுக்காகத்தான் தெய்வமே தவிர தெய்வத்திற்காக மக்களல்ல. மக்கள் மகிழவேண்டுமென்பதற்காகத்தான் திருவிழா. இதில் மக்கள் நம்பிக்கை வீண் போகாது. பல்லி சகுனம் பார்த்தல் குருட்டு நம்பிக்கையாக இருக்கலாம். ஆனால் அது முரட்டு நம்பிக்கை; தான் வாழ வேண்டும், தன் இனம் வாழவேண்டும் என்ற நோக்கில் அமையும் நல்ல நம்பிக்கையாகும். இந்த நாட்டுப் புற நம்பிக்கை-நாட்டுப்புறத் தெய்வ நம்பிக்கை உள்ளம் விரும்பி யதை நியாயப்படுத்தல் என்ற முறையில் அமைகிறது.

2. ஒரு பொருள் களவு போயிருக்கிறதென்றால், அதற்கும் தெய்வத்தின் முன் சென்று குறி பார்க்கும் பழக்கம் இருக்கிறது; நெல்லை மாவட்டம் வெம்பூரில் உத்தண்டசாமி கோயிலில் இப் பழக்கம் இன்றும் இருக்கிறது; வெள்ளிக்கிழமைதோறும் பூசாரி குறி பார்த்து சொல்லுவார். மக்கள் மனத்தில் என்ன நினைக்கி றார்களோ- அதாவது இன்னின்னார்தான் திருடியிருப்பார்கள் என்று நினைக்கிறார்களோ அவர்களைக் குறியிலும் சொல்லு கிறார்கள். மனத்திற்கு மேலான உள்ளுணர்வு ஒன்று இருக்கிறது; அது எல்லா மனிதர்களுக்கும் இருக்கிறது. அதன்படிதான் இக்குறி சொல்லுவது செயலாக்கப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. இது உண்மை. ஆனால் உளவியலில் இது எதைச் சேர்ந்தது என்று இனக் காட்ட முடியாதிருக்கிறது.

3. பூக்கட்டிப் பார்த்தல் அல்லது மச்சம் பார்த்தலும் இம்முறை யில்தான் அமைகிறது. ஊருக்குப் போக வேண்டும்; அங்கு வேண் டியவர் கிடைப்பார்களா என்று பூக்கட்டிப் பார்ப்பார்கள்; ஆனால் இதில் பெரும்பாலும் நடக்கும் என்ற ரீதியில் வெள்ளைப் பூதான் கிடைக்கும். அதுதான் எல்லோரும் நினைப்பதும், இவ்வகையும் மேற்கூறியதில்தான் அடங்கும்.

4. வீட்டில் திருடு போயிருக்கும்; குறி பார்த்திருப்பார்கள்; குறியில் குறிப்பிட்ட நபர்கள் ஒத்துக்கொள்ளவில்லை என்றால்- ஊர் பஞ்சாயத்தில் ஒத்துக் கொள்ளவில்லை என்றால் சுடலை மாடனுக்குக் கடா வெட்டிப் பொங்கல் வைத்து துட்டு வெட்டுவார் கள்-அதாவது காசு வெட்டுவது. இவ்வாறு செய்துவிட்டு வந்தால், வந்த பதினைந்து நாட்களுக்குள் அதில் தொடர்புள்ள மனிதர் இறந்து விடுவார் என்பது நம்பிக்கை. இதுவும் உளவியல் நோக்கில் அமைந்ததுதான்; ஆனால் இனங்காட்ட முடியவில்லை.

**நேர்த்திக்கடன்**

நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டின்போது மக்கள் நேர்த்திக் கடன் போடுவார்கள். நோய் தீர்ந்துவிட்டால் மாவிளக்கு எடுத்து வழிபடுவேன் என்று நேர்ந்து கொள்வார்கள். இறைவனை நம்பும் மனத்தால் நோய் தீர்கிறது என்று நினைக்கிறார்கள். காய்ச்சல் வந்ததென்றால் மூன்று நாளையில் தீர்ந்து விடும்; கட்டி வந்ததென்றால் ஒரு வாரத்தில் உடைந்து குணமாகிவிடும். அதற்கு மந்திரித்த எண்ணெய் போடுவார்கள்; சாதாரணமாக விளக்கெண் ணெய் போட்டாலே இளக்கமாகி உடைந்துவிடும். சாதாரணமாக

மருந்தினாறியே குணமாவது இறைவனை வழிபட்டதால் நடந்தது என்று நம்புவது இன்றும் நாட்டுப்புற மக்கள் வாழ்வில் உள்ள நம்பிக்கை. இதற்காக மாவிளக்கு எடுப்பார்கள்; கடா வெட்டிப் பொங்கல் வைப்பார்கள். வழிபாட்டில், தான் வழிபடும் தெய்வத்திற்கு மேன்மை கொடுக்க வேண்டும் என்ற நோக்கில் அமைந்தது தான் இது. தான் வழிபடும் தெய்வம்-குலத்தெய்வம் - வீட்டுத் தெய்வம் உயர்வானது; எதற்கும் தாழ்ந்ததல்ல என்ற மனத் தாங்கலால் ஏற்பட்டதுதான் இது; ஆகவே இம்முறையும் உளவியல் நோக்கில் அமைந்ததுதான்.

நோய்வாய்ப் பட்டவர்கள் வாய்க்கு ருசியாகச் சாப்பிட வேண்டும் என்ற நோக்கில்தான் கடா வெட்டு நடக்கிறது; கோழி அறுக்கப்படுகிறது; எருமை மாடு பலி கொடுக்கப்படுகிறது. அவரவர்கள் சுவைக்கேற்ப இறைவழிபாட்டிலும் பலி கொடுக்கப்படுகிறது. தாழ்த்தப்பட்ட மக்கள் மாட்டுப் பலியும், மற்றவர்கள் ஆட்டுப் பலியும் கொடுப்பது இன்று நடைமுறைச் சாத்திய நிகழ்ச்சிகள்.

ஆக, நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு, முன்னோர் வழிபாடாக இருக்கும் காரணத்தினால், மனிதத் தன்மையோடு கூடிய வழிபாடாக-உளவியல் நோக்கில் தோய்ந்த வழிபாடாக அமைகிறது என்பதைக் காண முடிகிறது. தான் எண்ணியது நடக்க வேண்டும் என்று மனித மனம் எண்ணும்; முடிவெடுத்தபின் அதனின்றும் பின் வாங்காது; அதை நியாயப் படுத்தவே எண்ணும் என்பது புலனாகிறது. நோய் நீக்கும் மருந்தாக இறைவனைப் பார்த்து-அவனுக்கு மேன்மை கொடுக்க வேண்டும் என்ற நோக்கில் அமைவதுதான் நேர்த்திக்கடன்; தான் வணங்கும் இறைவன் சிறந்தவன்-தன் முன்னோன் சிறந்தவன் என்ற அடிப்படையில் அமைவது தான் நேர்த்திக்கடன் வழிபாடு. நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு முன்னோர் வழிபாடாக இருப்பதால்தான்-மனித வழிபாடாக இருப்பதால்தான் இதில் போட்டா போட்டி ஏற்படுகிறது. என் சாமி உயர்ந்தது; உன் சாமி தாழ்ந்தது என்ற மனிதனின் உயர்வு தாழ்வு மனப்பான்மைதான் இம் முறைக்கு வழிகோலுகிறது.

# முடிவுரை

தென்னிந்தியாவில் நாட்டுப்புறத் தெய்வத்தைச் சிறு மரபுத் தெய்வம் என்றும் சிறு தெய்வம் என்றும் சொல்லி வருகிறார்கள்; அதை விடுத்து நாட்டுப்புறத் தெய்வத்தைத் திராவிடத் தெய்வம் என்று சொல்லுவதே சாலச்சிறந்தது; நாட்டுப்புறத் தெய்வமும் திராவிடத் தெய்வமும் ஒன்றுதான் என்பது இதன்வழி அறியப்படுகிறது; இத்திராவிடத் தெய்வம் இந்துத் தெய்வத்தினின்றும் பலவழிகளில் மாறுபட்டு இருக்கிறது. பெயர், வடிவம், கோயில், வழிபாடு ஆகிய எல்லாமுறைகளிலும் இந்துச் சமயத்தினின்றும் மாறுபட்டு, தனித்தன்மையோடு இருக்கிறது. திராவிடத் தெய்வங்களை இந்துக் சமயக் கடவுளர்களோடு இணைத்துப் பார்த்தாலும், ஒட்டி உறவாடாது தனியாகவே நிற்கின்றன வழிபாட்டிலும் களங்கப்படுத்த எடுத்த முயற்சிகளிலும் தோல்விதான். இவ்வாறு பல வழிகளில் தனிமையைக் காத்து மக்கள் சமயமாக, மக்கள் தெய்வமாக இருப்பது திராவிடத் தெய்வங்களே யாகும்.

ஆய்வுக் களமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நெல்லை மாவட்ட விளாத்திகுளம் வட்டம்ஊர்கள் அனைத்தும் நாட்டுப்புறப் பகுதிகள். அவ்வூர்களில் குடிகொண்ட தெய்வங்கள் அனைத்தும் நாட்டுப்புறத் தெய்வங்கள் என்று சொல்லப்பெறும் திராவிடத் தெய்வங்களே யாகும்; இந்த நாட்டுப்புறத் தெய்வங்களில் முதன்மையாகவும் பெரும் அளவிலும் இருப்பவை பெண் தெய்வங்களே என்பதும் பெறப்படுகிறது.

ஊரிலுள்ள திராவிடத் தெய்வங்களாகிய நாட்டுப்புறத் தெய்வங்கள், ஊர்த் தெய்வங்கள், இனத் தெய்வங்கள், குலத் தெய்வங்கள், மாலைத்தெய்வங்கன் சமாதித் தெய்வங்கள், துணைத் தெய்வங்கள் என்ற பகுப்பில் அடங்கும். ஊர் மக்களைக் காக்கும் தெய்வம் ஊர்த் தெய்வங்களாகும். மக்கள் தீய சக்திகளினின்றும் தங்களைக் காக்க வேண்டி ஊர்த் தெய்வங்களை வணங்குகிறார்கள் ஒட்டுமொத்தமாக ஊரார் எல்லாம் நோய்வாய்ப்பட்டு இறக்காது இருக்கவும் ஊர்த் தெய்வங்களை வணங்குகிறார்கள்;மழை வேண்டியும் ஊர்த் தெய்வங்களை வணங்குகிறார்கள்; ஊர்த் தெய்வம் என்பது மக்களின் காவல் தெய்வமே என்பது தெளிவாகிறது.

இனம் வாழ வேண்டியும் திராவிடர்கள் தெய்வத்தை வணங்கி வந்திருக்கிறார்கள். இங்கு, இனம் என்பது தம்மோடு சேர்ந்த கூட்டத்தினர் என்பதாகும்; இவ்வாறு வழிபடப்பெறும் தெய்வங்கள் அக்கூட்டம் வாழ உதவிய அவர்களின் முன்னோராகத்தான் இருந் திருக்கிறார்கள் என்பது தெளிவாகிறது.

குலத் தெய்வ வழிபாடும், குலத்தின் முன்னோர் வழிபாடே என்பதும் பெறப்படுகிறது கருப்பசாமி, மாடசாமி, காளியம்மாள், மாரியம்மாள் போன்ற தெய்வங்கள் குலத் தெய்வங்களாக இருப் பதைக் கொண்டு இவைகளும் ஒரு காலக்கட்டத்தில் அம்மனிதர் களோடு வாழ்ந்து மடிந்தவர்கள் என்றும், முன்னோர் வழிபாட்டின் படி, இவைகளும் தெய்வங்களாயின என்றும் கொள்வது சிறப்பாகும்

தீக்குழிப் பாய்ந்து இறந்து தெய்வமான பெண்களே மாலைத் தெய்வங்களாகும்; ஆந்திராவில் கொண்டாடப்பெறும் பெறந்தாளு தெய்வங்கள் மாலைத் தெய்வங்கள் போன்றவைகளேயாகும்.

திராவிடர்கள் இறந்தவர்களைப் புதைத்து வருகிறார்கள்; அவர்களில் தெய்வ நிலைக்கு உயர்ந்தவர்களைச் சமாதி கட்டி வணங்கி வருகிறார்கள்; தாமாகவே அடங்கிச் சமாதியானவர்களும் உண்டு. இவ்வாறு சமாதியானவர்களை முன்னோர் வணக்க மாகக் கொண்டு வழிபட்டு வருகிறார்கள். இச்சமாதித் தெய்வ வழிபாடு திராவிடத் தெய்வ வழிபாடேயாகும்.

அந்தந்தக் காலக் கட்டங்களில் மடிந்த நல்லவர்களை ஊர் மக்கள் துணைத் தெய்வங்களாக்கி இருக்கிறார்கள்; அவரவர் களுக்கு விருப்பப்பட்ட மக்கள் தலைவர்களை அவர்கள் வாழும் காலத்தில் துணைத் தெய்வங்களாக்கி வைத்துள்ளார்கள் என்பதும் தெரிகிறது.

திராவிடத் தெய்வங்கள், மனிதர்கள் இறந்தபின் நிலவும் ஆவியை அடிப்படையாகக் கொண்டது என்பது தேற்றமாகிறது; மாலைத் தெய்வமாகவோ, சமாதித் தெய்வமாகவோ ஆவி நிலை கொண்டிருக்கிறது; பயங் கருதியே திராவிடத்தெய்வங்கள் வழிபடப் பெறுகின்றன: நோய் நொம்பல் தீரவேண்டும் என்ற நோக்கில் வழிபடப் பெறுகின்றன என்பதை அறிய முடிகிறது. திராவிடத் தெய்வங்கள் வளர்ச்சி நோக்கில் இந்துத் தெய்வங்களாகின்றன; இந்துத் தெய்வங்கள் திராவிடத் தெய்வங்களாகின்றன; இக்கலப் பால் திராவிடச் சமயம் இந்துச் சமயமாகி. திராவிடக் கடவுளரும் இந்துக் கடவுளராகிவிட்ட நிலை; புராணக் கதைகளில் கால

போக்கில் திராவிடத் தெய்வக் கதைகள் கலக்கப்பெற்று இந்துச் சமயத்தில் மாற்றம் பெற உதவின; சிவ விஷ்ணு புராணக் கதைகளில் திராவிடச் சக்தி போன்ற கதைகள் இடம்பெற்று, எது திராவிடச் சக்தி, எது இந்துச் சக்தி என்று அறியமுடியாத நிலையை உண்டுபண்ணியது. இவ்வாறு இருந்தபோதும் திராவிடத் தெய்வங்கள் அழிக்கப் பெறாது, வழிபாட்டிலும் தனித்துவம் பெற்று இருக்கின்றன.

எல்லா உயிர்களையும் தன் உடன்பிறப்பாக்கிக் கொள்ள விழையும் முறையாகிய இனமரபுச் சின்ன முறைமையிலேயே, திராவிடத் தெய்வ வழிபாடு இயங்குகிறது. திராவிடத் தெய்வ வழிபாட்டில், உயிரற்ற போலி வழிபாட்டுப் பொருளை வழிபடு பொருளாகப் பயன்படுத்துகிறார்கள் என்றும் ஆப்பிரிக்காவில் பயன்படுத்தும் உயிரற்ற போலி வழிபாட்டுப் பொருளைவிட இது வேறானது என்றும் தெரிகிறது. திராவிடத் தெய்வம் ஆவியுலகக் கோட்பாடுடையது; திராவிடர்களின் பேய் பற்றிய கொள்கையே அவர்களின் தெய்வ நிலைக்கு ஆதாரமானது என்பதும் தெரிகிறது; திராவிடத் தெய்வ வழிபாட்டில் உருவத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுவதில்லை; எத்தக் கல்லும்-ஒழுங்கற்றக் கல்லும் ஆவி நிலை கொண்டபின் வணங்கப்படுகிறது என்பதும் கல்லை மாற்றும் போது, மாற்றிய கல்லுக்கு முக்கியத்துவம் இல்லாது புதியகல்லுக்குக் கொடுக்கப்படுகிறது என்பதும் பெறப்படுகிறது; திராவிடத் தெய்வ வழிபாட்டில் பலிப் பொருட்கள், தெய்வமாகிய நம் முன்னோர் நம்முடன் இருந்து உணவு கொள்கிறார் என்ற கருத்துப் படியே பரிமாறப்படுகின்றன என்பது தெரிகிறது; திராவிடத் தெய்வத் தோற்றமே ஆவியிலிருந்து வந்ததுதான்; இந்த ஆவித் தெய்வ வழிபாட்டில், நெறிமுறை பின்பற்றப்படுகிறது. இந்துச் சமயத்திலுள்ள ஒழுக்கக் கேடுகள் எல்லாம் திராவிடச் சமய வழிபாட்டில் இல்லை என்பதும் தெரியவருகிறது.

திராவிடத் தெய்வமாகிய நாட்டுப்புறத் தெய்வ வழிபாடெல்லாம், முன்னோர் வழிபட்ட வழியே நடைபெறுகிறது என்பது தெரிகிறது; வழிபாட்டில் தெய்வத்திற்குப் படைக்கப்படும்படையல், பலி ஆகியவை தெய்வத்தை திருப்திப் படுத்துவதற்கே கொடுக்கப்படுகின்றன. மக்கள் தங்கள் மகிழ்ச்சிக்காகத் தெய்வத்தைக் கோடை நாட்களில் வழிபட்டு வந்தார்கள் என்பது நெரிகிறது. மற்ற காலங்களில் வணங்குவது அப்போதைக்கப்போதைய தேவையை நோக்கமாகக் கொண்டதாகும்.

நாட்டுப்புறத்தெய்வ வழிபாடு, முன்னோர் வழிபாடாக இருக்கும் காரணத்தினால், மனிதத் தன்மையோடு கூடிய வழிபா டாக-உளவியல் நோக்கில் தோய்ந்த வழிபாடாக அமைகிறது என் பதைக் காண முடிகிறது. தான் எண்ணியது நடக்க வேண்டுமென்று மனித மனம் எண்ணும். முடிவெடுத்தபின் அதனின்றும் பின்வாங் காது. அதை நீயாயப் படுத்தவே எண்ணும் என்பது புலனாகிறது. நோய்நீக்கும் மருந்தாக இறைவனைப்பார்த்து-அவனுக்கு மேன்மை கொடுக்க வேண்டும் என்ற நோக்கில் அமைவதுதான் நேர்த்திக் கடன். தான் வணங்கும் இறைவன் சிறந்தவன்-தன் முன்னோன் சிறந்தவன் என்ற டிப்படையில் அமைவதுதான் நேர்த்திக் கடன் வழிபாடு. நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு முன்னோர் வழிபாடாக இருப்பதால்தான்-மனித வழிபாடாக இருப்பதால்தான் இதில் போட்டா போட்டி ஏற்படுகிறது. என் சாமி உயர்ந்தது; உன் சாமி தாழ்ந்தது என்ற மனிதனின் உயர்வு தாழ்வு மனப்பான்மைதான் இம் முறைக்கு வழிகோலுகிறது,.

# துணைநூற் பட்டியல்

## தமிழ்


### இலக்கிய நூல்

1. அகநானூறு, (பதிப்பு) வேங்கடசாமி நாட்டார், வெங்கடாசலம் பிள்ளை, சென்னை-1.

### பொது நூல்

1. சக்திக்கனல், அண்ணன்மார் சுவாமி கதை, கோயம்புத்தூர், 1981.
2. ரெட்டியபட்டி சுவாமி, சுவாமிகள் அருளிய சட்டம், ரெட்டியபட்டி, 1978.

### ஆய்வேடு

1. வேலுச்சாமி, ம., 'மதுரை மாவட்டக் கிராம சமுதாயங்கள் சிலவற்றுள் காணப்படும் நாட்டுப்புறச் சமயம்-ஒப்பாய்வு, மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் (பி. எச்டி., ஆய்வேடு), 1983.
2. விக்டோரியா, ஞா, 'வத்தலக்குண்டு மாரியம்மன், இடமலையான் கோயில் வழிபாட்டு முறைகள், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் (எம்.ஃபில். ஆய்வேடு), 1984.

### இதழ்

1. ஜூனியர் விகடன், சென்னை, 6.2.1985.

## ENGLISH

### GOVERNMENT AND OTHER OFFICIAL PUBLICATIONS

1. English Dictionary, Vol.I, Madras Uuiversity, 1975.
2. Madras Cencus Report, Ch. III, 1891.
3. Madras Government Museum Bulletin, V. No. 3
4. The World Book Encyclopaedia. Vol. 3, Chicago, 1980.

### Books (General Works)

1. Caldwell, R., A Comparative Grammer of the Dravidian or South Indian Family of Languages, London, 1975.
2. Elmore, W.T., Dravidian Gods in Modern Hinduisn New Delhi, 1984.
3. Hsu, Francis, L.K., Clan, Caste and Club, New York 1963.
4. Stephen Inglis, A Village Art of South India, Madurai Kamaraj University, 1980.
5. Suzanne Hamchett, The Festival Interlude : Religious Festivals in South Iudia and Sri Lanka (Ed.) Guy R. Welbon & Glenn E. Yocum, New Delhi, 1970.
6. Thurston, Caste and Tribes of South India, Vol.IV, Delhi, 1975.
7. Whitehead, Right Reverend Henry, The Village Gods of South India, New Delhi, 1983.

# பேட்டி

1. அய்யாத்துரை, எம்., 9.9.1984, குளத்தூர்.
2. அழகர்சாமி, பொ., 3.10.1984, மேலக்கல்லூரணி
3. அழகர்சாமி, பொ., 20.9.1984, துரைச்சாமிபுரம்
4. ஆதப்பன், ம., 7.10.1984, பூசனூர்
5. ஆறுமுகம், த., 7.10.1984, புளியங்குளம்
6. இராமச்சந்திரன், ப., 20.9.1984, திருச்சி
7. இராதாகிருஷ்ணன், என்., 21.9.1984, புதுப்பட்டி
8. இராமசாமி, கே., 13.8.1984, சங்கரலிங்கபுரம்
9. இராமகிருஷ்ணபாண்டியன், பா., 4.9.1984, சிறுவாலை
10. இராமன், மு.கோ., 21.11.1984, சென்னை-113.
11. இராமசாமி, பெ., 10.9.1984, மேல்மாந்தை
12. இராமலிங்கம், எம்., 5.10.1984, மேல அருணாசலபுரம்
13. இராஜாராம், பெ., 16.8.1984, சோலைமலையன்பட்டி
14. இராசேந்திரன், கே., 7.10.1984, இ. வேலாயுதபுரம்
15. இராசேந்திரன், 19.9.1984, கம்பத்துப்பட்டி
16 இராசேந்திரன், 19.9.1985, கம்பத்துப்பட்டி
17. உமையன், உ., 2.9.1984, கொரலியம்பட்டி
18. எல்லப்பன், க., 17.10.1984, நடுக்காட்டூர்
19. கந்தசாமி, வி.கே., 10.8.1984, விளாத்திகுளம்,
20. கந்தசாமி, சி., 11.9.1984, வேலிடுபட்டி
21. கருப்பசாமி, ச., 18.9:1984, குமாரசுப்பிரமணியபுரம்
22. கணேசன், 7.10.1984, புளியங்குளம்
23. காமாட்சி நாடார், 11.9.1984, சிப்பிகுளம்
24. காளியப்பன், எஸ்., 6.9.1984, தத்தனேரி
25. கிருஷ்ணமூர்த்தி, 5.9.1984, குளக்கட்டாங்குறிச்சி
26. குருசாமி, கே., 8.9.1984, சிவலார்பட்டி
27. குமாரராமன், எம்., 22.9.1984, கோடாங்கிபட்டி
28. கூடலிங்கம், 17.9.1984, கமலாபுரம்
29. கோவிந்தன், 11.8.1984, தலைக்காட்டுபுரம்

30. கோபால்சாமி, எம்.ஆர்., 5.11.1984, மதுரை-1
31. கோபால்துறை, ஆ., 20.9.1984, மடத்துப்பட்டி
32. சண்முகராஜ், மா., 9.8.1984, குளத்தூர்
33. சண்முகம், சி., 4.9.1984, நூத்தலக்கரை
34. சந்திரசேகரன், ஏ., 1.10.1984, சக்கம்மாள்புரம்
35. சந்திரசேகரன், 1.10.1984, சிவஞானபுரம்
36. சவரிமுத்து, எம்., 7.10.1984, கத்தாளம்பட்டி
37. சிவசங்கரன், 21.9.1984, சென்னம்பட்டி
38. சித்தமல்லு, கோ., 23.8.1984, திருமங்கலம்
39. சிதம்பரம், சொ., 8.9.1984, புதூர்
40. சீனியம்மாள், கே., 5.10.1984, சுப்புலாபுரம்
41. சீனிவாசகன், நு., 3.9.1984, நாகலாபுரம்
42. சீனியம்மாள், நு., 3.9.1984, மேலக்கல்லூரணி
43. சுக்காநாயக்கர், 14.9.1984, சின்னவநாயக்கன்பட்டி
44. சுப்புராஜ், 5.10.1984, சுப்புலாபுரம்
45, சுந்தரம், 10.9.1984, மேல்மாந்தை
46. சென்னப்பன், செ., 14.9.1984, கோவில் குமாரெட்டையாபுரம்
47. செண்பகராமன், 18.9.1984, பிள்ளையார்நத்தம்
48. செல்வராசு, பொ., 14.10.1984, நல்நாதுநாயக்கன் பட்டி.
49. சேது, இரா., 13.9.1984, ரெட்டியபட்டி
50. சேதுராமலிங்கம், எஸ்., 11.9.1984, குருவார்பட்டி
51. ஞானசேகரன், எஸ்., 15.8.1984, வில்வமரத்துப்பட்டி
52. தங்கவேலு, ஆர்., 5.10.1984, தாப்பாத்தி
53. தம்மணப்பன், 1.10.1984, வெம்பூர்
54. தனுக்கோடி, 5.9.1974, அருங்குளம்.
55. தம்பா முதலியார், 15.10. 1984, பள்ளிவாசல்பட்டி
56. துரைராஜ், சி., 9.8.1684, வைப்பார்
57. துளசிராமன், வெ., 3.10.1984, மேலக்கல்லூரணி
58. தெட்டராயன், தொ., 3.10.1984, மேலக்கல்லூரணி
59. நகுலன், 10.9.1984, வீரகாஞ்சிபுரம்

60. நகுலன், மு., 6.10.1984, அரியநாயாகிபுரம்
61. பால்ராஜ், மா., 5.9.1894 வேம்பார்
62. பாலுச்சாமி, 10.9.1984, கே. சக்கணாபுரம்
63. பாலகிருஷ்ணன், 11.9.1984 கரிசல்குளம்
64. பாரதி, வி., 15.8.1984. இடைச்சியூரணி
65. பாண்டியராசன்,16.9.1984 அழகாபுரி
66. பிச்சையாசாரி, ஆர்., 9.8.1984, வைப்பார்
67. பெத்துநாயக்கர், 6.9.1984, பேரிலோவன்பட்டி
68. பெருமாள்சாமி, 10.9.1984, குரங்குடி
69. பேச்சிமுத்து, 6.9.1984, ரெகுராமபுரம்
70. பொன்னுராமு, ச.,15.8.1984 கீழ்க்கல்லூரணி
71. போத்திரெட்டி, ஆர்., 20.9.1984, சின்னையாபுரம்
72. முத்துச்சாமி, 2.10.1984, அப்பணசாமிமடம்
73. முத்தையா, கே., 9.9.1984, நம்பிபுரம்
74. முருகன், ச., 7.10.1984, வள்ளிநாயகிபுரம்
75. முருகன், வே., 7.9.1984, வீரபாண்டியபுரம்
76. மூக்கன், 6.9.1984, சிங்கிலிப்பட்டி
77. வாழவந்தான், ஏ., 15.10.1984,பள்ளிவாசல்பட்டி
78. விராடராஜன், 20.8.1984, கோடாங்கிபட்டி
79. வெள்ளைச்சாமி, சி., 5.10.1984
80. வேலாண்டி, 10.9.1984, மேட்டுப்பட்டி
81. வேலு, கொ., 1.10.1984, நமச்சிவாயபுரம்
82. வையக்கவுண்டர், 16.8.1984, மாவில்பட்டி

# சிறப்புப் பெயர் அகராதி